உ

சிவமயம்.

யாழ்ப்பாணத்துத் திருநெல்வேலி

# ஞானப்பிரகாச முனிவர்.

(வரலாறு)



சென்னை:

**வித்தியாநுபாலனயந்திரசாலையில்**

பதிப்பிக்கப்பட்டது.

1953.

# சிறப்புரை.

தென்பரதகண்டம் சிவனடியார் அறுபத்துமூவரை உடையது. எமது நாடாகிய யாழ்ப்பாணம் சிவனடியார் இருவரை உடையது. இவர்களுட் பிந்தியவராகிய நாவலர் பெருமானுடைய திருச்சரிதை அநேகரால் எழுதப்பட்டது. நாவலர்பெருமானுலே துதிக்கப்பட்டவரும் "பூரணசிவாநுபூதிமான்" என்று சங்கரபண்டிதராலே கணிக்கப்பட்டவருமாகிய ஞானப்பிரகாச முனிவரது திருச்சரிதையையும் யாம் அறிதல் இன்றியமையாததாம். அவருடைய திவ்விய சரித்திரத்தை இப்போது எமக்கு எழுதித்தந்தவர்கள் சைவத்தொண்டையே பொழுது போக்காகக் கொண்ட திருமயிலை ஸ்ரீமத். சே. வெ. ஜம்புலிங்கம்பிள்ளையாவர். இதற்காக எமது வணக்கம் அவர்களுக்கு என்றும் உரியதாம்.

கந்தவனம்
விரோதி பங்குனி 10௳

சு. சிவபாதசுந்தரம்.

# ஞானப்பிரகாச முனிவர்.

இற்றைக்கு 370 ஆண்டுகளுக்கு முன்னர் யாழ்ப்பாணத்து நல்லூர்க் கோட்டத்தைச் சேர்ந்த திருநெல்வேலி என்னும் கிராமத்தில் ஞானப்பிரகாசர் எனப் பெயரிய ஓர் சைவசிகாமணி இருந்தார். பாண்டிமழவர் குடியில் வந்தவர். பரம்பரைச் சைவவேளாளர். அதிகாரம் செல்வம் கல்வி முதலியவற்றோடு விளங்கியவர். தந்தையார் பெயர் காராளபிள்ளை எனக்கூறுப. நாவலர் பெருமானின் மூதாதையருள் ஒருவரென நாவலர் சரித்திரம் அறிவிக்கின்றது. இவர் காலத்தில் இலங்கையை அரசாட்சி செய்த பறங்கியர் (Portuguese) மதவெறியால் உந்தப்பட்டுப் பல அக்கிரமங்களைப் புரிந்தனர். அவற்றுள் திருக்கோணமலை, நல்லூர் முதலிய இடங்களிலிருந்த சிவாலயங்களையும் அநுராதபுரத்திலிருந்த பல சிற்ப மாளிகைகளையும் இடித்து ஒழித்தமை எடுத்தியம்பற்பாலது. இஃதன்றி ஒவ்வொரு குடித்தனக்காரனும் முறைபாடாகத் தினமொரு பசுவைத் தங்கள் அதிகாரிக்கு மாமிச உணவிற்காகக் கொடுத்தனுப்ப வேண்டுமென்று கட்டளையிட்டிருந்தனர். அக்கட்டளையின்படி ஞானப்பிரகாசர் முறைவந்தது. அவர் அப்பாவச் செயலுக்குப் பயந்து முறை நாளுக்கு முன் இரவே ஊரைவிட்டுப் புறப்பட்டு வேதாரணியமார்க்கமாக இந்தியாவிற்குச் சென்றனர். பிறகு, அப்பமூர்த்திகள் முத்தியடைந்த திருப்புகலூரைப் புகலிடமாகக்கொண்டு அவ்வூர்மேவிய புண்ணியமூர்த்தியை முப்பொழுதும் திருமேனி தீண்டிப் பூசிக்கும் தவமுதல்வராயிருந்த பெரிய அண்ணுசாமி சிவாசாரியரென்பவரிடம் சிவதீக்ஷை பெற்றுச் சிதம்பரத்தை அடைந்தார். அங்கே ஓருமண்டலகாலம் தேவி உபாசனை புரிந்தார். சிவகாமித்தாயார் திருவருட் பாங்கின்படி, சில நாட்கள்

கழித்து கௌடமெனப்படும் வங்காள தேசத்திற்குச் சென்றார்.

அங்கே வடமொழியிற் பெரும் பாண்டித்தியமுடைய ஓர் பிராமணச் சந்நியாசியைக் கண்டார். அவர் தமது மாணவர்களுக்குத் தினந்தோறும் தர்க்கம், மீமாஞ்சை, வியாகரணம் ஆகிய சாத்திரங்களைப் போதித்துவந்தார். அப்பாடங்களை ஞானப்பிரகாசர் தூரநின்று தவறவிடாமல் அவதானித்து வந்தார். ஆசிரியர் தமது மாணவர்களைப் பரீக்ஷித்தார். அவர்கள் சரியான விடை பகரவில்லை. இவரைப் பிறகு பரீக்ஷித்தார். இவரது விடை ஏற்றதா யிருந்தது. அதை யறிந்த ஆசிரியர் இவரையும் மாணவர் கூட்டத்திற் சேர்த்துக்கொண்டு பல நூல்களைக் கற்பித்தார். இப்படி ஒருவருடம் கழிந்தபின், இவர் பேராற்றலுடையவ ராகக் காணப்பட்டார். இதை யறிந்த ஆசிரியர் இவரைத் தென்னாட்டுக்குத் திரும்பிச் சென்று அங்கே வேண்டிய நூல்களைத் தாமே இயற்றலாமென்று பணித்தார். அவ்வாணையைச் சிரமேற்கொண்டு தென்னாட்டுக்கு வந்து இப்போது குன்றக்குடியிலுள்ள திருவண்ணாமலை ஆதீனத்துத் தலைவரை அடுத்து அம்மடத்திற் சந்நியாசம் பெற்றுச் சிவாகமங்களைக் கசடறக் கற்றுணர்ந்தார். அம்மடத்தி லிருந்தபோதே தமிழிற் சிவஞான சித்தியாருக்கு ஓர் சுருக்கமான உரையும், சம்ஸ்கிருதத்தில் பௌஷ்கராகம விருத்தசித்தாந்தசிகாமணி, பிரமாணதீபிகை, பிராசாத தீபிகை, அஞ்ஞான விவேசனம், சிவயோகசாரம், சிவயோகரத்தினம், சிவாகமாதிமான்மிய சங்கிரகம், ஓமாத்திரிகற்பம் முதலிய நூல்களும் இயற்றினார்.

பிறகு, சிதம்பரத்திற்கு வந்து அங்கே தங்கியிருந்து சிவகாமசுந்தரி கோயிற் றிருப்பணி செய்வாராயினர். பின்பு

தமக்குக் கிடைத்த புதையலைக்கொண்டு ஞானப்பிரகாசம் என்னும் குளத்தைத் தோண்டுவித்தார். அக்குளத்தின் சமீபத்தில் இவர் பெயரால் ஓர் மடமும் உளது. [இவ் விரண்டும் நல்ல நிலையில் இல்லை. இவற்றைச் சீர்ப்படுத்த வேண்டியது எமது கடனாகும்.] இவர் சிதம்பரத்திலேயே தமது அந்திய காலத்தைக் கழிக்கலானார். ஓர் பங்குனி மாசப் பூசத்தில் நிஷ்டைகூடிச் சிவபதமடைந்தார். இவருடைய சமாதி ஞானப்பிரகாசக் குளத்திற்குச் சமீபத்திலுளது.

முனிவர் தமிழில் இயற்றியது சிவஞானசித்தியாருரை ஒன்றே. இது மறைஞானதேசிகர், சிவாக்கிர யோகிகள் ஆகிய இருவரின் உரைகளுக்குப் பிந்தியது. நிரம்ப அழகிய தேசிகர், சிவஞானயோகிகள் உரைகட்கு முந்தியது. இவ்வுரை சுருங்கச்சொல்லல், விளங்கவைத்தலென்னும் இலக்கணமுடையது. அதன்கண் காமிகம், வாதுளம், மதங்கம் முதலிய சிவாகமங்களும், தொல்காப்பியம், ஞானாமிர்தம், கோயிற்புராணம் முதலிய தமிழ் நூல்களும் பிரமாணமாகக் காட்டப்பட்டிருப்பதால், இவர் இருமொழிகளிலும் வல்லுநர் என்பது பெறப்படுகின்றது. இவருடைய சித்தியாருரை பின்வருமாறு சிறப்பிக்கப்பட்டுளது:—

சொல்லி னுவிற் றுரிசறுஞ் சோத்திரத்
தொல்லு மேற்சிவ ஞான முதித்திடுஞ்
செல்லு மெய்யரு ணந்திசெய் சித்திக்கு
நல்ல ஞானப்ர காசன விற்றுரை

இவ்வுரையைத் தழுவிக் கொழும்பு - மு. திருவிளங்கம் என்பவர் சில ஆண்டுகளுக்கு முன்னர் ஓர் அரிய விளக்கவுரையைச் சித்தியாருக்கு எழுதி வெளியிட்டார்.

முனிவரின் சித்தியாருரை முதன் முதல் இணுவில் நடராச ஐயரால் 1887 - ல் அச்சிடப்பட்டது. பிறகு சென்னை - சண்முகசுந்தர முதலியாரால் 18—8—89-ல் மற்றைய ஐந்து உரைகளோடு சேர்த்து அச்சிடப்பட்டது. சில ஆண்டுகளின் பிறகு, வதிரி-வித்துவான். சி. தாமோதரம் பிள்ளையால் தனியாகச் சில குறிப்புரையுடன் அச்சிடப் பட்டது. இப்போது இம்மூன்று பதிப்புப் பிரதிகளும் திருவிளங்கத்தேசிகர் உரையும் கிடைப்பதருமை. ஆகவின் முனிவரது சித்தியாருரையைத் தற்காலத்திற்கேற்ற விளக்கக் குறிப்புக்களுடன் அச்சிடவேண்டியது அவசியம். அவரது வடமொழிச் சிவஞானபோத விருத்தியுரையையும் தமிழில் மொழிபெயர்த்து அச்சிடுவது நலம். இப்போது யாம் உடனே செய்யத்தக்கது அவரது சித்தியாருரையைக் குறிப் புரையுடன் அச்சிடுவதேயாம். அதுவே அப்பெரியாரது ஞாபகச் சின்னமாக விளங்கும்.

முனிவர் இயற்றிய வடமொழி நூல்களிற் சிவஞான போதவிருத்தி, சித்தாந்தசிகாமணி, சிவயோகரத்னம், சிவ யோகசாரம் ஆகிய நான்கும் 1927-ம் ஆண்டில் முனிவரின் வழித் தோன்றலாகிய த. கைலாச பிள்ளையவர்களால் வெளி யிடப்பட்டன; அவை எம்போன்ற வடமொழிப் பயிற்சி யில்லாதவர்களுக்குப் பயன்படுவதில்லை. சிவகீதையைத் தமிழ் மொழிபெயர்ப்போடு அச்சிட்ட கைலாசபிள்ளையவர்கள் இந்நான்கு நூலையும் தமிழ் மொழிபெயர்ப்போடு அச் சிடாது விட்டது வருந்தத்தக்கது. முனிவரின் சித்தியா ருரையையும் மற்றைய வடமொழி நூல்களையும் நீர்வேலிச் சங்கர பண்டிதர் பெரிதும் போற்றியதாகத் தெரியவருகிறது. முனிவரது சித்தியாருரையை அவர் 'ஞானப்பிரகாசியம்'

னென்னும் பெயரோடு அச்சிட எண்ணி யிருந்ததாகவும், அவ் வெண்ணம் நிறைவேறும் முன்னர் இறந்துபோனதாகவும் அறியக் கிடக்கின்றது.

முனிவருடைய சீடர் வரணி - தில்லைநாதத் தம்பிரான் என்னும் சிவதொண்டர். இத்தம்பிரானுர் பல சிவதொண்டு களை வேதாரணியத்தில் ஆற்றியுள்ளார். வியாக்கிரபாத புராணம் பாடிய அளவெட்டி - வைத்தியநாத முனிவரும் நமது ஞானப்பிரகாசர் காலத்தவரென்பர். அவரும் தமது பிற்காலத்தைச் சிதம்பரத்திலேயே கழித்தவர்.

ஆசிரியர் ம. க. வேற்பிள்ளையவர்கள் இயற்றிய ஈழ மண்டல சதகத்தில், ஞானப்பிரகாச சுவாமிகள் வரலாறு பின்வருமாறு தொகுத்துக் கூறப்பட்டுள்ளது:—

சீர்மேவி யாழ்ப்பாண திருநெல்வே லியிலியாஞ்
செய்தவ மெனுவுதித்தான்
சிந்தும் பழிக்குவெந் துயருழந் தஞ்சிநந்
தேயமக லுஞ்சிந்தையான்
ஏர்மேவு யௌவனத் தெரிகுளிக் குங்கற்பி
னேந்திழையை யுங்கதறவிட்
டெய்திச் சிதம்பரத் திறையிறைவி தாள்புக்கோ
ரேழேழு நாளுபவசித்
தூர்மேவு கௌடத்தே முமையம்மை யருளுந்த
வுற்றுரியக் கடல்கடந்
தும்பர்குரு வின்மகா பண்டிதனு மாய்ச்சனன்
முற்றபய னுறவுமையருட்
சார்மேவு சைவத் தனித்துறவி யாயினன்
சாந்தநா யகிசமேத

சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுரதல வாசனே. (1)

ஆயசிவ யோகிபின் றில்லைமா நகரடைந்
தம்மையப் பரையடிதொழு
தானந்த வெள்ளத் தமிழ்ந்தியக் கினிதிக்
கடைந்தயர் மடாலயத்துட்
போயரிய நிட்டையி லிருக்குநா ளிற்புதையல்
புவியிற் புலப்படுதலும்
புனிதனிக் தாட்சொல்லி யென்றஞ்சி யாப்பிகோடோர்
புரையுட் புதைத்தகறலும்
தூயகோ முட்டியொரு வன்முன் புதைத்தது
துறந்துபோ னுன்மறந்தே
துனைவிஞே டோடிவந் தனையதங் கின்மையிற்
றுயருழந் தலறினுன்சேர்
தாயகம தாகுமுன் சரணகம லந்தருதி
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே. (2)

அழுகுரல் செவிக்கொடங் கையன்வெய் தினினெய்தி
யாற்றியவ லமதறைகென
வாதியந் தஞ்சொல்லு மவனைவா வென்றழைத்
தாப்பியி தகற்றுகெனுமப்
பொழுதவ னகற்றியப் புதையல்கண் டகமகிழ்வு
பொங்கியம் முனிபொன்னடி

போற்றிமு வுலகினின் போலுமுண் டோஞானி
புதையலினி நின்னதேயான்
விழுமியசெல் வத்தினேன் கைக்கொளிக் கிழியென
விரத்திகோ டன்மறுப்ப
விமலநின் பெயராலோர் குளமிங் கமைத்தியென
விட்டது விரைந்தேகினுன்
தழுதழுத் தழுதுதொழு தாசர்தந் தாசநஞ்
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
• சந்த்ரபுர தலவாசனே. (3)

இத்திரவி யங்கொடிம் முனிவர்மு னியற்றியிடு
ஞானப்பிர காசகுளமே
யாமுன் னிசைத்தகுள மினையதிங் கில்லையேல்
யாதுசெய்வா ரீண்டுளோர்
சுத்தசிவ காமியொரு வற்சரத் தொருதினஞ்
சூழ்கரை தவத்தினமர்வாள்
சோதியுந் தேவியுந் தெப்போற் சவங்கொள்வர்
சுற்றிலுந் திருமடமுறும்
நித்தநிய மத்தொழி னிரப்புமுர்த் தீக்கிதரு
நீடுமந் தணரனைவரு
நிகரின்மா கேசுரரு மிவர்கள்பன் னியருமிந்
நீர்நிலையி னின்றுமகலார்
சத்திசிவ காமிகோ யிலுமமைப் பித்தவர்
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுரதல வாசனே. (4)

கமது முனிவர்,

"எவ்வுயிருந் தன்னுயிர்போல் எண்ணுந் தபோதனர்கள்
செவ்வறிவை நாடிமிகச் சிந்தைவைப்ப தெந்நாளோ."

என்னுந் தாயுமானவர் பாடலுக்கு உதாரணமாக விளங்கியவ ரென்று கூறலாம். இத்தகைய பெரியோர்களின் அருஞ் செயல்களைப் போற்றுவதோடமையாது அவற்றை யாம் பின்பற்றி எமது வாழ்நாளைப் புனிதப்படுத்துவோமாக. அவ ருடைய குரு பூசையையும் நடத்தவேண்டிய ஏற்பாடு செய்தல் உசிதம். சிதம்பரத்திற் சிறப்பாகவும், திருநெல் வேலியில் சாதாரணமாகவும் நடத்தலாம்.

**சபையார் இப்போது செய்யக்கூடிய கருமங்கள்:**

(1) முனிவருடைய சரித்திரத்தை வெளியிடுதல்.

(2) அவருடைய குருபூசைத் தினத்தை (பூச நட்சத் திரம்) மாதந்தோறும் கொண்டாடுதல். சிறிய அளவில் பூசை இயற்றல்.

(3) பங்குனிப் பூசநன்னாளை விசேஷமாகக் கொண் டாடுதல்.

(4) முனிவரது சித்தியாரின் உரையை அச்சிடுதல்.

(5) முனிவர் இயற்றிய நூல்களையெல்லாம் தேடிக் கண்டு காப்பாற்றி வைத்தல். பிறகு சமயம் வாய்க்கும்போது ஒவ்வொன்றாக வெளியிட முயற்சி செய்தல்.

(6) முனிவரின் மடத்தையும் குளத்தையும் (சிதம் பரத்திலுள்ளவை) நல்ல நிலைமைக்குக் கொண்டு வருதல்.

(7) முனிவருடைய சமாதிக்கும் பூசை புரிவித்தல் முதலியன.

# ஞானப்பிரகாச முனிவர் உருவப் பிரதிட்டை.

## சிதம்பரத்தில் ஆனிஉத்திர வைபவம்.

(29 - 6 - 1952.)

திரு. சே. வெ. ஜம்புலிங்கம்பிள்ளை எழுதியது.

ஞானப்பிரகாச முனிவர் யாழ்ப்பாணத்துத் திருநெல்வேலியில் 375 ஆண்டுகளுக்கு முன் விளங்கிய ஓர் பரம ஞானி. ஆறுமுகநாவலரின் குடும்பத்தைச் சேர்ந்த முன்னோர்களில் ஒருவர். சீவகாருண்ய சிகாமணியாகிய இப்பெரியார் பறங்கியர்களின் கொடுங்கோல் ஆட்சியை நிராகரித்து இந்தியாவிற்குச் சென்று அங்கே துறவுபூண்டவர். சமஸ்கிருதத்திலும் தமிழிலும் புலமையுள்ளவர். தமிழில் சிவஞானசித்தியாருக்கு ஓருரையும் வடமொழியில் பல ஆகம நூல்களும், சிவஞானபோதத்திற்கு (வடமொழி) விருத்தியுரையும் இயற்றியவர். திருவண்ணாமலை மடத்திற் காஷாயம் பெற்றுச் சிதம்பரத்திற் பலகாலம் வசித்து அங்கே சிவகாமியம்மை கோயில் கட்டுதல், ஞானப்பிரகாசக்குளம் வெட்டல் முதலிய பெருந்திருப்பணிச் சிவதர்மங்களில் ஈடுபட்டு அப்புண்ணிய தலத்திலேயே சிவபதமடைந்தவர்.

இப்பெரியாரது உருவத்தை எமது நண்பரும், நாவலர் தரும பரிபாலன கர்த்தருமாகிய முதலியார். க. சுப்பிரமணியம் அவர்கள் தமது சொந்தச் செலவில் புதிதாகச் செய்து

அதனை ஞானப்பிரகாசக் குளத்தின் வடகரையிலுள்ள சேக்கிழார் கோயிலில் சென்ற நந்தன வருட ஆனித் திருவுத்தர நன்னாளாகிய ஞாயிற்றுக்கிழமை காலை 9-மணிக்கு (29-6-52) ஸ்தாபித்துக் கும்பாபிஷேகம் முதலிய ஆகமக் கிரியைகளைப் புரிவித்துத் தினபூசைக்குக் கட்டளை ஏற்படுத்தியுள்ளனர். அவ்விழாவைத் தரிசிக்கப் பல சிவனடியவர்கள் வந்து குழுமித் தேவார பாராயணம் முதலிய சிவ தொண்டாற்றினர். இச்சிவ கைங்கரியத்தைப் புரிந்த நண்பர் **க. சுப்பிரமணியம்** அவர்களின் அன்பின் பெருக்கு மிகவும் பாராட்டத் தக்கது. நாவலர் அறநிலையப் பாதுகாவலராக இவர்கள் வந்த பிறகு பல சீர்திருத்தங்கள் செய்யப்பட்டுள்ளதைக் காணலாம். நாவலர் அறநிலைகளைப் பாதுகாக்கத்தக்கவர் இவரைப்போல் வேறொருவர் கிடைப்பது அருமையினும் அருமை யென்று யான் உறுதியாகக் கூறுவேன். இவர்களுடைய உண்மைக் குணமும் சிவபக்தியும் போற்றற்பாலன. "போம்போ தருந்துணைபுரிந்த புண்ணியம்" என்பதை நன்கறிந்து அதற்கேற்ப ஒழுகுபவர் இவராவர்.

சிதம்பர தரிசனத்திற்கு வரும் சிவநேயர்கள் தொண்டர்சீர் பரவுவாராகிய சேக்கிழாரையும் சிவகாருண்ய சிவசொரூபியாகிய ஞானப்பிரகாச வள்ளலாரையும் அவரது ஞானப்பிரகாச தீர்த்தத்தையும் தரிசித்தல் பெரும் புண்ணியமாம்.

**"எவ்வுயிருந் தன்னுயிர்போ லெண்ணுந் தபோதனர்கள்**
**செவ்வறிவை நாடிமிகச் சிந்தைவைப்ப தெந்நாளோ."**

—தாயுமானவர்.

திருச்சிற்றம்பலம்.

# பிரகடன பத்திரம்.

| | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|
| கந்தபுராணம் செய்யுள் | 8 | 0 | 0 |
| கந்தபுராணம் வசனம் | 5 | 0 | 0 |
| பெரியபுராணம் சூசனத்தோடு | 5 | 0 | 0 |
| பெரியபுராண வசனம் | 2 | 8 | 0 |
| திருவள்ளுவர் பரிமேலழகருரை | 5 | 0 | 0 |
| திருவிளையாடற் புராணம் | 3 | 8 | 0 |
| திருவிளையாடற்புராண வசனம் | 2 | 0 | 0 |
| நாவலர் பிரபந்தத்திரட்டு | 2 | 0 | 0 |
| அருட்பா—இது அகத்தியர் தேவாரத்திரட்டும் திருவாசகமும் திருவிசைப்பாவும் திருப்பல்லாண்டும் பெரியபுராணச் செய்யுட்டிரட்டும் அடங்கியது. | 1 | 12 | 0 |
| ஆறுமுகநாவலர் சரித்திரம் | 1 | 4 | 0 |
| கோயிற்புராணவுரை | 1 | 4 | 0 |
| சைவசமயநெறியுரை | 1 | 4 | 0 |
| பதினொராந்திருமுறை | 1 | 4 | 0 |
| திருவாசகம் | 1 | 4 | 0 |
| திருமுருகாற்றுப்படையுரை | 0 | 5 | 0 |
| சிதம்பரமான்மியம் | 0 | 3 | 0 |
| சிதம்பரமும்மணிக்கோவை | 0 | 3 | 0 |
| சிவாலயதரிசனவிதி | 0 | 3 | 0 |
| நித்தியகருமவிதி | 0 | 2 | 0 |
| முதற்சைவவினாவிடை | 0 | 3 | 0 |
| இரண்டாஞ்சைவவினாவிடை | 0 | 10 | 0 |

**ஸ்ரீலஸ்ரீ. ஆறுமுகநாவலரவர்கள்,**

**வித்தியாநுபாலனயந்திரசாலை,**

நெ. 300, தங்கசாலைவீதி, சென்னை.

# மாணிக்கவாசகர் புராணம்

சே. வெ. ஜம்புலிங்கம் பிள்ளை.

## உள்ளுறை

உ

சிவமயம்

# பதிப்புரை

" போதவூர் நாடறியப் புத்தர்தமை வாதில்வென்ற
வாதவூர் ஐயன்அன்பை வாஞ்சிப்ப தெந்நாளோ "

சைவசமயாசாரியராகிய மாணிக்கவாசக சுவாமிகள் புராண வசனமாகிய இச்சிறுநூல் இற்றைக்கு அறுபது ஆண்டுகளுக்கு முன் சென்னையிற் நிகழ்ந்த திராவிடவர்த்தன சபையினர் வேண்டுகோளின்படி யாழ்ப்பாணத்துப் புலோலி - மகா வித்துவான் வ. கணபதிப் பிள்ளையவர்களால், பெரும்பாலும் வடமொழி ஆலாசிய மான்மியத்தைத் தழுவியும் ஒரு சிறிது தமிழ்த் திருவிளையாடற் புராணம், திருவாதவூரர் புராணம் முதலியவற்றை ஆதாரவாகக் கொண்டும் 1875ஆம் ஆண்டில் எழுதி அச்சிற் பதிப்பிக்கப்பட்டது. இது அக்காலத்தில் விளங்கிய சொர்க்கபுர ஆதீனத்தைச் சேர்ந்த இராமலிங்கத் தம்பிரான் முதலிய சைவாசாரியர்களால் பெரிதும் பாராட்டப்பட்டது.

இவ்வித்துவப் பெரியார் எழுதிய மற்றோர் வசனநூலாகிய வில்ஹணீயத் தமிழ் மொழிபெயர்ப்பை, யான் 1928ஆம் ஆண்டில் அச்சிட்டேன். அப்போதுதான் இப்புராண வசனமும் இவரால் எழுதி அச்சிட்டிருப்பதாக அறிந்தேன். வித்துவானின் தமிழ்வசன நடை சாலச்சிறந்ததாகக் காணப்பட்டமையாலும், மணிவாசகப் பெருமானர் சரித்திரத்தை விரிவாகக் கூறும் நல்ல வசனநூல் வேறின்மையாலும், இதனை மீட்டும் அச்சிடக் கருதிப் பிரதிக்காகப் பலவிடங்களில் அதுமுதல் முயன்றும் கிடைத்திலது.

இவ்வாறு திகைப்புற்ற காலத்து, மகா வித்துவானின் தமையனார் குமாரரும், சைவசமய பரிபாலனமே பொழுது

போக்காகக் கொண்டவரும், என் அதிப் பிரிய நண்பருமாகிய **ஸ்ரீமத் சு. சிவபாதசுந்தரம் பிள்ளையவர்கள்,** ஒரு பிரதி, சென்ற பங்குனி மாதமே அனுப்பி யுதவி புரிந்தனர். அப்பிரதியைக் கொண்டு இப்பதிப்பைத் தற்காலத்திற்கேற்ற கடினசந்தி நீக்கம் போன்ற சில மாற்றங்கள் புரிந்து, அரும்பத விளக்க அகராதி, நூலாசிரியர் சரித்திரக் குறிப்பு, சுவாமிகள் திருவுருவப்படம் முதலியன புதுவதாகச் சேர்த்து வெளியிடலானேன்.

இந்நூலாசிரியர், சம்ஸ்கிருதத்திலும் தமிழிலும் ஒருங்கே பெரும்பாண்டித்தியம் படைத்தவராதலாலும், அவர் இருந்த காலத்தில் தமிழ்ப்பண்டிதர்களால் மணிப்பிரவாள நடையே கையாளப் பெற்றிருந்தமையாலும் இவருடைய வசனங்களில் வடமொழிச் சொற்பிரயோகம் பல்கியிருப்பது நூதனமன்று. தமிழ் வசனங்களிற் சிறந்ததாகக் கருதப்படும் தாண்டவராய முதலியார் எழுதிய பஞ்சதந்திரத்தையும் நோக்குக.

இது, ஆறுமுக நாவலருடைய பெரியபுராண வசனத்திற்கு அனுபந்தமாகத் திகழவேண்டுமென்பது கருதி எழுதப்பட்டதாகும். அது முதற்பதிப்பின் முகவுரையிலுள்ள பின்வரும் வாக்கியங்களால் அறியலாம் :—

“சைவ சமயத்திற்குப் பிரதான குரவர் நால்வருள் ஒருவராகிய திருவாதவூரடிகளது திருச்சரிதம் தமிழிலும் சம்ஸ்கிருதத்திலும் பத்திய ரூபமான பிரபந்தங்களுள் அடங்கியிருக்கின்றது. ஆயினமையின் அது கலைவல்லார்க்கேயன்றி ஏனையோர்க்குச் சுலபமாய்ப் புலப்படாது. சிவனடியார்களாகிய அறுபத்துமூன்று நாயன்மாரது திருச்சரித்திரத்தைச் சைவசித்தாந்த சாகரத்தை நன்கு பருகியவரும், பரமத திமிர பாஸ்கரரும் சைவமென்னும் செஞ்சாலி வளர வேதாகம பிரசங்கமாகிய மழைபொழியும் காலாம்புதமும், அதுல்ய வித்துவ சூடாமணியும், திரவியத்தைத் திரணமாகக் கருதி, ‘சிவபெருமானது திருப்புகழைப் பிரவிஸ்தீரணம் செய்தலே விநோதமாகக் கொண்ட மகானுபாவருமாகிய ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலரவர்கள்

கத்திய ரூபமாக இயற்றித் தமது பரோபகார சிந்தையினை விளக்கினர். ஆதலின் ஜன்ம சாபல்யம் அபேக்ஷித்த சைவர்கள் யாவரும் அம்மகானுபாவரது பெரியபுராண வசனமாகிய ஔஷ தத்தை யுண்டு, பவரோகம் தீர்ந்து சிவலோகசுகம் அடைகின் றனர். அறுபத்துமூன்று நாயன்மாரது திருச்சரித்திரத்திற்குச் சமமுடைத்தாய திருவாதவூரடிகள் சரித்திரமும் கத்திய ரூப மாகவே யிருப்பின், அது சைவசமயப் பெண்களுக்கும் பாலர் களுக்கும் ஏனையோர்க்கும் பிரயோசனமுடைத்தாய் இருக்கு மென்பதைக் கருதி * * * யாவர்க்கும் புலப்படும் வசன நடையில் விளக்கினேன்."

இச்சிவபுராணத்தை அச்சிட அனுமதிதந்தும், பிரதி யுதவியும், அச்சிடுங்கால் ஒப்புநோக்கி இன்றியமையாத் திருத் தங்கள் பல புரிந்தும், கடின வடமொழிப் பதங்களுக்கு விளக்க மெழுதி யுபகரித்தும், பெருந்துணை புரிந்த **சிவபாத சுந்தரம் பிள்ளையவர்களுக்கு** யான் செய்யுங் கைம்மாறு யாதுளது? திரு வாதவூர்த் திருக்கோயிலின்கணுள்ள சுவாமிகள் திருவுருவப் படம், அன்பர் சீகாழி - **சிவ - கண்ணுசாமிப் பிள்ளை** யவர்கள் பெருமுயற்சியாற் கிடைத்தது.

இக்காலத்திற்கு ஏற்றது வசன நூலாதலால் மகாவித்துவான் எழுதிய இரகுவமிசம் முதலிய ஏனைய நூல்களை அச்சிட்டு வெளியிடவேண்டு மென்பது எனது வேணவா. திருவருள் துணை நிற்பதாக.

**நமச்சிவாய வாழ்க! நாதன்தாள் வாழ்க!!**

திருமயிலை
ஸ்ரீமுக, கார்த்திகை.

சே. வெ. ஜம்புலிங்கம்.

மகா வித்துவான்

# வ. கணபதிப் பிள்ளை

# சரித்திரச் சுருக்கம்

இவர் யாழ்ப்பாணத்துப் புலோலியைச் சேர்ந்த சைவ வேளாள குலத்திலே கல்வி செல்வம் முதலியவற்றிற் சிறப்புற்ற ஒருநல்ல குடும்பத்திலே தோன்றிய வல்லிபுரநாத பிள்ளை என்பவரின் புதல்வர் மூவருள் இடையினர். கவிசிரேஷ்டராய் விளங்கிய உடுப்பிட்டி - சிவசம்புப் புலவரிடம் தமிழ் இலக்கிய இலக்கணம் நன்கு கற்றவர். தமிழிலே பாண்டித்தியம் அடைந்த பின்பு, சென்னைக்குச் சென்று அங்கே ஆங்கிலமும் சம்ஸ்கிருதமும் பயின்று, சென்னைச் சர்வகலாசாலைப் பிரவேச பரீக்ஷையிற் சித்திபெற்றனர். பின்னர், சம்ஸ்கிருதக் கல்வியிலே ஆர்வம் மிக அத்துறையிலேயே முழு மனதையுஞ் செலுத்தி அதிற் பெரும்புலமை எய்தினர்.

பிறகு நெடுங்காலம் காஞ்சீபுரத்துப் பச்சையப்ப வித்தியாசாலைத் தமிழ்ப்பண்டிதராக விளங்கி யிருந்தார். அதன் பின்னர்த் திருவனந்தபுரத்து மகாராஜா கல்லூரிப் பிரதம தமிழாசிரியராக நியமிக்கப்பட்டார். அங்கே தமிழ்ப்புலமை நடாத்திவரும் நாளிலே, 1895ஆ நவம்பர்மீ ஏகாதசியிலே சிவபதமடைந்தனர்.

இவர் இயற்றிய நூல்கள் பெரும்பாலும் வடமொழி நூல்களைத் தழுவினவைகளே. அவற்றுள் தெரிந்தவை :—

## தமிழ்

(1) வில்ஹணீயம்
(2) இரகுவமிசச் சுருக்கம்
(3) மாணிக்கவாசகர் புராணவசனம்
(4) இந்திரசேனை நாடகம்

(5) இரகுவமிச சேர்மொழி பெயர்ப்பு
(6) மார்க்கண்டேய புராணம் .
(7) வேதாரணியேசுரர் ஊஞ்சற்பதிகம்
(8) தருக்க சாஸ்திர வினாவிடை
(9) பதப்பிரயோக விவரணம்

## சம்ஸ்கிருதம்

(10) சம்ஸ்கிருத பிரதம வாசக புஸ்தகம்
(11) ,, துவிதீய ,,
(12) சந்திதர்ப்பணம்
(13) வியாகரண சங்கிரகம்
(14) சப்தகுசும மாலிகா
(15) தாதுரூபதரிசினி
(16) கங்காநதி பிரவாக மகமாநு வர்ணனம்

இவற்றுட் பல அச்சிடப்படவில்லை.

பிள்ளையின் மாணாக்கருட் சிறந்தோர் தம்பியாராகிய புலோலி - குமாரசாமிப் புலவரும், தங்கையாராகிய பார்வதியம்மையாருமாவர். குமாரசாமிப் புலவர் இலக்கண வன்மையிற் சிறந்தவர். அதற்கு அவர் எழுதிய நன்னூற் காண்டிகையுரை விளக்கமே சான்றாகும். புலவர் 1926ஆம் சிவபதமடைந்தனர். தங்கையார் இலக்கிய அறிவிற் சிறப்புற்றவர். அவரது மாணவியர் இருவர் மதுரைத் தமிழ்ச்சங்க பண்டித பரீக்ஷையிற் சித்திபெற்றிருப்பது அவ்வம்மையாரின் புலமையைக் காட்டும்.

மொழிநூலாசிரியராகிய மாகறல் - கார்த்திகேய முதலியார், பிள்ளையவர்கள் சென்னையிலும் காஞ்சியிலும் வசித்த காலத்துத் தாம் அவரிடம் பல நூல்களைக் கற்றறிந்ததாகப் பலமுறை என்னிடம் கூறியுள்ளார். அன்றியும் தமது மொழி நூலின் ஆசிரிய வணக்கத்தில் பிள்ளையவர்களைத் தமது ஆசிரியர் மூவருள் ஒருவராகப் பாராட்டியுமுள்ளார். ஆதலின் முதலி

யாரும் பிள்ளையவர்கள் மாணாக்கர் வரிசையிற் சேர்ந்தவரே யாவர்.

பிள்ளையவர்கள் காலத்தில் சென்னையில் விளங்கிய திராவிடவர்த்தன சபையினர் பல பண்டிதர்களைக் கொண்டு, இரகுவமிசம், அகநிர்ணயம் முதலிய சம்ஸ்கிருத நூல்களைத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டதாகத் தெரியவருகின்றது. அச்சபையில் பிள்ளையவர்கள், சொர்க்கபுரம் இராமலிங்கத்தம்பிரான் முதலாயினோர் பண்டிதர்களாக விளங்கினரென்ப. அச்சபையைச் சேர்ந்த சதுர்வேத வையாகரண ஸ்ரீநிவாசாசாரிய சுவாமிகள் என்னும் சம்ஸ்கிருத வித்துவசிரோன்மணி மாட்டுப் பிள்ளையவர்கள் குருத்துவம் பூண்டிருந்தாகவும் அறியக் கிடக்கின்றது.

உ

திருச்சிற்றம்பலம்

# மாணிக்கவாசகர் புராணம்

## பாயிரம்

### காப்பு

சத்தி யாய்ச்சிவ மாகித் தனிப்பர
முத்தி யான முதலைத் துதிசெயச்
சுத்தி யாகிய சொற்பொரு ணல்குவ
சித்தி யானைதன் செய்யபொற் பாதமே.

## நடேசர்

இதந்தரு மடந்தையொ டியைந்துயி ருடம்புபோல்
விதம்படுல கங்களில் விரிந்தொளி விளங்குவார்
மதங்கமொடு துந்துபி வளங்கெழ முழங்கவே
சிதம்பர நடம்பயில் செழுங்கழ லிறைஞ்சுவாம்.

## சிவகாமி

ஆடக சிதம்பர வணங்குமை யணங்கிலாள்
நாடக னனந்தசுக நன்குபுனை பங்கினள்
ஏடக மணம்பொருவ வெங்கணு மியைந்துளாள்
பாடக மிலங்குசிறு பங்கய மிறைஞ்சுவாம்.

## சுப்பிரமணியர்

துங்கமத கும்பவுயர் தும்பிமுக னெம்பிசீர்
தங்குஞெகி ழுஞ்சிறு சதங்கைகள் புலம்பவே
மங்கையுமை கண்குளிர வந்துலவு கின்றதாள்
அங்கைமலர் கொண்டுமிகு மன்புட னிறைஞ்சுவாம்.

## நூற்பயன்

இந்தவள நற்கதை யியம்பினர் நயந்தே
சிந்தையி னினைப்பவர் செவிப்புல நிறைப்போர்
புந்திமகி ழுப்புவி புரப்பருடல் விட்டால்
அந்தவுல கத்தினி லரன்சபையில் வாழ்வார்.

# க. மந்திரிச் சருக்கம்

ஆதிமத்தியாந்த ரகிதரும், சர்வ பூதா தாரமானவரும், நிஷ்களரும், நிராமயரும், நின்மலரும், பரஞ்சோதியும், மாயாபாச பந்தனப்பட்டுழலும் ஆன்மாக்களுக்கு அருள்வெள்ளம் பொழியும் வண்ணம், ஆறு திருவதனங்களும், கேதனம் வச்சிரம் அங்குசம் விசிகம் வேல் அபயம் வரதம் பங்கயம் மணி மழு தண்டு வில் என்பன இயைந்த பன்னிரு திருக்கரங்களும் கொண்டு சகளீகரித்த பெருமானும், ஆகிய சுப்பிரமணியக் கடவுளது பக்தகோடிகளுள் அக்கிரகண்ணியரும், வேதசாஸ்திர மஹாநிதியும், உருத்திராக்ஷ மாலாபரணரும் பஸ்மோத்தூளித விக்கிரகரும், ஸ்கந்தவிஞ்ஞான தீபத்திற்கு வர்த்தியென வாய்ந்தவருமாகிய அகஸ்திய மஹாமுனிவர் எழுந்தருளியிருந்து திராவிட சாதியர்க்கு நாதோற்பத்தி, வர்ணோற்பத்தி, அர்த்தவிவிர்த்தி, அலங்கார ரசயுக்தமான விருத்தத்தின் இலக்கணம் ஆதியவற்றை மொழியப்பெற்றதும், தேவாதிதேவராகிய சோமசுந்தரக்கடவுள் அனேகம் திருவிளையாடல்கள் செய்யப்பெற்றதும், வேகவதி தாமிரவர்ணியென்னும் உபய நதிகளின் வளங்கள் மல்கப்பெற்றதும், இயலிசை நாடகம் என்னும் முத்தமிழையும் பூவைக்குழாங்கள் பகர்ந்து தலைசாய்த்திருக்கும் மனோகரமான சோலைகள் மலியப்பெற்றதும், பரமகுருவாகிய குகப்பிரமமும் சங்கத்தமிழ்ப்புலவராக இருக்கப்பெற்ற மகிமை சேர்ந்ததும், நக்கீரர் முதலிய பொய்யடிமையில்லாத புலவர்கள் வசிக்கப்பெற்றதும் ஆகிய பாண்டிமண்டலத்திலே,

பல்வகை வளம்வாய்ந்து ஒப்புயர்வின்றி விளங்கும் திரு வாதபுரம் என்னும் ஒருபதியுளது. அப்பதிக்கண் வசிக்கும் பிராமணருள் ஞானசாரங்களிற் சிறந்தவரான ஆமாத்தியகுல வேதியர் ஒருவருளர். அவர் பாரியாகிய சதீத்துவ ரத்தினத்தின் திருவுதரத்திலே, கருணைபயோநிதியாகிய சோமசுந்தரக் கடவுளது அனுக்கிரக வலத்தினாலும், மஹான்கள் புரிந்த புண்ணிய பலத்தினாலும், சிவஞானமே ஒருவடிவெடுத்து உற்பவித்தாலென்ன ஒரு குழந்தை பிறந்தது. உலகின்கண்ணே பல்லிடத்தும் வியாபிக்கும் மாயா ஜாலமாகிய அந்தகாரப்படலம் அகலவும், அம்மாயா ஜாலத்தில் அகப்படுவாரை நரகப் படுகுழியில் வீழ்க்கும் பரமதங்களாகிய தாரகாகணங்கள் ஒளிமழுங்கவும், சிவபக்தர்களது இருதயங்களாகிய பங்கயங்களெல்லாம் மலரவும் உதயஞ்செய்த ஞானபாஸ்கரராகிய அக்குழந்தைக்கு, ஞாதியர் யாவரும் திருவாதபுரேசர் என நாமமிட்டனர். பூர்வ பக்ஷத்துச் சந்திரன் சகோரம் மகிழவும், சந்திரகாந்தம் நெக்குநீர் பொழியவும், குமுத தடாகங்கள் குலாவிப் பொலியவும், நாளுக்குநாள் கலாவிருத்தியெய்தி வளர்ந்தாலென்ன திருவாதபுரேசர், தந்தை மகிழவும், தாய் நயனங்கள் ஆனந்தபாஷ்பஞ் சொரியவும், சிவனடியாரது சிந்தைகள் மலர்ந்து திகழவும், நாளுக்குநாள் வளர்ந்தனர். நிஷ்காமனை புண்ணியமாகிய விதையினுள் அடங்கியிருந்து, அங்குரித்து, ஜனனமென்னும் பங்கத்தினின்றும் நீங்கி, சிவானுக்கிரகமாகிய குருத்து வாய்ந்து, நான்குவகை விக்கினமென்னும் களைகள் நீங்கப் பெற்று, சைவநிச்சயமென்னும் பலம்விளையும் வண்

ணம் வளர்ந்த செந்நெல் என்று உருவகித்துரைக்கப் படும் தகைமையினராகிய திருவாதபுரேசருக்கு அவர் ஞாதியர் அன்னப்பிராசனம் சௌளம் ஆதியகிரியை கள் இயற்றி, வித்தியாரம்பஞ் செய்வித்து, உபநயன விதி முடித்தனர்.

சைவமுனிவர்கள் இயற்றிய மாதவங்களும், திரு வாதபுரேசர் பூர்வஜனனங்கடோறும் புரிந்த சிவபுண்ணி யங்களும், அவரது தந்தைதாயர்செய்த தருமங்களும், கருணைம்புதியாகிய பரமசிவனது அனுக்கிரகமும் ஒருங்கு சேர்ந்தமையாலே, அவர் வேதாங்கங்களாகிய சிக்ஷை, கற் பம், வியாகரணம், சந்தசு, சோதிஷம், நிருக்தம் ஆகிய வற்றையும், தரும சாஸ்திரங்களையும், சர்வ புராணங் களையும், தருக்க மீமாம்ஸ சாஸ்திரங்களையும், ஆயுர் வேதம் தனுர்வேதங்களையும், பல்வகைக் கலைகளையும், வேதாகமங்களையும், நாறுதேச பாஷைகளையும், இராஜ நீதிகளையும், பதினாறு வயசினுள்ளே கற்று சமான மற்ற பாண்டித்திய மெய்தினர்.

திருவாதபுரேசர் மானுடர்க்கு இன்றியமையாச் சிறப் பினவாய கலைகள் யாவற்றிலும், அவற்றின் பயனாய ஞானத்திலும், அதன் பயனான ஒழுக்கத்திலும் சிறந்து யாவரும் புகழ்ந்துரைக்கும் வண்ணம் நிலவாநின்றனர் என்னுஞ் சமாசாரஞ் செவியுற்று, சந்தனப் பொதியச் செந்தமிழ்முனியும் சௌந்தரபாண்டியனென்னும் மஹா ராஜனும் சங்கப்புலவரும் தழைத்தினிதமர்ந்த மங்கலப் பாண்டி வளநாட்டின்கண்ணே மறம் எனப்படுவன அனைத்தும் ஓட்டி, அறம் எனப்படுவன அனைத்தும் நாட்டி இராச்சிய பரிபாலனஞ் செய்துகொண்டிருந்த

அரிமர்த்தனபாண்டிய மஹாராஜன் அதிக சந்தோஷ மடைந்து, அவரைத் தனது சமூகத்துக்கு அழைப்பித்து, அவருக்குச் செயற்பாலனவாய உபசாரங்கள் யாவுஞ் செய்து, சிறையிலே அவரடைந்த பெருங்கல்வியைச் சுட்டி மிகவும் ஆச்சரியமுற்று, "இவ்வாறு சம்பவித்தமை கிருபாசமுத்திரமாகிய சோமசுந்தரக் கடவுளது திருக்கருணை கடாக்ஷத்தினால்" என்று புகழ்ந்தோதி, அவரைத் தனதுபிரதான மந்திரியாக்கித் "தென்னவன் பிரமராயன்" என்னும் நாமம் வழங்கி, சகல ராஜர்களும் மதிக்கும்வண்ணம் பீதாம்பரம், இரத்தினாபரணம், வெண்கவிகை, சாமரை, யானை, குதிரை முதலிய பல வரிசையளித்து, அவரைச் சன்மானித்தனன். கருவித் திறமறியும் நூல்களிலும் மனுநீதியிலும் மஹா நிபுணரான திருவாதபுரேசர் இராச்சியபரிபாலன கருமத்திலே சிறிதுந் தவறாது முயன்றும், அன்னிய தேசங்களிலிருந்து கொணரப்படும் யானை குதிரை இரத்தினம் முதலியவற்றை குணதோஷ பரீக்ஷைசெய்து அரசன்பொருட்டு வாங்கியும், மன்னரிடுந் திறைகளைக் கிரமப்படி ஏற்றகாலத்தில் ஏற்றும், பிற ஆவசியக கருமங்களை விதித்தகாலத்திலே முடித்தும், அரிமர்த்தன பாண்டிய மஹாராஜனது ஆனந்தத்தை நாடோறும் விருத்திசெய்வாராயினார். இங்ஙனம் நிகழுங்காலத்தில் அரிமர்த்தன பாண்டிய மஹாராஜன் இராச்சிய பரிபாலனத்திற் கொண்ட கவலையாதானுமின்றி, தன் மாளிகையினில் இனிதுவதிந்து சகல போகங்களையும் அனுபவித்து வந்தான்.

திருவாதபுரேசர் மஹாபிரபுத்துவமான இராஜ பதமடைந்தனரேனும், பாவத்திற்கு அஞ்சுகின்றவரும்,

தனலோபம் பரமாணுப் பிரமாணமேனும் இல்லாதவரு மாதலில், பொருட்களின் நித்தியாநித்தியத்தைக் கைத் தலநெல்லியங் கனியேபோல் நன்குணர்ந்த மஹான்கள் ஒழுகிய பத்திநெறியே தாமும் ஒழுக விரும்பி, சிவனடியார்க்குத் திருவமுதளித்தலாகிய உத்தம புண்ணியந் தினந்தோறும் புரிந்தும், சகலான்மாக்களுக்கும் திருவருள்சுரக்குந் திருவுளத்தாய்ச் சோமசுந்தரக் கடவுள் எழுந்தருளியிருக்கும் திருவாலயஞ் சென்று, அவர் சந்நிதியினின்று, இருகரஞ் சிரமிசைகூப்பி, அழவிடைப்பட்ட மெழுகேபோல உள்ளநெக்குருக, உரை தடுமாற, உரோமஞ் சிலிர்ப்ப, கண்களினின்றும் ஆனந்தவருவி சொரிய, பேரின்பக் கடலிலமிழ்ந்தி, துதித்துச் சேவித்தும், பவசாகரதீர மேற்றுந் தெப்பமான சிவநாமத்தை உச்சரித்தும், மெய்யன்பு செய்து வருவாராயினர். இங்ஙனமே நாடோறும் நடைபெறுங்காலை, திருவாதபுரேசர் பூர்வஜன்மங்கடோறும் புரிந்த நிஷ்காமமா புண்ணியங்களின் பயனாய், மெய்ம்மையாம் பொருள்விவேகமும் பல்வகைப்பட்ட பொய்ம்மையாம் பொருள்விவேகமும், அவருக்குத் தோன்றலும், இகத்திலே யனுபவிக்கப்படும் பாலவான இராச்சியசுகம் முதலியவற்றிலும், பரத்திலே யனுபவிக்கும் சுவர்க்காதி போகங்களிலும் நிராசையுற்று, சூரிய கிரணோஷ்ணத்தால் வருந்திய பிராணிகள் சாயாவிருக்ஷத்தடியை யடைதல்போலவே, ஜனனவெயில் வருத்தம் நீக்கும்படி சிவபெருமானது திருவடித் தாமரை நிழலிற்சேரவிரும்பி, கிருபாசாகரமாகிய எம்பெருமான், ஆன்மாக்கள் யாவும் பாசபந்தம் நீங்கி

முத்திபெற்றுய்யும் வண்ணம் திருவுளங்கொண்டு திருவாய்மலர்ந்தருளிய நிமலாகமங்களை அதிசிரத்தையுடன் அல்லும்பகலும் கற்றுவந்தார். சைவாகமங்களைக் கற்று வருங்காலை, நானாவிதமாய்ப் பாசம் வியாபிக்கின்றமையும், அப்பாச சம்பந்தத்தினாலே ஆன்மாக்கள் ஜனன மரணமென்னும் பெருங்கடலுட் கிடந்து மயங்கித் தியங்கு கின்றமையும், அவ்வான்மாக்களிடத்துக் கொண்ட பெருங்கருணைத் திறத்தினாலே, சிவபிரான் அப்பாசத்தை நீக்கிக் கைவல்யசுகங் கொடுத்தருளு கின்றமையும், ஏகபிர்மமாயும், சத்தியஞான சுகமளிப்பவராயும், நிஷ்களராயும், விசுவாதிக பிரபுவாயும் சர்வஞ்ஞராயும், சர்வகர்த்தராயும், பரஞ்சோதியாயும், அப்பிரமேயராயும் இருக்கின்ற சிவபெருமானைத் திரிகரணங்களாலும் மெய்யன்போடு சேவிக்கும் அடியார்க்கேயன்றி ஏனையோர்க்குக் கைவல்ய பிராப்தி அசாத்தியம் என்பதும், இருவினையொப்பு மலபரிபாகம் விரைவிலேயடையும் விதியுடையார்க்கு முன்னுண்டாவதாகும் அதிதீவிரபக்குவம் உற்றூர்க்குச் சத்தியஞானம் உணர்த்துவது எம்பெருமானது திருவாயினின்றும் பிறந்த பரிசுத்த ஆகமம் என்பதும் திருவாதபுரேசருக்கு நன்கு புலப்பட்டன.

புலப்படவே, மெய்ஞ்ஞானத்திற்குச் சாதனமான விசாரமடைந்து திருவாதபுரேசர் "வேதாந்தத்துணிபும் ஆகமத்துணிபும் பேதமுடையன என மனசிலே நிகழும் சந்தேகத்தை யொழித்து, குருவடிவாகிய தம்மையும் சிஷனாகிய என்னையும் நன்கு உணர்த்தியருளும் ஞானசாரியர் வந்து எனக்கு உபதேசஞ்செயப்பெறும்

நாள் எந்நாளோ?'' என்று பலவாறு புலம்பியும், "மெய் யன்பினர்க்கு எளிவரும் பெருங்கருணைக் கடலாகிய ஞானசாரியாது அற்புத போதனையினாலன்றிப் பிறி தொருவாற்றால் பாசவிமோசனஞ் செய்ய வுன்னுதல், மரக்கலமின்றி மஹாசமுத்திரத்தைக் கைகளால் நீந்திக் கரையேறத் துணிதல்போலும்'' எனச் சிந்தித்தும், பேரின்பவீடெய்தும் விருப்பமிகுதியால், சற்குரவர் உளரோ என்று அறியும் எண்ணம் சைவாசாரியர்க ளுடனே எண்ணிறந்த வாதங்கள் செய்வாராயினர். தேனுண்ணும் அபேக்ஷையுடைய வண்டு சோலையிலும் தடாகத்திலும் அலர்ந்திருக்கும் பல்வகை மலர்களிலும் வீழ்ந்துவீழ்ந்து அவற்றிலிருக்கும் மதுவினால் உதர பூரணமுறாது, மிகுதேன் பொருந்திய மலரைத் தேடித் திரிதல் போலவே, மோக்ஷ சுகமாகிய இன்பமதுப் பருகும் அபேக்ஷயினராகிய திருவாதபுரேசர் பற்பல சைவாசாரியர்களுடன் வாதஞ்செய்துசெய்து, மனப் பூரணமுறாமையாலே, ஆசங்கைகள் யாவற்றினையும் நீக்கும் மஹாசக்தியுடையாராகிய ஞானசாரியரைத் தேடித்தேடித் திரிந்தனர்.

இங்ஙனமே ஆத்துமவிசாரங்கொண்டு சிவபெரு மானது திவ்வியசரண புண்டரீகநிழலடையும் ஆசை மீதூரத் திருவாதபுரேசர் இருக்குங்காலத்தில், ஒருநாள் அரிமர்த்தன பாண்டிய மஹாராஜன் பல்லலங்காரங்க ளுடனும் வந்து சிங்காசனத்தின்மீது வீற்றிருந்தனன். அவ்வமையத்தே மஹாராஜனது குதிரை நிரைகாப் போர் அவன் சந்நிதிசென்று வீழ்ந்து நமஸ்கரித்து "மஹாராஜனே! சந்திரகுலதீபமே! உமது சாலையில்

நின்ற குதிரைகளுள் அனேகம் இறந்துபோயின ; எஞ்சியவை வியாதியினலே பீடிக்கப்பட்டிருக்கின்றன ; ஆயினமையால் புதிய குதிரைகள் ஆவசியகமாக வாங்க வேண்டும். அன்னிய தேசங்களுக்குச் சென்று பரராஜர்கள் யாரையும் வென்று வாகைமாலை சூடற்குக் குதிரைப்படையே அதிசகாயம் ; ஆனகாரணத்தால் எவ்வகைமுயற்சிசெய்தேனும் குதிரைசம்பாதித்தல்வேண்டும் '' என்று அஞ்சலிக்கரத்தினராய் மொழிந்தனர். அச்சமயத்திலே சில தூதுவர்கள் மஹாராஜனது சந்நிதிசென்று கும்பிட்டு "மண்டலேசுரா ! சோழதேசக் கடற்கரையிலே ஆரியதேசத்தவர்கள் உத்தமகுதிரை கொண்டு வந்திருக்கிறார்கள் ; யாம் அதுகண்டேம் '' என்று சொன்னார்கள். அச்சமாசாரங்கேட்டலும் அளவில்லா மகிழ்வுற்று மஹாராஜன் அவர்களது விசுவாசத்தை வியந்தோதிப் பின்பு மந்திரியாகிய திருவாதபுரேசரை நோக்கி "மந்திரீ! நீரே எனது கண். உம்மையன்றிவேறியாவர் இராஜகாரியம் விசுவாச பூர்வகமாய்ச் செய்கின்றார்கள் ? என் குதிரைச்சாலை காப்போர் குதிரைகளில் எண்ணிறந்தன மாண்டனவென்றும், எஞ்சியன வியாதிகளாற் பீடிக்கப்பட் டிருக்கின்றனவென்றும், யுத்தத்திற்கேற்ற உத்தமமான குதிரை ஒன்றேனுமில்லையென்றும் எனக்குச் சொன்னார்கள் ; ஆதலாலே நீர் என் திரவியசாலை திறந்து அளவில்லாத் திரவியம் எடுத்துக் கொண்டுபோய், சோழதேசக் கடற்கரைசென்று அங்கே கொடுவரப்படும் உத்தம குதிரைகளில் அதியுத்தமமாயின எண்ணிறந்தன வாங்கி வாரும் '' என்று ஆஞ்ஞாபித்தனன்.

அதுகேட்டுத் திருவாதபுரேசர் இராஜன் கட்டளை யிட்டவாறே புரிவோராய், இராஜனது திரவியசாலை திறந்து உத்தமவாசி கொள்ளவேண்டிய திரவியங்க ளெல்லாம் எடுத்துப் பின் அறைத்தாழிறுக்கி, அத்திர வியச் சுமையைத் தமது வீட்டில்வைத்து, பிரயாணத் தின் முன்னே எம்பிரானாகிய சோமசுந்தரக் கடவுளைத் தரிசித்து வணங்கி அவரது விடைபெற்றுச் செல்ல வேண்டும் சங்கற்பமுடையராய், தீர்த்தநாயகமாகிய சுவர்ணபதுமினி என்னும் பிரசன்னசலிலம் நிறைந்த வாவியில்வீழ்ந்து ஸ்நானஞ்செய்து, பாவங்களனைத்தை யும் தூளியாக்கும் சிவசின்னங்களாகிய விபூதி உருத் திராக்ஷ மணிமாலை தரித்து, நித்திய கருமங்கள் யாவும் முடித்து, அத்தடாகத்தின் சமீபத்தே வீற்றிருந்தரு ளும் விநாயகக் கடவுளை நாளிகேரம் கந்தம் தூபம் தீபம் முதலியவற்றால் பூசித்து, பின்பு கிருபாசாகர மாகிய சுப்பிரமணியக் கடவுளைச் சேவித்து, தமது மனாபிலாஷங்கள் சம்பூரணமாகும் வண்ணம் பரப்பிரம மான அவரைப் பிரார்த்தித்து, பின்னர் அனுக்கிரக ரூபிணியாகிய மீனாக்ஷிதேவியார் திருச்சந்நிதி முன் னின்று வணங்கித் துதித்து, பின் சோமசுந்தரக் கடவுள் திருச்சந்நிதிசென்று, வெயிலிடைப்பட்ட வெண் ணெயேபோல மனமுருகி அஞ்சலியஸ்தராய் உரோ மாஞ்சிதமுற்று "சிருஷ்டி ஸ்திதி சங்காரம் திரோபவம் அனுக்கிரகம் எனப்படும் பஞ்சகிருத்தியங்களும் நடை பெற ஆனந்தத்தாண்டவம் புரிந்தருளும் எம்பிரானே! அருட்கடலே! அடியார்க்கெளியரே! பத்திவலையிற்படு பவரே! எனதாருயிரே! தேவாதிதேவரே! அகில

காரணரே! சிவபிரானே! அடியேனது பிரயாணம் சபலமாகும்வண்ணமும், அத்திரவியமனைத்தும் தேவரீருக்கும் தேவரீரை மெய்யன்போடு வழிபடும் அடியாருக்கும்விநியோகமாகுமாறும், திருவுளம்பற்றியருளுக'' என்று பிரார்த்தித்து நின்றனர். இவ்வாறு சிவபிரானைப் பிரார்த்தித்துத் திரும்பும் அமையத்தில் ஓர் ஆதிசைவப் பிராமணர் அவர்க்கெதிர்சென்று, அவர்கையிலே திருநீறு கொடுத்தனர்; அதனை அளவில்லாத சிரத்தையுடன் வாங்கித் திருவாதபுரேசர் ''இதுவே என்பிரயாண சித்திக்கு முற்குறி'' என்று பேருவகை பொங்க மேனியெங்கும் பூசினர். பின்பு சிவபிரானைத் துதித்து விடைபெற்று, பாண்டிய மஹாராஜனது மாளிகை புகுந்து, அவனுக்குத் தமது பிரயாணத்தை மொழிந்து, அவன் அனுமதிபெற்று, சங்கம், படகம், பேரி, சல்லிகை, தாரைமுதலிய வாத்தியங்கள் எங்கும் முழங்கவும், வெண்குடைகவிப்பவும், சாமரையிரட்டவும், சதுரங்க சேனைசூழவும், இரத்தினகசிதமான பொற்சிவிகைமீது இவர்ந்து, கல்வரையும் பாலைக்கடுஞ்சுரமும் கான்யாறும் முல்லை மருதங்களுங் கடந்து கிழக்குச் சமுத்திரத்தின் கண்ணதான திருப்பெருந்துறை நோக்கிச் சென்றனர்.

## உ. திருப்பெருந்துறைச் சருக்கம்

இங்ஙனம் நிகழ்வுறவே, சிரிவர்க்கங்கள் யாவற்றுள்ளும் மகிமை தங்கியிராநின்ற கைலாசத்திலே, சாம்பூநதமாகிய உத்தம செம்பொன்னுலியன்று நவ மணியழுத்தி விளங்கும் திருவாலயத்திலே, ஆயிர கோடி பாலாதித்தியர்கள் ஒருங்குதித்தாலென்ன அனந்தங்கிரணங்கள் வீசித் திகாந்தங்களிலுள்ள இருட் குழாமகற்றிப் பிரகாசியாநின்ற கனகமணிமண்டபத் திலே, திவ்விய சிங்காசனத்தின்மேலே, ஏகபிரமமாயும், பரிபூரணராயும், சர்வஞ்ஞராயும், சர்வவியாபகராயும், சர்வசத்தியராயும் அகிலபிரபஞ்ச சாக்ஷியாயும், நித்திய ராயும் உள்ள சிவபிரான், தமது கிருபாசத்தியாகிய பார்வதிதேவியாரை வாமபாகத்திற் கொண்டு அருட் கடல் பூரணமாய்ப் பொங்கித் ததும்பும் திருநயனங்கள் பொலிய எழுந்தருளியிருந்தனர். அவ்வமையத்திலே பிரமதகணங்களிற் சிலர் பேரி, காகளம், சுரமண்டலம், துந்துபி, சின்னம், சங்கம், சல்லிகை என்பனவாதியான வாத்தியங்களை முழக்கினர்; சிலர் இருபுடையினுங் கவரிவீசினர்; சிலர் ஆலவட்டம் அசைத்தனர்; சிலர் முத்தவெண்குடை கவித்தனர்; தும்புருநாரத சித்த வித்தியாதரர்கள் வீணைசேர்த்துச் சிவபிரானது நிரு மல வாஸ்தவகீர்த்தியைப் பிரதிபாதிக்குஞ் சாமவேதங் களைப் பாடினர். உடைவாளும் பிரம்புந்தாங்கிச் சித் தாந்த சைவசிகாமணியாகிய திருநந்திகேசுரர் சிவபெரு மானுக்குப் பக்கமாய் நின்றனர். இலக்ஷுமியும் பூமி தேவியும் தேவமாதர்களும் உலகமாதாவாகிய பார்வதி

தேவியார் சமீபம்நின்று சேவித்தனர். அவ்வமையத்திலே பிரமவிஷ்ணு முதலியோர் உரைக்கருஞ்சிரத்தையுடனெழுந்து "சிவபெருமான் கருணைகூர்ந்தருளுஞ் சமயமிதுவே" என்று சிரமிசை கரதலங்கூப்பி ஹரஹர முழக்கஞ்செய்து, அழல்வாய்ப்பட்ட மெழுகேபோல மனம் நெக்குநெக்குருக, தேகங்கம்பிக்க, உரோமஞ் சிலிர்ப்ப, மயிர்க்கால்தோறும் சுவேதசலமுண்டாக, கண்களினின்றும் ஆனந்தபாஷ்பஞ் சொரிய, நாத்தழுதழுப்ப, உரைதடுமாற, தம்மை மறந்து, பேரின்ப சாகரத்தமிழ்ந்தி நின்றனர். இவ்வாறு நிகழ்வுறுஞ் சமயத்திலே எம்பெருமான் கருணைமழை பொழிக்திடும் திருமுகத்திலே திருப்புன்னகை காட்டி, தமது திருச்சந்நிதியில் நிற்குங் கணதிபதிகளையும், பத்தர்களையும் நோக்கியருளி "அன்பர்களே! திருவாதபுரேசன் என்பவனுக்கு ஞானோபதேசஞ் செய்யுமாறு துணிந்தேம். ஆதலில் நீவிர்யாவரும் ஞானசாரிய வடிவங்கொண்டுசெல்லும் நமக்குச்சீஷர்களாய் அமையும்வண்ணம் மானுடவேடந்தரித்து எம்முடன் வம்மின்" என்று ஆஞ்ஞாபித்தருளினர். எம்பிரான் கட்டளையிட்டருளிய கணத்தேதானே அவர்கள் யாவரும் அவ்வுருவம் அமைந்தனர். அவர்களோடு, சிவபிரான் ஞானசாரிய வடிவங்கொண்டருளி அரிபிரமேந்திராதியரது மனங்களுக்கும், வேதங்களின் சிரசுகளாகிய உபநிஷதங்களுக்கும், அதீதமாயிருக்கின்ற திருச்சரணாரவிந்தங்கள், பூமிதேவி ஜன்மாந்தரங்கடோறும் பஞ்சாக்கினி மத்தியினின்று வருந்தியியற்றிய துஷ்கரமான தபங்களின் பெரும்பயனென்ன, தரைமீது தீண்ட, மெல்லமெல்லச்

சென்று திருப்பெருந்துறை யென்னும் திவ்வியக்ஷேத்திரமடைந்து, அங்கே புன்னாகம் சந்தனம், சம்பகம், நரந்தம், குங்குமம், செருந்தி, கோங்கு, பாடலம், பனசம், சூதம், குரா, பூகம், தெங்குமுதலிய சாயாவிருக்ஷங்கள் செறிந்து சூரியகிரணம் அணுப்பிரமாணமேனும் வீழப்பெறாது, சைத்தியம் பொருந்தி, மலயமந்த மாருதம் வீசப்பெறும் மனோகரமான ஒரு பூஞ்சோலை சென்று, அதன்மத்தியிற் பொலியும் சுகந்தமலர் நிறைந்த சாகைகள் செறிந்த குருந்தவிருக்ஷத்தடியிலே அடியார்குழாஞ்சூழ எழுந்தருளி, திருவாதபுரேசரது பாசபந்தம் கழிதற்குரிய காலம்பார்த்து இனிதிருந்தனர்.

அவ்வமையத்திலே திருவாதபுரேசர் தானைபுடைசூழ, மாமணிச் சிவிகையினராய்ப் பலருஞ்செல்லப்பெறும் பெரும்வீதியே சென்று, மஹாசமுத்திரத்தினுள்ளே வீழ்ந்து கரைசிறிதுங் காணாது, வேகமாருதம் வீசி யுலைப்ப, சோகவன்னி சுட்டகம் வருத்த, பற்பல திசைக்குந் திரிந்தோர் கரையொன்றுகண்டு, வரையறைப்படாத மகிழ்வுடையோராய், அதனைச்சேர்ந்தாலென்னவே, பாவபுண்ணிய பாசவாற்றலாற் பல்வகைப்பட்டுத் தோன்றும் ஜனன சமுத்திரத்தினுள்ளே வீழ்ந்து, ஆசையென்னும் பிரபலவாயு வீசிவீசியுலைப்ப, நானாவகையாக வியாகுலமென்னும் அக்கினிமனத்தினை நலிக்க, வருந்தித்திரிந்தவராகிய திருவாதபுரேசர், அக்கடலின் கரையை யடைதற்கேற்ற இருவினையொப்பு மலபரிபாகம்* சம்பவிக்கப்பெற்று, சிவபெருமானது கிருபாசத்தியின் வசத்தால் திருப்பெருந்துறை யடைந்

தனர். திருப்பெருந்துறையின்கண் உளவாகிய விசித்திரமான சோலைகளையும், பூந்தடாகங்களையும், செந்நெல் வயல்களையும, கன்னல்வேலிகளையும், ஏனைய வளங்களையுங் காணுந்தோறும் பேருவகையெய்தித் திருவாதபுரேசர் சிவபிரான் ஞானசாரியத் திருமேனி கொண்டு எழுந்தருளியிருக்கும் சைத்திய பூஞ்சோலையினருகே செல்லுங்காலையில், அங்கே சிவபக்த சங்கத்தினின்றெழும் நிமலசைவாகமங்களின் அதிமதுரதொனி அவரது சுரோத்திராந்திர வழிச்சேறலும், மனசுருகி, தேகமெங்கும் உரோமாஞ்சிதமுற்று, எல்லையில்லா ஆனந்தம் தலைக்கொள்ள, தமக்குப் பாங்கேநின்ற பரிசனரிற் சிலரைப்பார்த்து "ஏவலர்களே ! இச்சத்தம் யாது? அதனை இப்பூங்காவிற்சென்று அறிந்து வந்துரைமின்" என்று கட்டளையிட்டனர். திருவாதபுரேசர் இட்டகட்டளையைச் சிரமிசைதாங்கி ஏவலர்கள் புஷ்ப நந்தனவனஞ் சென்று பின்னர்த் திரும்பிவந்து "சுவாமீ ! இவ்வுத்தியான மத்தியிலே ஓர் குருந்த விருக்ஷ நீழலிலே ஓர் ஆசனத்தில் வியாக்கிரசருமத்திலே, சடாமுடியினராயும், விபூதி ருத்திராக்ஷ மாலிகை விளங்கும் மேனியினராயும், புஸ்தகந்தாங்கிய கரத்தினராயும், தக்ஷிணாமூர்த்திபோன்ற ஒரு ஆசாரியர் வீற்றிருக்கின்றனர். அவருக்கு நாற்புடையினும் எண்ணிறந்த அடியார்கள் சூழ்ந்து வீற்றிருந்து யாதோ ஒரு நூலைப் படிக்கின்றனர். இஃது அவர்கள் படனத்தா லுண்டாகும் ஒலி" என்றனர். ஏவலாளர்கள் இவ்வண்ணம் உரைத்தலும் அம்மஹானைக் காணும் ஆவலோடு திருவாதபுரேசர் அவ்வாராம மத்தியிற்

சென்று, அகமும் முகமும் அலர்ந்து மாமணிச் சிவிகை நின்றும் இழிந்து தம்முடன்வந்த பரிசனரை யெல்லாம் அங்கண் நிறுவி, தாமே தனியே ஆதரத்தோடு செல்லுகையில் அவர் மனமெல்லாம் நெருப்பிலிடும் வெண்ணெய்போல உருகியது; கண்களினின்று ஆனந்த பாஷ்பம் தாரைதாரையாய்ப் பொழிந்தது. வலக்கண்ணும் வலத்தோளும் ஓவுறாது துடித்தன. உரோமம் புள்ளியாயின. இங்ஙனம் நிகழலும், திருவாதபுரேசர் சிறிது அதிசயமடைந்து "எனக்கு இம்மஹானைக் காணமுன்னமேதானே ஓர்காலும் உண்டாகாத பத்தியுண்டானது. விழியினின்றும் ஆனந்தவருவி சொரிகின்றது. மெய்ம்மயிர் பொடித்தது. வலத்தோளும் வலக்கண்ணுந் துடிக்கின்றன. என் மனசு வன்னிபெய் வெண்ணெய்போல வலியழிந்துருகுகின்றது. என் தேகமும் உணர்ச்சிமுற்றும் சுவாதந்திரிய மற்றன. இஃதென்ன அற்புதம்! இங்ஙனம் நிகழுங் காரணத்தானே இவரே அடியேனது மலபாசத்தினை யொழித்து ஆட்கொண்டருளும் வண்ணம் வந்தருளிய ஞானதேசிக மூர்த்தி. இதிற் சிறிதுஞ் சந்தேகமில்லை" என்று சொல்லி விரைவில் நடந்து குருந்தவிருக்ஷ சமீபஞ் சென்றனர். அவ்விருக்ஷத்தின் கீழுளதான ஓர் பிராசாதத்திலே அதிபாவனமான ஓரிடத்திலே, வேதங்கள் ஓர் புடையிலும், விமலாகமங்கள் ஓர் புடையிலும், புராணங்கள் ஓர் புடையிலும், நானாபேதமான சமயநூல்கள் ஓர் புடையிலும் தொனிப்ப; வேதங்களாற் பிரதிபாதிக்கப்படும் தருமார்த்த காம மோக்ஷ வைபவங்களையும், அவ்வேதங்களுக்கு அதீதமான கதிக்கு ஏதுவெனச்

சைவாகமங்கள் பிரதிபாதகஞ்செயும் சரியை கிரியை யோகம் ஞானம் எனப்படும் சதுர்ப்பாதங்களையும் நன்குணர்ந்த மாணவர்கள் வினுவிடை பேச; சரியையில் வல்ல தொண்டர்களும், கிரியையில்வல்ல அடியாரும் சிவயோகத்தில் வல்ல தாசர்களும் ஞானத்தில் வல்ல பத்தரும் பொலிய; மூலவேதங்களோதி முடியாத பொருளாகிய சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளிய நிமலாகமங்களின் அளவினை யுரைப்பவராயும், அவற்றின் அர்த்தங்களை யுணர்ந்து அவற்றின் மகிமையால் ஆகருஷிக்கப்பட்டு ஆராமைப்படுபவராயும்; அவற்றைக் கற்பவராயும்; நித்தியானந்தங் காரணமாகக் கீத நடனம் புரிபவராயும், அழுதும் தொழுதும் நகைத்தும் அயர்பவராயும்; ஞான நயனங்களாலே பரமசிவனது திருவுருவைக்கண்டு பின்பு இப்பிரபஞ்சத்தினைக் காண மனமின்றி விழித்தகண் குருடானவராயும்; தொளாயிரத்துத் தொண்ணூற்றொன்பது அடியார்சூழ, உருத்திராக்ஷமாலையைச் சிரத்திலும் காதிலும் கரத்திலும் உரத்திலும் கழுத்திலும் தரித்து, நெற்றியிலே விபூதி அணிந்து, காஷாய வஸ்திரம் உடுத்து கரத்திலிலகும் சிவஞானபோத புஸ்தகத்தினராயும், காட்டிய சின்முத்திரையினராயும், தண்டு கையினில் விளங்க, நாவினுல் பஞ்சாக்ஷரோச்சாரணஞ்செய்து, திருவடிகளில் பாதுகை சேர்த்தி, புசங்கபந்தனம் விளங்கும் ஜடாகலாபங்கள் பொலிய, யோகாசனத்திலே ஞானசாரியர் வீற்றிருந்தமையைக்கண்டு திருவாதபுரேசர் குருமூர்த்தியை அன்பு நிறைந்தமனசினுல் வணங்கி, வணங்காதவர் போலவும் பெருமித முற்றவர்போலவும் நடித்து, ஞானதேசிகரை

நோக்கி "ஐயனே! தேவரீரது திருக்கரத்துத் திகழ்வுறும் புஸ்தகம் யாதெனச் செப்பியருளுக" என்று வேண்டினர். அப்போது ஞானசாரியர் "இப்புஸ்தகம் சிவஞானபோதம்" என்று உத்தரமளித்தருளினர். அது கேட்டுத் திருவாதபுரேசர் "சுவாமீ! சிவமாவது யாது? ஞானமாவது யாது? போதமாவது யாது? அடியேனது இவ்வினாக்கட்குப் பிரதியுத்தரம் அளித்தருளுவீராயின் முற்காலத்திலே திருக்கைலாசகிரியின் தக்ஷிணசிகரத்தில் நிற்கும் கல்லாலவிருக்ஷத்தின் நீழலிலே சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர் என்னும் முனிவர் நால்வர்க்கும் உபதேசஞ் செய்தருளும்வண்ணம் தக்ஷிணாமூர்த்தியாய் எழுந்தருளிய பெருங் கருணைக்கடலாகிய சிவபெருமானே தேவரீர், அடியேனும் தேவரீரது திருவடிக்கடிமையாவேன்" என்றனர்.

அது கேட்டுக் குருசுவாமிகள் "சிவமாவது சமானாதிக ரகிதமாய் நிற்குஞ் சத்தியப்பொருளே; அப்பொருளையறிவதே ஞானம்; அறிந்ததனை உணர்வதுவே போதம்" என்று திருவாதபுரேசரது புந்தியிற் போந்த ஆசங்கை அகலும் வண்ணங் கூறியருளினர். அவர் புகன்றருளிய வார்த்தையைக் கேட்டலும் அதிதீவிர பக்குவமடைந்தவராகிய திருவாதபுரேசர் "பொன்னம்பலத்தின் கண்ணே சிருஷ்டி ஸ்திதி சங்காரம் திரோபவம் அனுக்கிரகம் எனப்படும் பஞ்சகிருத்தியங்களும் நடைபெறும் வண்ணம் ஆனந்தத் தாண்டவம் புரிந்தருளுஞ் சிவபெருமானே அடியேனை ஆண்டு கொண்டருளத் திருவுளம் பற்றி ஞானதேசிகத் திருமேனிகொண்டு வந்தனர்" என்று

மனத்திலே நிச்சயித்து, அவரது திருச்சரண புண்டரீகங்களின்முன் வீழ்ந்தெழுந்து, அஞ்சலியஸ்தராய் "எம்பெருமானே! கருணையங்கடலே! மின்னினும் அநித்தியமுடையனவும், எக்காலத்தும் துக்கத்தை விளைப்பனவுமான பிரபஞ்சப்பொருட்களெவற்றையும் அடியேன் விரும்பேன்; தேவரீரது திருவடிக்கமலங்களை யடைந்து, இருவினைப்பற்றினாலே தொடர்ந்துவரும் ஜனனமென்னும் வியசனத்தை யொழிக்குமாறு பெருங்காதல் கொண்டேன்; ஆயினமையின் எம்பிரானே! தமியேனை இங்கே ஆட்கொண்டருள்க" என்று பிரார்த்தித்து, முகமெல்லாம் கண்ணீர் முத்தெனச் சொரிய இரங்கியழுது நின்றனர். இவ்வண்ணமே புகன்று திருவாதபுரேசர் அழுது நிற்கின்றமையைக் கண்டு, அங்ஙனம் வதிந்த பத்த சங்கத்திலே சிரேஷ்டரான ஒருவர் அவர்க்கு இருவினையொப்பு மலபரிபாகம் சம்பிராப்தமாயதென்ற நிச்சயித்து, எழுந்து ஞானதேசிகர் திருமுன்னின்று "எம்பிரானே! கருணாசாகரமே! தேவரீர் இவ்வன்பன் மீது திருவருட்கண்செய்து, இவனது வினைகள் யாவற்றையும் அகற்றி ஆட்கொள்ளும் வண்ணம் திருவுளம்பற்றி யருளுக" என்றுபரிந்து வணங்கி நின்றனர்.

அதுபொழுது பரமதயாநிதியாகிய ஞானாசாரியர், ஜனனத்திற்கஞ்சிச் சிந்தைவெருவி அதனை யொழித்தலையே முக்கிய மனோரதமாய்க் கொண்ட திருவாதபுரேசர்மேல், திருக்கருணைகடாக்ஷஞ் செய்து, ஆதித்தியன்முன்னர் பதுமம் அலர்ந்து நின்றாலென்ன, தமக்கு முன்னர் முகமலர்ந்து நின்ற பக்குவரைப் பார்த்து,

"அன்பனே! நின்னையடிமைக்கொள்ளும் நிமித்தமாயே, யாம் இருவினையொப்பும் மலபரிபாகமும் எய்தப் பெற்ற இம்மாணவருழாத்துடன் இத்தலத்தைச் சார்ந்தேம். நீ பூர்வஜனனங்களிலே மஹாநிஷ்காமமுை புண்ணியம் செய்தனை; நின்புண்ணியமே நின்னை சம்ரக்ஷணை புரியும் ; நீ யாதொன்றற்கேனும் அஞ்சேல்" என்று திருவாய்மலர்ந்து அந்நாளை அவரையாட்கொளற்கு வாய்ந்த நன்னாளாய்க் கொண்டு, தமது திருச்சந்நிதியில் வீற்றிருந்த மாணவர் யாவருள்ளும் சிரேஷ்டமானவர் ஒருவரைப்பார்த்து "மைந்தனே! சிவபுண்ணியம் புரிந்த விவேகியாகிய இவ்வன்பனது வியசனங்கள் யாவையும் விமோசனிப்பித்து ஞானோபதேசஞ்செய்து ஆட்கொள்ளும் வண்ணம் சித்தமுற்றேம். ஆதலின் சைவாகமங்களிலே பிரதிபாதகஞ் செயும்வாறே செயற்பாலனவான யத்தனங்கள் யாவையும் நீ விரைவிற் செய்துமுடி" என்றுஆஞ்ஞாபித்தருளினர். ஞானதேசிகர் நவின்றருளிய தேனினுந்தெளிபாலினும் இனிய மதுர வாசகங்கேட்டலும், அவ்வடியார் பேருவகைபூத்து குரு சுவாமிகளது திருக்கருணையை வியந்து அக்கணத்தே தானே அப்பூங்காவினிடையே புஷ்பமாலிகைகளினாலும் பட்டுவஸ்திரங்களினாலும் ஓர் ஆலயம் சமைத்து, அவ்வாலயத்தின் மத்தியில் திவ்விய ஓர் ஆசனம்சேர்த்து ஞானோபதேசத்திற்கு வேண்டிய சம்பாரங்கள் யாவையும் சம்பாதித்து வைத்துப் பின்பு, ஞானசாரியரது திருச்சந்நிதிசென்று கைகளைச் சென்னிமேலேற்றிக் கும்பிட்டு "மனக்கோட்டமுடையார்க்குச் சுவப்பனத்தினுந் தோன்றாத பெருமானே! தூயவகத்தினராய

அடியார்க்கெளிவரும் கருணாநிதியே! தேவரீர் அனு மதிப்பிரகாரமே ஆலயஞ் சமைந்தது" என்று விண்ணப்பஞ்செய்தனர். பின்பு சூரியாஸ்தமயனமாய், ஞாலமெங்கும் இருட்படலஞ் செறிந்து பதினைந்து நாழிகையாய் சகல பிராணிகளும் நித்திராவஸ்தை யடைந்திருக்கும் அர்த்தராத்திரியில், திருவாதபுரேச ருக்கு மாயாமலம் நீங்கும் சமயம் சம்பவித்தது.

அத்தருணத்தைப் பிரதீக்ஷித்து இருந்தவராகிய ஞானாசாரியர், திருவாதபுரேசரை யாட்கொள்வதற்கு வாய்த்தகாலம் இஃதே யென்று மாணவகுழாத்தை விட்டெழுந்து திருமஞ்சனச்சாலைசென்று, குங்குமம் புழுகு கஸ்தூரி சந்தனம் முதலிய வாசனா வஸ்துகளை மிச்சிரஞ்செய்து, திருமேனியெங்கும் அர்ப்பணஞ் செய்து, பரிமளமூட்டிய குளிர்ந்த தூய கங்காசலத் திலே ஸ்நானஞ்செய்து, திருமேனிக்கண்ணுள தான நீரை வஸ்திரத்தினால் துடைத்து, அநர்க்கியமான பட்டு வஸ்திரம் உடுத்து, நவீன ஆலயத்துட் பிரவேசித்து, தென்முகமாக ஆசனத்தின்மேல் வீற்றிருந்தருளினர். அப்பொழுதே திருவாதபுரேசரும் தூயநீரிலே ஸ்நானஞ் செய்து, சுப்பிராம்பரந்தரித்து, திருமேனியிலே திரு நீறணிந்து, தமது சிரமிசை இருசரண பங்கயங்களை யுஞ் சூட்டிக் கைவல்லிய சுகமளிக்கும் வண்ணம் திரு வுருக்கொண் டெழுந்தருளியவராகிய ஞானாசாரியரது திருமுன்னிலையிற் சென்று மகிழ்கூர்ந்து நின்று, அவரது திருப்பாத புண்டரீகங்களை அபிஷேகித்து முன்னர் அவற்றிற்கு அர்ச்சனை புரிந்து, பின்னர் பனிநீர் முதலாய வாசனா வஸ்துகள் சேர்ந்த சந்

தனத்தை, அவரது திருமேனி யெங்கும் பூசி, மதுகரமுரலும் வண்ணம் மென்வாசச் செங்கழுநீர்த் தாமம் சூட்டி, அவரது திருக்கோலத்தை நயனங்கள் கொண்ட அவாநீங்கப்பார்த்து, எல்லையில்லாப் பேரானந்தங்கொண்டு, ஆதரத்துடனே கைகூப்பிவணங்கி, பருப்பு நாரிகேள பழத்துருவல் சருக்கரை ஆகியவற்றைச் சேர்த்து, பசுப்பாலிலே சமைத்த திவ்விய அமுதினை, ஞானசாரியர் சந்நிதியிற் கனகபீடத்திலே சுவர்ணபாத்திரத்திற் படைத்து, அதில் நெய்சொரிந்து, வாழைப்பழம் மாம்பழம் பலாப்பழம் ஆதியவற்றைச் சேர்த்து, ஆதரத்துடனும் அச்சத்துடனும் குருசுவாமிகளைப்பார்த்து, "பூர்வகாலத்திலே அரிபிரமேந்திராதியர் பிழைக்கும் வண்ணம் ஆலகாலவிஷத்தையுண்டருளிய பெருமானே! அடியேன் இப்பொழுது தேவரீரது சந்நிதியிலே விநியோகித்த அமுதினை யுண்டருள்க" என்று பிரார்த்தித்தலும், காருண்ணிய விக்கிரகமாகிய ஞானசாரியர், அன்பரது வேண்டுகோளின்படியே உண்டு ஜலத்தினாலே திருக்கர சரோருகங்களைப் பிரக்ஷாலனஞ்செய்தனர். அதன் பின்னர் திருவாதபுரேசர் வெள்ளிலை பாக்கு முதலியவற்றை அர்ப்பணஞ்செய்து கண்டாநாதத்தோடு தூபதீபங்காட்டி, ஞானசாரியரது திருமேனியிலே திருநீறு தரித்து, தர்ப்பணங்காட்டி, அவரது திருமுடியின்மேற் பட்டுக்குடை கவித்து, வெண்சாமரம் ஆலவட்டம்பற்றி அடியார்கள் பரிவுடன்சூழ, திருவாதபுரேசர் நறுமலர்நிறை கரதலத்தோடு, குருசந்நிதியில் இனிது வீற்றிருந்தனர்.

அவ்வேளையிலே, ஞானசாரியர் பதினோர்மந்திரங்களும், எண்பத்தோர் பதங்களும், ஐம்பத்தோரக்ஷரங்

செவிவழியே தேவாமிர்த தாரைபோலச் செல்லலும், எம்பெருமான் உடலங்கம்பித்து திருநேத்திரங்களி னின்றும் ஆனந்தவருவி பூரணமாய்ப்பொங்கித்ததும்பிச் சொரிய, அன்பு ஆராமை மீக்கொள்ள, திருக்கர சரோருகங்கள் இரண்டையும் சிரமிசைவைத்து "இழி யேன் பாடிய புன்பாடலை ஆரணங்களும் அரிபிரமேந்தி ராதியரும் போற்றப்பெறும் சிவபிரான் அங்கீகரித் தருளும்வண்ணம் யான் யாதுதவம் புரிந்தேன்? அறிகி லேன்! அறிகிலேன்!!" என்றுரைத்து அழுதனர். அவ் வமயத்தில் தில்லையிலுள்ளோர் யாரும் அஞ்சலிக்கரத் தினராய் நின்று எம்பெருமானைநோக்கி, "சுவாமீ! ஆர ணார்த்த பூரணமான திருவாசகமென்னும் தேனைச் சிவ பிரான் திருச்செவி மடுத்தருளும் வண்ணம் வந்து செய்தருளிய செயல்கள் யாவை? அடியேங்கட்கு கௌதூகலம் உண்டாகின்றது. அவற்றைஎம்பெருமான் மொழிந்தருளுக" என வேண்டினர். அவர்கள் வேண் டலும் நாதாந்தமுங் கடந்த மெய்ஞ்ஞான ஆனந்த போதமாகிய சிவபெருமான் விஷ்ணுமுதலிய தேவர் களது மனங்களுக்கும் வேதச்சிரங்களுக்கும் அதீத மான திருவடிக்கமலங்கள் பூமிமேற்பட்டு வருந்த வந்து, அடியார்க்கு எளியனென்னும் தமது பேரருட் டிறத்தை விளக்கும் வண்ணம் செய்தருளிய செயல்கள் யாவையும் செப்பியருளினர். அவற்றைக் கேட்டுப் "பொன்னம்பல நாதர் அவர் அடியார் இன்னம் பலபல யோனியில் எய்தாவகை கருணைகூர்ந்தனர்" எனப்

புகன்று, அந்த மகிமைதங்கிய தமிழ்ப் பிரபந்தங்களின் அருத்தத்தை மொழிந்தருளும் வண்ணம் சிவ ஞானச் செல்வரைப் பிரார்த்தித்தனர். அப்போது மாணிக்கவாசக சுவாமிகள் "அன்பர்காள், நீவிர்வேண்டிய வாறே தமிழ்ப் பிரபந்தங்களின் அருத்தத்தைக் கனக மணி அரங்கஞ்சென்று பகர்வேன்" எனப் பகர்ந்து அவர்களெல்லாஞ் சூழ்ந்துபோகநடந்து ஆண்டுச்சென்று நடேசரது திருச்சந்நிதியினின்று, "இத்தமிழ்ப்பிரபந் தத்தின் அருத்தம் இவரே" என்று தாண்டவ ராஜரைக் காட்டி யாவருங்காண மறைந்து சிவசாயுச்சியம் அடைந் தனர். மாணிக்கவாசகப் பெருமான் பாலுடன் நீர் கலந் தென்னச் சிவத்துடன் ஐக்கியமாதலும் தில்லையிலுள் ளார் யாவரும் ஆனந்த பரவசமடைந்து தேக கம்பித முற்று மேனிவெயர்த்து உரோமாஞ்சிதமுற்றுச் சிர மிசைக் கரதலங்கூப்பி ஹரஹர முழக்கஞ் செய்தனர். சிவஞானச்செல்வர் சிவசாயுச்சியபதம் அடைந்தமாத் திரத்திற் சிவபெருமானுக்குப் பாங்கே நின்ற பிரமத கணங்கள் நடனஞ்செய்தன; கணநிபதிகள் ஆனந்த முழக்கஞ் செய்தனர்; தும்புரு நாரதசித்த வித்தியாதரர் கள் சாமவேதகானஞ் செய்தனர்; அந்தரதுந்துபி முழங் கின; தேவர்கள் மந்தார புஷ்பமாரி பொழிந்தனர். சிதம்பரவாசிகள் யாவரும் பொன்னம்பல நாதரது பூங் கழல் மன்னிய மனசுடையாராய் மஹாதேவரது கருணைவெள்ளத்து ஆழ்ந்து சைவசித்தாந்த சாகரமாகிய மாணிக்கவாசகப் பெருமான் திருவாய்மலர்ந்தருளிய

அற்புதத் திருவாசகத் தமிழென்னும் அதிமதுரச் செந்தேனைப் பருகிப்பருகி ஆனந்தம் அடைந்திருந்தனர்.

ஈனமிகுந் தளதோலு மென்புகரம் புஞ்சியும்
ஆனவுடற் சிவரூப மாமிதனைத் தெளியாமல்
ஊனவுடற் கிரைதேடி யுழன்றுலகிற் றடுமாறி
மாநரகிற் புகுவாரே மாயைவலைப் படுவார்கள்.

வாதவூ ரந்தணர் தந்திரு வாய்மை விளங்கு திருக்கதை
ஓதின ரன்புட னெண்செவி யூடு முகந்தது கேட்டவர்
போதமெய்ஞ்ஞானமுறுஞ்சுகபோகமுடன்புகழ்பெறுவர்கள்
தீதில் பவங்க டொலைந்தபின் சேர்குவர் வண்சிவ லோகமே.

பூதல மாதும் வாழ்க பொன்மழை பொழிந்து வாழ்க
வேதவா கமமும் வாழ்க வேந்தர்செங் கோலும் வாழ்க
தீதிலந் தெழுத்து நீறுஞ் சிவனடி யாரும் வாழ்க
வாதவூ ரிறை புராணம் படித்தவர் கேட்டோர் வாழ்க.

திருச்சிற்றம்பலம்.

# அரும்பத விளக்க அகராதி

அகிதர் - பகைவர்.

அக்கிரகண்ணியர் - முதலாக மதிக்கப்படுவர்.

அங்குரித்தல் - முளைத்தல்.

அங்குலி - விரல்.

அசம்பவம் - சம்பவியாதது.

அசம்பிரேக்ஷிய கிருத்தியம் - ஆலோசனையில்லாத செயல்.

அசாத்தியம் - பெறற்கரிது.

அசுவம்—அச்சுவம் - குதிரை.

அச்சுவாதியக்ஷர் - குதிரைகளின் மேற்பார்வைக்காரர்.

அஞ்ஞானம் - அறியாமை.

அடிசில் - சோறு; உணவு.

அதிபாவனம் - பெரும்பேறு.

அதிஜடன் - முழுமூடன்.

அதீதம் - அப்பாற்பட்டது.

அதுல்ய - ஒப்பற்ற.

அநந்தரம் - பின்பு.

அநர்க்கியம் - விலையுயர்ந்த.

அநாதிமலமுத்த சித்துரு - அநாதியே மலமில்லாத ஞான வடிவினர்.

அநுசிதம் - தகாதது.

அநுதாப சூனியர் - அநுதாபமில்லாதவர்.

அநுதாப யுக்தர் - அநுதாப முடையவர்.

அந்தகாரம் - இருள்.

அந்தராவரணம் - உள் வீதி.

அந்தர் கிருகம் - உள்ளறை; மூலஸ்தானம்.

அந்தர்த்தானமாதல் - மறைதல்.

அபசாரம் - தகாத நடை.

அபரிமிதம் - அளவற்ற.

அபிக்ஷணம் - அற்ப நேரம்.

அபூர்வம் - முன்னில்லாத; அதிசயமான.

அப்பிரமேயர் - அறியப்படாதவர்.

அம்பகம் - கண்.

அம்புநிதி - கடல்.

அரணியம் - காடு.

அரவிந்தம் - தாமரை.

அரிபிரமேந்திரர் - விஷ்ணு, பிரமா, இந்திரன்.

அர்த்தவிவிர்தி - பொருள் விளக்கம்.

அர்ப்பணம் - கொடுத்தல்.

அவாங் மனகோசரம் - வாக்குக்கும் மனதுக்கும் எட்டாத.

அனுநாதம் - எதிரொலி.

ஆகாரம் - வடிவம்.

ஆசங்கை - ஐயம்.

ஆசினி - ஈரப்பலா.

ஆஞ்ஞாபித்தல் - கட்டளையிடல்.

ஆதபந் தெறுக்க - வெயில் வருத்த.

ஆதிமத்யாந்தவர்ச்சிதம் - தொடக்கம் நடு இறுதியில்லாத.

ஆதுலர் - வருந்துவோர்.

ஆநந்த வேலாவலயம் - ஆநந்தக்கடலாற் சூழப்பட்டு.

ஆபாசம் - போலி நியாயம்.

ஆமந்திரணம் - அழைத்தல்.

ஆமாத்திய சேகரம் - மந்திரிகளுட் சிறந்தவர்.

ஆரணார்த்த பூரணம் - வேதப்பொருள் நிறைந்த.

ஆராமம் - இன்பமான இடம்.

ஆராமை - தாங்காமை.

ஆராவலி - முத்து மாலை.

ஆலிங்கனம் - தழுவுதல்.

ஆலோகனாதீதம் - பார்வைக்கு எட்டாத.

ஆவணம் - வீதி.

ஆவண வீதி - கடைவீதி.

ஆவாசம் - வாசம்பண்ணும் இடம் ; வீடு.

ஆக்ஷேபம் - குறை கூறல்.
இகந்து - விடுத்து.
இரஜதம் - பொன்.
ஈனன் - தாழ்ந்தவன்.
உகந்து - விரும்பி.
உதரம் - வயிறு.
உதாசீனர் - பொருட்படுத்தாதவர்.
உபயம் - இரண்டு.
உற்பதனம் - எழுதல் ; பறத்தல்.
உன்மத்தர் - பைத்தியகாரர்.
உஷற்காலம் - விடியுமுன்.
ஔஷதம் - மருந்து.
கடாட்சம் - கடைக்கண் பார்வை.
கட்கம் - வாள்.
கணம் - கூட்டம்.
கம்பிக்க - அசைய ; நடுங்க.
கவிகை - குடை.
கனகம் - பொன்.
காணம் - கொள்ளு.
கால காலன் - யமனைக் கொல்பவன்.
காலன் - யமன்.
காலாம்புதம் - இருண்ட முகில்.
கானம் - பாட்டு.
கிரண உஷ்ணம் - கிரணத்தின் சூடு.
கிருதாகிருத்திய பரியாலோசனை - செய்யத்தக்கது தகாதது என்ற ஆலோசனை.
கிருதார்த்தன் - செயலின் பலனைப் பெற்றவன்.
கிருபா சக்தி - அருட்சத்தி.
கிருபாசாகரம் - அருட்கடல்.
கின்னம் - துக்கம்.

குகப்பிரமம் - முருகக் கடவுள்.
குஞ்சராசன விருக்ஷம் - அரசமரம்.
குஞ்சித நடனம் - வளைந்து நடித்தல்.
குமுதினி - ஆம்பல்.
குழாம் - கூட்டம்.
கேசம் - மயிர்.
கேதனர் - கொடியையுடையவர்.
கைவல்யம் - தனிமை ; முத்தி.
கோசகிருகம் - திரவியசாலை.
கோசரம் - புலப்படுவது.
கோமளம் - அழகு,
கோமயம் - சாணம்.
கோஷித்தல் - ஒலித்தல்.
கௌதூகலம் - பற்று ; ஆசை.
க்ஷணபங்கம் - கணப்பொழுதில் அழிதல்.
க்ஷீரசாகரம் - பாற்கடல்.
சகளீகரித்தல் - வடிவெடுத்தல்.
சகா - தோழன்.
சதம் - நூறு.
சதுக்கம் - நாற்சந்தி.
சப்த - ஏழு.
சமாஞதிகரகிதம் - (சமான+அதிக+ரகிதம்) ஒப்புயர்வில்லாத.
சமூகம் - கூட்டம்.
சம்சாரம் - பிறவி.
சம்பாரம் - பொருள்.
சம்பாவனை - உபசாரம்.
சம்பிராப்தம் - பெறுதல்.
சம்ரக்ஷணை - காத்தல்.
சரணம் - கால்.

சரணாரவிந்தம் - (சரண + அரவிந்தம்) திருவடித் தாமரை.

சாற்காலம் - கூதிர்க்காலம்.

சருமம் - தோல்.

சரோருகம் - தாமரை.

சர்வஞ்ஞர் - எல்லாம் அறிபவர்.

சர்வந்தர்யாமித்துவம் - சர்வ வியாபகத் தன்மை.

சர்வபூதம் - எல்லாப் பொருள்கள்.

சலிலம் - தண்ணீர்.

சன்மானம் - உபசாரம்.

சாகரம் - கடல்.

சாம்பூநதம் - பொன்.

சாக்ஷுஷதீக்ஷை - நயனதீட்சை.

சிகாபந்தம் - சடைமுடி.

சிகாமணி - உத்தமர்.

சிதாகாசம் - ஞானகாசம்.

சிரக்கம்பம் - தலையசைத்தல்.

சிரத்தை - பற்று.

சிரவணம் - கேட்டல்.

சிரவேஷ்டனம் - தலைப்பாகை.

சிரேஷ்டர் - சிறந்தவர்.

சின்முத்திரை - ஞானக்குறி.

சீவர வஸ்திரம் - சந்நியாச உடை.

சுத்தோதகம் - (சுத்த + உதகம்) நல்ல நீர்.

சுப்பிராம்பரம் - வெள்ளை ஆடை.

சுரம் - ஒலி.

சுரர் - தேவர்.

சுரோத்திர ரந்திரம் - காது.

சுவர்ண பதுமினி - பொற்றாமரை.

சுவாதந்திரியம் - தன்வயம்.

சுவேதம் - வேர்வை.

சூதம் - மாமரம்.

சூர்த்த - கொடிய ; சினத்த,

சூக்ஷி - உபாயம்.

செம்படம் - சிவந்த சீலை.

சேகரம் - முடி.

சேஷம் - மிச்சம்.

சைத்தியம் - குளிர்மையான.

சோகம் - துக்கம்.

சோபை - ஒளி.

சோரத்துவம் - களவு.

சௌதமாலை - வரிசையான மாளிகைகள்.

ஜடாகலாபம் - சடாமுடி.

ஜயசீலம் - வெற்றியடையுந் தன்மை.

ஜனனி - தாய்.

ஜனித்த - தோன்றிய.

ஜன்மசாபல்யகரம் - பிறவியின் பலனைத் தருவது.

ஜீர்ணபத்திரம் - சருகு.

தயாநிதி - கருணைக்கடல்.

தர்ப்பணம் - கண்ணாடி.

தர்மார்த்தகாம மோட்சம்-அறம், பொருள், இன்பம், வீடு.

தர்மிக போதனுமயம் - தருமபோதனை நிறைந்த.

தக்ஷிணபாதம் - வலக்கால்.

தாசர் - அடியவர்.

தாபசன் - தவஞ் செய்கிறவன்.

தாபதர் - முனிவர்.

தாமம் - மாலை.

தாரகப் பிரம்ம - பிரணவம்.

தாரகாகணம் - நட்சத்திரக் கூட்டம்.

தாவல்யம் - வெண்மை.

திகர்தம் - அடிவானம்.

(ஸ்)திதி - காத்தல்.

ஸ்திரசித்தம் - நிலையானமனம்.

திரயம் - மூன்று.

திரிகரணம் - மனம், வாக்கு, காயம்.

திரிசூத்திரம் - முந்நூல்.

திருசியம் - காணத்தக்கது.

திரோபவம் - மறைத்தல்.

தீரம் - கரை.

தீனரக்ஷகர் - வருந்துவோரைக் காப்பவர்.

துவராடை - காவி வஸ்திரம்.

துளங்கி - கலங்கி.

துஷ்கரம் - செய்தற்கரியது.

(ஸ்)தூலார்த்தம் - வெளிக்கருத்து.

தெற்றி - திண்ணை.

தேஜோமயம் - ஒளிநிறைந்த.

நசை - ஆசை.

நயனம் - கண்.

நவநீதம் - வெண்ணெய்.

நவீனம் - புதிய.

நாதாந்தாதீதம் - நாதமுடிபுக்கு அப்பாற்பட்டது.

நாப்பண் - நடு.

நாராசம் - அம்பு.

நாரகேலம்—நாளிகேரம் - தேங்காய்.

நிகிலப் பிரபஞ்சம் - முழுப்பிரபஞ்சம்.

நிக்கிரகம் . வருத்துதல்.

நிச்சப்தம் - சத்தமில்லாத.

நிமலாகமம் - குற்றமில்லாத ஆகமம்.

நியந்தா - தலைவர்.

நிரந்தரம் - இடைவிடாமல்.

நிராசை - ஆசையின்மை.

நிராமயர் - குறைவில்லாதவர்.

நிர்த்தோஷர் - குற்றமற்றவர்.

நின்மலர் - மலமில்லாதவர்.

நிஷ்களர் - சுத்தமுடையவர்.

நிஷகாமனு புண்ணியம் - பற்றின்றிச் செய்த நல்வினை.

நிஷ்கிரியர் - செயலற்றவர்.

நேத்திரம் - கண்.

பக்தவத்சலர் - அடியாரில் அன்புடையவர்.

பக்தார்த்த பஞ்சனபரர் - பக்தராகிய அடியாருடைய துன்பத்தைத் தீர்ப்பவர்.

பச்சாத்தாபம் - பின்பு துக்கித்தல்.

பச்சிமம் - மேற்கு.

படிற்றொழுக்கம் - கூடாவொழுக்கம்.

பதுமம் - தாமரை.

பந்தனம் - கட்டு.

பந்தி - வரிசை.

பயோததி - (பய+உததி) பாற்கடல்.

பர - பிற.

பரசமய திமிரபானு - பிற சமயங்களாகிய இருளை நீக்கும் சூரியன்.

பரஸ்பர விரோதம் - ஒன்றுக்கொன்று மாறுன.

பரிச்சிரமம் - முயற்சி.

பரித்தியாகம் - விடுதல்.

பரிஷ்கரித்தல் - நீக்குதல்.

பவம் - பிறவி.

பவனம் - காற்று.

பவித்ரீகரணம் - சுத்திசெய்தல்.

பஸ்மோத் தூளித விக்கிரகர் - (பஸ்ம+உத்தூளித) நீறணிந்த மேனியினர்.

பஜனம் - துதி.

பாதயுகளம் - இருபாதங்கள்.
பாலாதித்தியன் - இளஞ்சூரியன்.
பாஷாண்ட தர்மம் - சமய விரோதம்.
பாஷ்பம் - நீர்.
பிரசன்ன சலிலம் - தெளிந்த நீர்.
பிரதிபாதித்தல் - விளக்குதல்.
பிரதீக்ஷித்தல் - எதிர்பார்த்தல்.
பிரபாமண்டல மண்டிதம் - ஒளியினால் விளங்குகின்ற.
பிரபாவம் - பெருமை.
பிரமதகணம் - சிவகணம்.
பிரமரம் - வண்டு.
பிரவிஸ்தீரணம் - பரப்புதல்.
பிரவீணத்துவம் - சாமர்த்தியம்.
பிரக்ஷாலனம் - கழுவுதல்.
பிராந்தி - மயக்கம்.
பிராப்தி - பெறுதல்.
பிராமிய முகூர்த்தம் - காலை.
பீதாம்பரம் - பொன்னுடை.
புசங்கம் - பாம்பு.
புண்டரீகம் - தாமரை.
பும்ச - ஆண்.
புவனத்திரய காரணர் - மூவுலகங்களையும் ஆக்குபவர்.
பூகம் - கமுகு.
பூர்வதிசை - கிழக்கு.
போனகம் - சோறு.
பௌராணிகர் - புராணகாரர்.
மஞ்சனம் - அபிஷேகம்.
மண்டலேந்திர சேகரர் - பூமியிலுள்ள அரசருக்கு முடி போன்றவர்.

மதுர - இனிய.

மந்தகாசம் - புன்சிரிப்பு.

மந்துரை - குதிரைச்சாலை.

மனோகரம் - அழகு.

மனோரதம் - ஆசை.

மாயூரம் - மயில்.

மாலாதரர் - மாலையைத் தரித்தவர்.

மாற்சரியம் - பொறாமை.

மிச்சிரம் - கலப்பு.

மித்தியா - பொய்.

மூகர் - ஊமை.

யுக்தமான - தகுதியான.

லச்சை - வெட்கம்.

லவணம் - உப்பு.

லீலை - விளையாட்டு.

லேபனம் - பூசுதல்.

வராகம் - பன்றி.

வர்ணோற்பத்தி - எழுத்துகளின் தோற்றம்.

வர்த்தனம் - வளர்ச்சி.

வர்த்தி - திரி.

வன்னி - நெருப்பு.

வாசி - குதிரை.

வாமபாகம் - இடப்பாகம்.

வாரிசம் - தாமரை.

வார்த்திகம் - முதுமை.

வாற்சல்யம் - அன்பு.

வாஸ்தவம் - உண்மை.

விக்கினம் - இடர்.

விசுவகிருண் மணிபூரகம் - விராட்புருஷனது நாபித்தானம்.

விதாண சீலபுருஷன் - கொடையாளி.

விநியோகம் - உபயோகித்தல்; கொடுத்தல்.

விமோசனம் - நீங்குதல்.

வியசனம் - துக்கம்.

வியாக்கிரம் - புலி.

வியோகம் - பிரிவு.

விலோசனம் - கண்.

விவிதம் - பலவிதம்.

விஸ்மயம் - ஆச்சரியம்.

வீக்ஷணம் - பார்வை.

வேத்திரம் - பிரம்பு.

## சுவாமிகள் துதி

கந்தமொ டுயிர்படுங்
 கணபங் கம்மெனச்
சிந்தைகொள் சாக்கியர்
 தியங்க மூகராய்
முந்தொரு மூகையை
 மொழிவித் தெந்தைபால்
வந்திடு மடிகளை
 வணக்கஞ் செய்குவாம். (௧)

பேசுபுகழ் வாதவூர்ப்
 பிறந்துபெருந் துறைக்கடலுண்டு
ஆசிலெழில் தடித்தயா
 அஞ்செழுத்தா லதிர்த்தெழுந்து
தேசமலி தரப்பொதுவார்
 சிவபோக மிகவிளைவான்
வாசகமா மாணிக்க
 மழைபொழிமா முகில்போற்றி. (௨)

எழுதரு மறைகள் தேரு
 இறைவனை எல்லிற் கங்குல்
பொழுதறு காலத் தென்றும்
 பூசனை விடாது செய்து
தொழுதகை தலைமே லேறத்
 துளும்பு கண்ணீருள் மூழ்கி
அழுதடி யடைந்த அன்பன்
 அடியவர்க் கடிமை செய்வாம். (௩)

பெருந்துறையிற் குருந்தநிழற்
 பெருமானின் அருள்பெற்றுத்
திருந்துமறைப் பொருளெமக்குச்
 செந்தமிழாற் றெருட்டியெமைப்

## சுவாமிகள் துதி

கந்தமோ டுயிர்படுங்
  கணபங் கம்மெனச்
சிந்தைகொள் சாக்கியர்
  தியங்க மூகராய்
முந்தொரு மூகையை
  மொழிவித் தெந்தைபால்
வந்திடு மடிகளை
  வணக்கஞ் செய்குவாம். (க)

பேசுபுகழ் வாதவூர்ப்
  பிறந்துபெருந் துறைக்கடலுண்டு
ஆசிலெழில் தடித்தயா
  அஞ்செழுத்தா லதிர்த்தெழுந்து
தேசமலி தரப்பொழிவார்
  சிவபோக மிகவிளைவான்
வாசகமா மாணிக்க
  மழைபொழிமா முகில்போற்றி. (உ)

எழுதரு மறைகள் தேறா
  இறைவனை எல்லிற் கங்குல்
பொழுதறு காலத் தென்றும்
  பூசனை விடாது செய்து
தொழுதகை தலைமே லேறத்
  துளும்பு கண்ணீருள் மூழ்கி
அழுதடி யடைந்த அன்பன்
  அடியவர்க் கடிமை செய்வாம். (ங)

பெருந்துறையிற் குருந்தமிழற்
  பெருமானின் அருள்பெற்றுத்
திருந்துமறைப் பொருளெமக்குச்
  செந்தமிழாற் றெருட்டியெமைப்

பிரிந்திடவே பிறப்பிறப்பும்
பேரருள்செய் பெருந்தகையைப்
பரந்தபுகழ்த் திருவாத
வூரனைத்தா ளிணைபணிவாம். (ச)

தேனூறும் வாசகங்க
ளறுநூறும் திருக்கோவை
நானூறு மழுதூற
மொழிந்தருளும் நாயகனை
வானூறுங் கங்கைநிகர்
மாணிக்க வாசகனை
யானூறு படாதவகை
யிருபோது மிறைஞ்சிடுவேன். (ரு)

பெருந்துறையிற் சிவபெருமா னருளுதலும்
பெருங்கருணைப் பெற்றி நோக்கிக்
கரைந்துகரைந் திருகண்ணீர் மழைவாரத்
துரியநிலை கடந்து போந்து
திருந்துபெருஞ் சிவபோகக் கொழுந்தேறல்
வாய்மடுத்துத் தேக்கிச் செம்மாந்து
இருந்தருளும் பெருங்கீர்த்தி வாதவூர்
அடிகளடி யிணைகள் போற்றி. (சு)

வாதவூ ராளிதனை
வான்கருணை யால்விழுங்கும்
போதவூ ரேறேநின்
பொன்னடியுங் காண்பேனே. (எ)

பரிமேல் வரவமலன்
பாடியமெய்ப் பத்தன்
இருபதமுஞ் சென்னியில்வைப்
பேம். (அ)

உ

## சமயாசாரியர் சந்தானாசாரியர்

# சரித்திர சங்கிரகம்

நால்வர் நான்மணிமாலை மூலமும் உரையும்

சந்தானாசாரியர் மாலையும்



ஸ்ரீலஸ்ரீ. ஆறுமுகநாவலர்

வித்தியாநுபாலனயந்திரசாலை

சென்னை.

விலை அணா எட்டு.

உ

கணபதி துணை.

# சமயாசாரியர் சந்தானசாரியர்

# ரித்திர சங்கிரகம்

## ல்வர் நான்மணிமாலை மூலமும் உரையும்

## சந்தானசாரியர் மாலையும்

திருமயிலை :

**சே. வே. ஜம்புலிங்கம்பிள்ளை**

இயற்றியவை.

சிதம்பர சைவப்பிரகாச வித்தியாசாலைத்
தருமபரிபாலகர்

**ச. பொன்னுஸ்வாமி அவர்களால்**

சென்னை :

**வித்தியாநுபாலனயந்திரசாலையில்**

அச்சிடப்பட்டன.

மன்மத௵ சித்திரைமீ

**விலை அணா 8.**

# உள்ளுறை

# பதிப்புரை

சைவத்தின்மேற்சமயம்வேறிலையதிற்சார்சிவமாம்
தெய்வத்தின்மேற்றெய்வமில்லெனுநான்மறைச்செம்பொருள்வாய்
மைவைத்தசீர்த்திருத்தேவாரமுந்திருவாசகமும்
உய்வைத்தரச்செய்தநால்வர்பொற்றுளெம்முயிர்த்துணையே.

சைவசமயாசாரியர் நால்வர் சந்தானாசாரியர் நால்வர் சரித்திரங்களை சுருக்கமாகவும் எளிய தமிழ் வசன நடையி லும் எழுதிச் சிறுபிள்ளைகளுக்கும் சொற்பப் படிப்புள்ள மக்களுக்கும் போதிக்க வேண்டுமென்று எனது நண்பர் சைவப்பெரியார் யாழ்ப்பாணத்துப் **புலோலி சு. சிவபாத சுந்தரம் பிள்ளையவர்கள்** சில ஆண்டுகளுக்கு முன்னர் என்னைத் தூண்டினர். அவர்கள் விரும்பியபடி எழுதி யனுப்பினேன். அவற்றுடன் நால்வர் நான்மணிமாலையும் சந்தானகுரவர் நான்மணிமாலையும் சேர்க்கும்படி கூறினேன். காகிதப் பஞ்சம் அக்காலத்தில் நிலவியதால் சரித்திரச் சுருக்கங்களை மட்டும் சமயாசாரியர் சந்தானாசாரியர் சரித்திர சங்கிரகம் என்னும் பெயரால் கொழும்பு விவேகானந்த சபையினர் மூலமாக 1948ல் அச்சிடுவித்தனர். அப்பிரதி கள் இப்போது கிடைப்பதருமையாக இருப்பதால் சிதம் பரம் நாவலர் சைவப்பிரகாச வித்தியாசாலைத் தருமபரி பாலகராகிய நண்பர் **ச. பொன்னுஸ்வாமியவர்கள்** இப் பதிப்பை அச்சிட்டுத் தனது பாடசாலையில் பாடபுத்தக மாக ஏற்படுத்த முன்வந்தனர். இச்சங்கிரகத்தோடு நால்வர் நான்மணிமாலையை உரையுடனும் (எனது நண்பர் காலஞ் சென்ற சென்னை வண்ணாரப்பேட்டை தமிழ்ப்பண்டிதர் கொ. இராமலிங்கத் தம்பிரான் எழுதிய உரையிலிருந்து அனுவதித்தது) சந்தானாசாரியர் நால்வரது மாலைகளையும் சேர்த்துள்ளேன். தனியாயுள்ள ஒவ்வொரு மாலையும் பத்துப் பாடல்களைக் கொண்டது. மெய்கண்டமாலை

திருவாவடுதுறை ஆதீனச் சுப்பிரமணியசுவாமிகள் பாடியது. மற்ற மூன்று மாலைகளும் எனது தமிழாசிரியருள் ஒருவராயிருந்த திருமயிலை வித்துவான் சண்முகம் பிள்ளை பாடியவை. இவ்வித்துவான் சந்தான குரவர் நான்மணி மாலை யெனப் பெயரிய நூலையும் பாடியுளார். அதனைத் திருவாவடுதுறை ஆதீனத்தார் சமீபத்தில் அச்சிட்டிருப்பதால் அதைச்சேர்க்காமல் மேற்குறிப்பித்த மாலைகளை மட்டும் சேர்க்கலானேன்.

நால்வர் நான்மணிமாலை சிவப்பிரகாச சுவாமிகள்செய்த சைவ நூல்களிற் சிறந்தது. அதனை திருவாவடுதுறை மாதவச் சிவஞான சுவாமிகள் தமது முடியில் எப்போதும் சூடியிருந்ததாகக் கர்ணபரம்பரைச்செய்தி. இதை எனது தமிழாசிரியர்கள் சொல்லக் கேட்டிருக்கின்றேன்.

சமயாசாரியர் சந்தானுசாரியர் சரித்திரங்களை எமது சைவமக்கள் அறியவேண்டியது அவசியமன்றோ? சமயக் கல்வியும் பிரசாரமும் இன்மையால் இப்போது சிவபக்தி குன்றி வருகின்றது. எல்லோரும் இச்சிறுநூலை ஆதரிப்பாராக! "மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலக மெல்லாம்."

சொற்கோவுந்தோணிபுரத்தோன்றலும்எஞ்சுந்தரனும்
சிற்கோலவாதவூர்த்தேசிகனும்—முற்கோலி
வந்திலரேல்நீறெங்கேமாமறைநூல்தானெங்கே
எந்தைபிரானைந்தெழுத்தெங்கே.

பூழியர்கோன்வெப்பொழித்தபுகலியர்கோன்கழல்போற்றி
ஆழிமிசைக்கல்மிதப்பில்அணைந்தபிரானடிபோற்றி
வாழிதிருநாவலூர்வன்தொண்டர்பதம்போற்றி
ஊழிமலிதிருவாதவூரர்திருத்தாள்போற்றி.

திருமயிலை
மன்மத சித்திரை 5.

சே. வெ. ஜம்புலிங்கம்.

# சமயாசாரியர் சந்தாநாசாரியர்
# சரித்திர சங்கிரகம்

## 1. சம்பந்தர்

வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்கப்
பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத
சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்
பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம்.

தென்னாட்டிலே சீகாழி யென்பது ஓர் பழம்பதி. அதற்குப் பிரமபுரம், தோணிபுரம், புகலி முதலிய பன்னிரு திருப்பெயர்கள் உண்டு. அத்திருப்பதியில் பல நூற்றாண்டு களுக்கு முன் சிவபாதவிருதயர் என்னும் பிராமணர் ஒருவர் இருந்தார். அவர் தமது பெயருக்கு ஏற்றபடி பெரிய சிவ பக்தர். அவர் காலத்தில் பௌத்தம் சமணம் முதலிய புறச்சமயங்கள் தமிழ்நாட்டில் மிகுதியாகப் பரவியிருந்தன. அதனால் சைவசமயம் குன்றியிருந்தது. இந்நிலையை யறிந்த சிவபாதஇருதயர் மிகவும் வருந்தப்பட்டார்; புறச்சமயங் களை ஒழித்துச் சைவசமயத்தை வளர்க்கத்தக்க ஓர் புதல் வரைப் பெறுதற்கு விரும்பிச் சிவபிரானை வழிபட்டுவந்தார். அவ்வழிபாட்டின் பயனாக இவரது மனைவியாராகிய பகவதி யம்மையாரிடத்தே ஓர் ஆண் குழந்தை பிறந்தது. இளமையி லேயே அக்குழந்தையினிடத்தே தெய்வத்தன்மை விளங்கி யது. அதன் மூன்றாம் வயதிலே ஒருநாள் அவர் தந்தை

யார் நீராடச் சென்றார். குழந்தையும் அவரைப் பின் தொடர்ந்து சென்றது. தந்தையார் குழந்தையைக் கரையில் விட்டுக் குளத்தில் மூழ்கினார். குழந்தை அவரைக் காணாமையால் திகைத்துக் கோயிற் கோபுரத்தை நோக்கி அம்மே அப்பா என்று விம்மி அழுதது. தோணியப்பர் உமாதேவியாரோடு எழுந்தருளிக் குழந்தைக்குக் காட்சி தந்து சிவஞானமாகிய பாலைப் பருகுவித்து அழுகையைத் தீர்த்தருளினார். தந்தையார் நீராடலை முடித்துக்கொண்டு குழந்தையிடம் வந்தார். குழந்தைக்கு ஞானோதயம் உண்டாயிருப்பதை அறிந்தார்; அதை உண்டுபண்ணிய வரைக் காட்டும்படி கேட்டார். குழந்தை தமது மனக் கண்ணிற்குத் தோன்றிய சிவபிரானைச் சுட்டிக் காட்டிய தோடு அவ்விறைவனது இலட்சணத்தையும் "தோடுடைய செவியன்" என்னுந் திருப்பதிகத்தால் அறிவித்தது. அழுத போது "அம்மே அப்பா" என்று அழைத்ததுபோல, இப் பதிகத்தின் முதலிலும் சத்தியை முதலில் வைத்திருக் கின்றார். இதனால் சத்தியாகிய திருவருள் மூலமாகத்தான் உயிர்கள் சிவத்தை யடையலாம் என்னும் உண்மை பெறப்படும்.

இக் குழந்தை இறைவனால் வலிய ஆட்கொள்ளப்பட்ட மையால் ஆளுடையபிள்ளையாரென்றும், சிவஞானம் ஊட்டப்பட்டமையால் திருஞானசம்பந்தமூர்த்தி என்றும் அழைக்கப்படும். பிள்ளையாரின் சிறப்பைக் கேள்வியுற்ற திருநாவுக்கரசர் திருநீலகண்டப்பெரும்பாணர் முதலிய பல சிவனடியார்கள் சீர்காழிக்கு எழுந்தருளினார்கள். பெரும் பாணர் பிள்ளையார் பாடும் திருப்பதிகங்களையெல்லாம் வீணையில் வாசித்துக்கொண்டு பிள்ளையாரோடு இணைபிரியா மல் இருந்துவந்தார்.

பிறகு, பிள்ளையார் தலயாத்திரையாகச் சிதம்பரம் முதலிய தலங்களுக்குப் போனார். தந்தையார் இவரைத் தோளின்மேலே தூக்கிச் சென்றார். இவர் சிதம்பரத்தைத் தரிசித்தபோது அப்பதியிலுள்ள தில்லைவாழந்தணர்களைச் சிறப்பித்து ஒரு திருப்பதிகம் பாடினார். திருக்கோலக்காவில் இவருக்குப் பொற்றாளம் அளிக்கப்பட்டது. பின்பு திருநெல்வாயிலரத்துறையை அடைந்தார். அங்கே அவருக்கு முத்துப்பல்லக்கும் முத்துக்குடையும் முத்துச் சின்னங்களும் சிவபிரானால் அருளப்பட்டன.

திருப்பாச்சிலாச்சிரமம் என்னும் தலத்தை யடைந்தபோது, அங்குள்ள கொல்லிமழவன் என்னுஞ் சிவநேசனது மகள் முயலகன் என்னும் கொடிய நோயினால் வருந்துவதை அறிந்து, அவள் நோயை நீக்கும்படி ஒரு திருப்பதிகம் பாடினார். அவள் உடனே நோய் நீங்கப்பெற்றுப் பிள்ளையாரை வணங்கினாள். அப்பால், கொங்கதேசத்திற்குச் சென்றார். திருச்செங்கோட்டிற்குச் சென்றபோது, அவருடைய திருக்கூட்டத்தினர் பனி மிகுதியால் சுரங்கண்டு வருந்தினர். பிள்ளையார் உடனே திருநீலகண்டப்பதிகம் பாடினார். பனிப்பிணி அந்நாடு முழுதும் விட்டொழிந்தது.

திருப்பராய்த்துறை, வலஞ்சுழி, பழையாறை முதலிய தலங்களைத் தரிசித்துக்கொண்டு அவர் பட்டீச்சரம் சென்றார். அங்கே அவருக்கு முத்துப்பந்தர் அளிக்கப்பட்டது. பிறகு திருவாவடுதுறைக்கு வந்தார். அப்போது தந்தையார் யாகஞ் செய்வதற்குப் பொருள் வேண்டுமென்று பிள்ளையாருக்கு விண்ணப்பித்தார். ஒரு திருப்பதிகம் பாடிய அளவில் பொன் உலவாக்கிழியொன்று ஆவடுதுறையரனால் அருளப் பட்டது. அதைத் தந்தையாரிடம் கொடுத்தார்.

தருமபுரம் திருநள்ளாறு முதலிய தலங்களுக்கும் போய்ச் சாத்தமங்கையை அடைந்தார். அங்கே திருநீல நக்கரைக் கண்டு அவருடன் சிலநாள் தங்கினார். பின்னர், திருச்செங்காட்டங்குடியில் சிறுத்தொண்டரைக் கண்டார். இவ்விரு தொண்டர்களையும் தமது திருப்பதிகங்களிலே சிறப்பித்துப் பாடினார். சின்னாளாயபின்பு திருமருகலுக்குப் போய்த் தரிசனஞ்செய்துகொண்டிருந்தார். அங்கே ஒருவன் பாம்பு கடித்து இறந்தான். அவனுடன் வந்த அவனது மாமன் மகளாகிய கன்னிகையின் துக்கத்தை நீக்கத் திரு வுளங்கொண்டு அவர் ஒரு திருப்பதிகம் பாடினார். உடனே அவ்வணிகன் உயிர்த்தெழுந்து பிள்ளையாரை வணங்கினான்.

பின்பு, திருப்புகலூருக்குச் சென்று அங்கேயிருந்த முருகநாயனாருடைய திருத்தொண்டைச் சிறப்பித்துத் திருப்பதிகமொன்று பாடினார். பின்னர் அப்பர்சுவாமியைச் சந்தித்து அவருடன் திருவீழிமிழலையை அடைந்தார். அப்போது பஞ்சத்தாற் பலர் பசி நோயினால் வருந்தினர். பிள்ளையாருக்கும் அப்பர்சுவாமிக்கும் தனித்தனி ஒவ்வொரு பொற்காசு தினந்தோறும் சிவபிரானால் அக்கோயிலில் வைத்தருளப்பட்டது. அக்காசைக்கொண்டு இருவரும் தமது திருக்கூட்டத்தாருக்குக் குறைவின்றி அமுது படைத்து வந்தனர்.

சிலநாட்களுக்குப்பின் இருவரும் பல தலங்களை வணங்கிக்கொண்டு வேதாரணியத்துக்குச் சென்றனர். அங்கே வேதங்களாற் பூசிக்கப்பட்டுத் திருக்காப்பிடப்பட்ட கோயிற் றிருவாயிலைத் திறக்க அப்பமூர்த்திகளும், அடைக்கப் பிள்ளையாரும் திருப்பதிகங்களைப் பாடியருளி னார்கள். இப்படி இருவரும் வேதாரணியத்திலே இருந்த

போது, மதுரையிலிருந்து பாண்டியனுடைய மனைவியாரும் (மங்கையர்க்கரசியார்) முதல் மந்திரியாரும் (குலச்சிறையார்) அனுப்பிய சில தூதுவர்கள் வந்து, பாண்டிநாட்டிலே சைவசமயம் குன்றியதாகவும் சமணசமயம் பரவியிருப்பதாகவும் அதனால் சுவாமிகள் மதுரைக்கு எழுந்தருளிச் சைவத்தை நிலைநாட்டவேண்டியது அவசியமென்றும் முறையிட்டனர். பிள்ளையார் அப்பர்சுவாமிகளை வேதாரணியத்திலேயே இருக்கச்செய்து தாம் மதுரைக்குப் பிரயாணமானார். பிள்ளையாரது வருகையைக் கேள்வியுற்ற பாண்டிமாதேவியாரும் குலச்சிறையாரும் அவரை எதிர்கொண் டழைத்தனர். அவ்விருவரது அருமைத் திருத்தொண்டுகளை அவர் ஒரு திருப்பதிகத்திற் சிறப்பித்தார். பின்பு மதுரைச் சொக்கலிங்கப் பெருமானைத் தரிசித்து ஒரு திருமடத்தில் தமது திருக்கூட்டத்தவரோடு எழுந்தருளி யிருந்தார்.

பிள்ளையாரையும் அவரைச் சேர்ந்த சிவனடியார் கூட்டத்தையும் கண்ட சமணர்கள் பொறாமைகொண்டு பாண்டியராசனிடம் போய் முறையிட்டனர். அச்சிவனடியார்களை மதுரையிலிருந்து துரத்திவிட உபாயம் யாதென்று பாண்டியன் அவர்களையே கேட்டான். அவர்கள் நாயனார் தங்கியுள்ள மடத்தில் தீவைப்பதே தகுதியென்று விடை கூறினர். அரசன் அவ்வுபாயத்திற்குச் சம்மதிக்கவும், பிள்ளையாரது மடத்திலே நெருப்பு வைக்கப்பட்டது. மடத்திலிருந்த திருக்கூட்டத்தினர் விரைந்து நெருப்பை அணைத்தார்கள்; பின்னர் இச்செய்தியைப் பிள்ளையாருக்குத் தெரிவித்தனர். சமணர்களின் செயல் மிகவும் தீயதானதால் பிள்ளையார் அரசனைத் தண்டித்து அவனது தீய வினையைத் தொலைப்பதற்காக "செய்யனே திருவாலவாய்" என்னுந் தொடக்கமுடைய திருப்பதிகத்தைப் பாடியருளினர்.

உடனே பாண்டியனுக்கு வெப்புநோய் உண்டாயிற்று. சமணகுருமார்கள் பல சிகிச்சைகள் செய்தும் அந்நோய் நீங்கவில்லை. மங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாரும் சம்பந்தசுவாமிகளை வரவழைத்தால் நோய் தீருமென்று பாண்டியனிடஞ் சொன்னார்கள். வரவழைத்தற்குப் பாண்டியன் சம்மதித்தான். அவ்வாறே பிள்ளையாரை அழைக்கவும், அவர் சிவசந்நிதானத்திற்குச் சென்று வணங்கியபின் பாண்டியனுடைய மாளிகைக்கு வந்தார். சுவாமிகளது வருகையை அறிந்த சமணர்கள் மனம் புழுங்கி அவரைச் சமயவாதத்திற்கு அழைத்தனர். பாண்டியன் பிள்ளையாரையும் சமணர்களையும் நோக்கித் தனக்கு வந்துள்ள நோயை எவர் விரைவாகத் தீர்க்கின்றனரோ அவரே வென்றவராவர் என்றான். சமணர்கள் அரசனது இடப்பாகத்து நோயைத் தாங்கள் தீர்ப்பதாகவும், மற்றைப் பாகத்து நோயைப் பிள்ளையார் தீர்க்கவேண்டுமென்றும் உறுதிகொண்டார்கள். அப்படியே அவர்கள் பாண்டியனுடைய இடப்பாகத்தை மயிற்பீலியினாலே தடவி மந்திரங்களை உச்சரித்தனர். வெப்பு நோய் அதிகரித்ததேயன்றிச் சிறிதுங் குறைபடவில்லை. பிள்ளையார் திருநீற்றுப்பதிகம் பாடி வலப்பாகத்திலே திருநீற்றைப் பூசியதளவில் அப்பாகத்து நோய் தீர்ந்தது. இடப்பாகத்து நோயைச் சமணர்கள் நீக்க முடியாமையால் பிள்ளையாரே அதனையுந் தீர்க்க நேர்ந்தது. பாண்டியன் உடனே சைவ சமயத்தை மேற்கொண்டான்.

அப்பால், சமணர்கள் தங்கள் சமய மகிமையை மேலே காட்டுதற்கு விரும்பினார்கள். அதற்காக இருபக்கத்தாரும் தத்தம் சமயக்கருத்தை ஏட்டிலே எழுதி நெருப்பிலிடத் தீர்மானித்தனர். சமணர்கள் தம்மந்திரத்தை எழுதியிட்ட ஏடு வெந்து சாம்பராயிற்று. சுவாமிகள் "போகமார்த்த

பூண்டுலைபாள்" என்னுந் திருப்பாசுரத்தை எழுதியிட்ட ஏடோ பச்சையாய் இருந்தது. இரண்டாவது முறையாகத் தங்கள் ஏட்டை வைகை ஆற்றிலே இடத் தீர்மானித்து எதிர்நோக்கிச் செல்லும் ஏடே மெய்ப்பொருளுடையது என்று ஒட்டினார்கள். ஆனால், சமணர்களிட்ட ஏடு கடலை நோக்கிச் சென்றது. பிள்ளையாரிட்ட ஏடோ நீரைக் கிழித்துக்கொண்டு எதிரே போனது. இதனால் சமணசமயம் பொய்ந்நெறி என்று நாட்டப்பட்டது. அரசன் சைவனாக மாறினமையால் சமணசமயம் பாழ்பட, சைவம் தழைக்கலாயிற்று. சைவசமயத்தைச்சார விருப்பமில்லாத சமணர்கள் தாங்களே கழுமரங்களில் ஏறித் தங்கள் உயிரை மாய்த்தனர்.

பிறகு பிள்ளையார் பாண்டிநாட்டிலுள்ள ஏனையதலங்களை வணங்கிக்கொண்டு மீண்டுஞ் சோழநாட்டை அடைந்தார். அவர் முள்ளியாற்றங்கரையைக் கிட்டியபோது ஆற்றில் வெள்ளம் புரண்டு ஓடுவதைக் கண்டார். வெள்ளப் பெருக்கினால் ஆற்றை ஓடத்தாற்கடக்க முடியாதாயிற்று. எதிர்க்கரையிலுள்ள கொள்ளம்பூதூரைப் பிள்ளையார் வணங்க விரும்பினமையால், ஓடத்தின்மீது தம்மடியவருடன் ஏறி "கொட்டமே கமழும்" என்னும் திருப்பதிகத்தைப் பாடினார். திருவருளால் ஓடம் அக்கரை அடைந்தது.

அதன்பின்னர், தெளிச்சேரியை நோக்கிச் சென்றார். போதிமங்கையிலுள்ள பௌத்தர்கள், சிவனடியார்களைக் காணப் பொறாமைகொண்டு, அவர்களை வாதுக்கழைத்தனர். அப்போது சுவாமிகளது எழுத்தாளர் பஞ்சாக்கரப்பதிகத்திலுள்ள "புத்தர் சமண் கழுக்கையர்" என்னுந் திருப்பாடலைச் சொல்லி பௌத்தர்களின் தலைவனான புத்தநந்தியைத்

தண்டித்தனர். இதைக் கண்டு மருண்டோடிய பௌத்தர்கள், மீண்டும் வந்து மந்திரவாதமின்றித் தருக்கவாதத்திற் கழைக்கவும், பிள்ளையார் இசைந்தருளினர். சம்பந்தர் புத்தனோடு வாதஞ்செய்து அவனை வென்று சைவத்தை நாட்டினார். புத்தர்கள் தங்கள் சமயம் பொய்ச்சமயம் என்றறிந்து சைவரானார்கள். பிள்ளையார் பின்பு திருநெய்த்தானம் முதலிய தலங்களுக்குப் போய்க் கடைசியாகச் சீகாழிக்கு வந்து அங்கே சிலநாள் தங்கியிருந்தார்.

பின்பு அவர் தொண்டைநாட்டிலே யாத்திரைசெய்ய விரும்பிப் புறப்பட்டார். பல தலங்களை வணங்கிக்கொண்டு திருவோத்தூரை அடைந்தார். அங்கிருந்த சிவனடியார் ஒருவர் தாம் பரமசிவனுக்கு ஆக்கும் பனைகளெல்லாம் ஆண் பனைகளாகிக் காயாதொழிகின்றன என்றும், அதனால் தம்மைச் சமணர்கள் கேலிசெய்கிறார்களென்றும் சொல்லி முறையிட்டார். நாயனார் திருக்கோயிலுக்கு எழுந்தருளிப் பாடிய ஒரு திருப்பதிகத்தில் இப்பனைகளைக் குறிப்பித்தருளினார். அவ்வளவில் அவைகளெல்லாம் பெண்பனைகளாக மாறிப் பூத்துக் காய்க்கத்தொடங்கின. இவ்வற்புதத்தைக் கண்ட சமணர்கள் திகைத்தனர். பலர் சைவராயினர். சுவாமிகள் அவ்விடத்தினின்றும் நீங்கி திருவாலங்காடு, திருக்காளத்தி முதலிய தலங்களுக்குச் சென்று வணங்கிக் கடைசியாகத் திருவொற்றியூரை வந்தடைந்தார்.

அக்காலத்திலே, திருமயிலாப்பூரிலே சிவநேசச்செட்டியாரென்னும் வணிகப்பிரபு ஒருவர் இருந்தார். அவர் பெருஞ் சிவனடியவர். அவருக்குப் பூம்பாவை என்றொரு மகள் இருந்தாள். அவர் சம்பந்தரது மகிமையைக் கேள்வியுற்று அவர்மீது அளவில்லாத அன்புடையராய் விளங்கின

மையால் தம் மகளை அவருக்கே மணஞ்செய்விக்க நிச்சயித்திருந்தார். ஒருநாள் அப்பெண் திடீரெனப் பாம்புகடித்திறந்தாள். அப்பெண்ணின் சவத்தைத் தகனஞ்செய்து எலும்பையும் சாம்பரையும் ஒரு குடத்தில் சேமித்து வைத்திருந்தார். பிள்ளையார் திருவொற்றியூருக்கு வந்திருப்பதைச் செட்டியார் அறிந்து அவரிடஞ்சென்று நிகழ்ந்ததையறிவித்துத் திருமயிலைக்கு அவரைத் தம்மோடு அழைத்துச் சென்றார். பிள்ளையார் சிவநேசரது கருத்தை முடிக்கவும், சமணம் பௌத்தம் முதலிய புறச்சமயங்களை அழிக்கவுந் திருவுளங்கொண்டு பூம்பாவையின் எலும்புஞ் சாம்பரும் நிறைந்த குடத்தைத் திருக்கோயிலினருகே கொண்டுவரச் செய்து "மட்டிட்ட புன்னை" என்னும் திருப்பதிகத்தைப் பாடினர். உடனே பூம்பாவை குடத்திலிருந்து வெளியே தோன்றினர். இவ்விநோதத்தைக் கண்ட புறச்சமயிகள் அதிசயப்பட்டார்கள்.

பிறகு சிவநேசரிடம் விடை பெற்றுக்கொண்டு திருமயிலாப்பூரை அகன்று திருவான்மியூர், திருக்கழுக்குன்றம் முதலிய பதிகளை வணங்கிக்கொண்டு சிதம்பரத்தையடைந்து அங்குச் சிலநாள் தங்கியிருந்தார். தந்தையார் முதலிய சுற்றத்தவர் சீர்காழியிலிருந்து அங்கே வருதலும் அவர்களுடன் சீர்காழிக்குச் சென்றார்.

சீர்காழியில் வசிக்கும் நாளிலே, தந்தையாரும் பிறரும் சுவாமிகளைத் திருமணஞ்செய்தருள வேண்டினர். வைதிக நெறியை நிலைநிறுத்தவேண்டிச் சுவாமிகள் உடன்பட்டு திருநல்லூர் நம்பாண்டார்நம்பி என்பவருடைய மகளை வேத விதிப்படி விவாகஞ் செய்தருளித் தமது திருமணத்தைக் காணவந்தவர்கள் எல்லோருஞ் சூழத் திருமணக்கோலத்தோடு திருநல்லூர்ப் பெருமணத் திருக்கோயிலை யடைந்து

"கல்லூர்ப் பெருமணம்" என்னும் திருப்பதிகம் பாடியருளி னர். அப்போது ஒரு பெருஞ் சோதி தோன்றிற்று. அவர் நமச்சிவாயத் திருப்பதிகம் பாடி அதைப் பூசித்தபின்பு, எல்லோரையும் அச்சோதியுட் புகுக்கித் தாம் கடைசியாகத் தம்முடைய மனைவியாருடன் அச்சோதியை வலஞ்செய்து பணிந்து அதனுள்ளே புகுந்து முத்தியடைந்தார். அப்படி அவர் முத்தியடைந்த தினம் வைகாசி மூலமாகும். அப்போது அவருக்கு வயது பதினாறு.

ஞானசம்பந்தர் மூன்றும் வயதிலே தெய்விகத்தோடு விளங்கினமையால் அவர் சாமுசித்தரெனப்படுவர். சாமுசித்தராவார் முற்பிறவிகளிலே சரியை கிரியை யோகம் முதலிய மார்க்கங்களிற் றலைசிறந்து இப்பிறப்பில் ஞானத்தோடு விளங்குபவர். இவர் அதீத ஞானத்தைப் பெற்றிருந்தமையால் சுப்பிரமணியர் அவதாரமென்று சிலர் கூறுவர். அருணகிரியார், சிதம்பரசாமிகள் முதலியோர் சம்பந்தர் செய்த அற்புதங்களைச் சுப்பிரமணியர்மேல் ஏற்றிக் கூறுவர். சுப்பிரமணியப் பெருமானுக்கும் சிவபெருமானுக்கும் பேதமின்மையால் சம்பந்தரைச் சுப்பிரமணியர் அவதாரமென்று கூறுதல் சைவ சித்தாந்த சாத்திரத்திற்கு விரோதமாகும் சுப்பிரமணியப் பெருமானுடைய பதவியைப்பெற்ற ஓர் பக்குவ ஆன்மா சம்பந்தராகப் பிறந்ததென்று கொள்ளுதலே ஏற்புடையதாகும். சம்பந்தருக்கும் இறைவனுக்கும் இருந்த தொடர்பு மகனுக்கும் தந்தைக்கு முள்ளதை ஒக்கும். பிள்ளையாருக்கு வேண்டிய வசதிகளையெல்லாம் தந்தையாகிய சிவபெருமானே அமைத்துக் கொடுத்தமை இத்தொடர்பை உறுதிப்படுத்தும்.

சுவாமிகள் தமது மூன்றும் வயதுமுதல் பதினாறும் வயதுவரையில் அதாவது பதின்மூன்று ஆண்டுகள் தமிழ்

நாட்டிலுள்ள பல இடங்களுக்குச் சென்று தமது தேவாரப் பாடல்கள் மூலமாகவும் பல அற்புதங்கள் வாயிலாகவும் சைவத்தைப் பரவச்செய்து, புறச் சமயங்களை மங்கச் செய்தார். சுவாமிகள் அற்புதங்களை அதிகமாகக் கையாண்டது என்னெனின், சமயக் கொள்கைகளைத் தருக்க முறையாக வாதிப்பதிலும்பார்க்கச் சாமானிய சனங்களுக்கு உணர்ச்சியை உண்டுபண்ணக் கூடியவை இவ் வற்புதங்களேயாதலின் என்க. இவர் அருளிய பாடல்களுக்குத் தேவாரம் என்று பெயர். இவை முதல் மூன்று திருமுறைகளாக வகுக்கப்பட்டுள்ளன. இவர் அருளிச்செய்த திருப்பதிகத் தொகை 16000 அவற்றுள் இப்போதுள்ளவை 384. இவரது பாடல்பெற்ற தலங்கள் 216. சுவாமிகள் பல சமயங்களை நிராகரித்துச் சைவத்தை நிலைநாட்ட வந்தவராதலின் தாம் அருளிச்செய்த ஒவ்வொரு பதிகத்திலும் சைவத்தின் ஏற்றத்தையும் பௌத்தம் சமணம் முதலியவற்றின் தாழ்வையும் எடுத்துக் கூறுவர். இவரது தேவாரங்கள் இயல் இசை நாடகம் ஆகிய முத்தமிழ் இலக்கணங்களும் விரவியுள்ளன. இதனால் இவரை முத்தமிழ் விரகரென்பர். இவரைப் பரசமயகோளரி, சைவசிகாமணி, பாலறுவாயர், சண்பையர் காவலன், கவுணியர் தலைவன், சிவஞானக்கன்று, காழி வேந்தர் முதலிய பல பெயர்களால் ஆன்றோர் அழைப்பர்.

தமிழ்நாட்டிலே சைவ சமயமானது புறச்சமய இருளாற் சூழப்பட்டுச் சற்றுத் தன்னொளி குன்றியிருந்த காலத்திலே, சம்பந்தர் தோன்றித் திருநீற்றின் ஒளியை எங்கும் பரப்பியமையாலும் புறச்சமய இருளைப் போக்கினமையாலும் இவர் புரிந்தசிவதொண்டு ஏனையோர் செய்ததிலும் மேலாகப் போற்றப்படுகின்றது. இதனாற் போலும் நம்பியாண்டார் நம்பிகள் சுவாமிகள் மீது ஆறு

பிரபந்தங்கள் பாடியது. நம்பிகளுக்குப் பின்வந்த சேக்கிழாரும் தாம் பாடிய பெரிய புராணத்தில் மூன்றிலொரு பகுதி சம்பந்தருக்குக் கொடுத்துள்ளார்.

சுவாமிகள் காலத்தில் விளங்கிய மெய்யடியார்கள்:— திருநாவுக்கரசர், சிறுத்தொண்டர், திருநீலநக்கர், முருகர், திருநீலகண்ட யாழ்ப்பாணர், குங்குலியக்கலயர், குலச்சிறையர், நின்றசீர் நெடுமாறர், மங்கையர்க்கரசியார் முதலியோர்.

சுவாமிகளால் தேவாரத்தில் பாராட்டப்பட்டவர்கள்:— சண்டேசுரர், கண்ணப்பர், கோச்செங்கட் சோழர், நீலநக்கர், முருகர், சிறுத்தொண்டர், மங்கையர்க்கரசியார், குலச்சிறையார், தில்லைவாழந்தணர்கள் முதலியோர்.

சுவாமிகளுடன் முத்தியடைந்தவர்கள்:—திருநீல நக்கர், முருகர், சிவபாத விருதயர், நம்பாண்டார் நம்பி, திருநீலகண்டப்பெரும்பாணர் முதலிய திருத்தொண்டர்களும் அவர்கள் மனைவிமக்களும்.

## நாயனாரின் சரித்திரத்தைக் கூறும் நூல்கள்

1. பதினொராந் திருமுறைப் பிரபந்தங்கள் (6)
2. பெரிய புராணம்.
3. சீகாழித்தல புராணம்.
4. ஆச்சாபுரத்தலபுராணம் முதலியன

## துதி

பண்டைவல் வினையினாற் பாயு டுத்துழல்
குண்டரை வென்றுழன் கூடல் வைகியே
வெண்டிரு நீற்றொளி விளங்கச் செய்திடு
தண்டமிழ் விரகன்மெய்த் தாள்கள் போற்றுவாம்.

## 2. அப்பர்

திருநாவுக் கரசுவளர் திருத்தொண்டின் நெறிவாழ
வருஞானத் தவமுனிவர் வாகீசர் வாய்மைதிகழ்
பெருநாமச் சீர்பரவ லுறுகின்றேன் பேருலகில்
ஒருநாவுக் குரைசெய்ய வொண்ணுமை யுணராதேன்.

தென்பெண்ணை யாற்றைச் சூழ்ந்த திருமுனைப்பாடி நாடென்பது இப்போதுள்ள கூடலூர்ச் சில்லாவாகும். அநேக நூற்றாண்டுகளுக்கு முன்னே அந்நாட்டிலேயுள்ள திருவாமூரிலே புகழனார் என்னும் வேளாளர் தமது மனைவியாராகிய மாதினியா ரென்பவரோடு வாழ்ந்து வந்தார். அவருக்குத் திலகவதியா ரென்னும் பெண்ணும் மருணீக்கியார் என்னும் பிள்ளையும் பிறந்தன. திலகவதியாரும் மருணீக்கியாரும் சிறுவயதிலே தங்கள் தாய் தந்தையரை இழந்தனர். ஆயினும், இளமையிலேயே மருணீக்கியார் சகல நூல்களையும் படித்து வல்லவராயினர். அவருக்கு யாதொரு குறைவும் நேரிடாதபடி தமக்கையாராகிய திலகவதியார் துணைபுரிந்துவந்தார்.

மருணீக்கியார் சரீரமும் செல்வமும் நிலையில்லாதவை என்று நினைத்துப் பல தருமங்களைச் செய்துவந்தார். இவ்வுலகவாழ்வு மண்ணுவது திண்ணமாதலால் மாயமானது என்று கண்டு இல்லறவாழ்க்கையை வெறுத்தார். ஆயினும் பாடலிபுத்திரம் என்னும் இடத்திற்குச் சென்று சமணர்களோடு சேர்ந்து அவர்களுடைய போதனையினாலே மயங்கிச் சமணசமயமே மோட்சத்தைத் தரத்தக்கதென்று எண்ணி அதிற் புகுந்தார். அச்சமய நூல்களை யெல்லாங்கற்றுத் தேர்ச்சிபெற்றார். புத்தர்களுடன் வாதஞ்செய்யக்கூடிய வல்லமை படைத்தவராகிச் சமணசமயக் குருவாக விளங்கினர்.

இவர் இவ்வாறிருக்க, தமக்கையாராகிய திலகவதியாரோ திருவதிகைவீரட்டானக் கோயிலிலே திருத்தொண்டுசெய்துவந்தார்; தமது தம்பியாருடைய நிலைமையை ஒரு நாள் நினைத்து வருந்தினார். அவரை மீட்டும் சைவ சமயத்துக்குத் திருப்பும் ஆசையோடு சிவபிரானைத் துதித்தார். அப் பிரானது திருவருளால் மருணீக்கியாரது வயிற்றிலே கொடிய சூலைநோய் உண்டாயிற்று. அந்நோய் அவரைமிகவும் வருத்தியது. எவ்வித சிகிச்சையாலும் நோய் நீங்கவில்லை. சமணர்களெல்லோரும் அவரைக் கைவிட்டனர். அத்தருணத்தில் அவர் தம்முடைய சகோதரியாருக்குத் தமது தேக நிலைமையைத் தெரிவித்தார். திலகவதியார் சமணர்களுடைய பள்ளிக்குத் தாம்வர முடியாதென்று மறுத்துவிட்டார். அதனால் மருணீக்கியார்தாமே தமது சகோதரியாரிடம் போக நினைத்தார். அவ்வாறே ஒருவருங் காணாதபடி ஓர் இரவில் தமது தமக்கையாரது திருமடத்தை யடைந்து அவரது பாதங்களில் வீழ்ந்து வணங்கித் தம்மைக் கரையேற்றியருளும்படி வேண்டினார்.

வேண்டவும், தமக்கையார் பிறவிப்பிணி முதலிய சகல நோயையும் நீக்க வல்ல வைத்தியநாதராகிய சிவபெருமானையே வணங்கும்படியும் அவருக்கே தொண்டு பூண்டொழுகும்படியும் உபதேசித்துத் திருநீற்றை எடுத்து அவருக்குப் பூசினார். மறுநாட்காலையில் அவரை யழைத்துக் கொண்டு திருவதிகைவீரட்டானத்திற்குப் போனபோது, மருணீக்கியாருக்குத் தமிழ்க் கவி பாடும் வல்லமை உண்டாகவும், அவர் வீரட்டானேசுவரர் மீது "கூற்றாயின" என்னுந் திருப்பதிகத்தைப் பாடியருளினார். உடனே அவரைப் பிணித்து வருத்திய சூலைநோய் நீங்கிற்று. அவருடைய பாடல்கள் இனிமை மிகுந்து விளங்கியமையால், அவருக்கு

"நாவுக்கரசு" என்னும் காரணப்பெயர் இறைவனாற் சூட்டப் பட்டது. நாயனார் மனம் மொழி மெய்களாற் சிவபெருமானுக்குத் திருத்தொண்டு செய்துவந்தார்.

சுவாமிகளுடைய செய்கையைக் கேள்வியுற்ற சமணர்கள் பொறாமை கொண்டு, அவரை அழைப்பித்துத் தண்டிக்கும்படி, அரசனுக்குக் கற்பித்தார்கள். அவன் அவ்வண்ணமே சுவாமிகளை வருவித்துச் சுண்ணாம்பு அறையில் இடுவித்தான். ஏழுநாட் சென்றபிறகு அவ்வறையைத் திறந்து பார்த்தார்கள். நாயனார் சிறிதும் வருத்தமின்றி இருந்ததைக் கண்டு அதிசயித்தார்கள். அதன்பின், நஞ்சு கலந்த பாற்சோற்றை உண்பித்தார்கள். நஞ்சும் அமுதமாயிற்று. இவற்றோடு அடங்காமல் அவரைக் கொல்லும்படி யானையை ஏவினார்கள். நாயனார் ஒரு திருப்பதிகம்பாடிய அளவில், அவரைக் கொல்லவந்த யானை அவரை வணங்கிச் சென்றது. கடைசியாக அவரைக் கல்லோடு சேர்த்துக்கட்டிக் கடலிலே தள்ளினார்கள். நாயனார் சிவபெருமானது திருவைந்தெழுத்தை நினைத்துக் "கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும், நற்றுணையாவது நமச்சிவாயவே" என்னும் திருப்பதிகத்தைப் பாடக் கல்லே தெப்பமாக மிதக்கக் கரையேறினார். இவற்றையெல்லாம் அறிந்த பல்லவராசன் நாயனாரை வந்து வணங்கிச் சைவனானான்.

பின்பு, சிவதலயாத்திரை செய்து பெண்ணாகடத்தை அடைந்தார். அங்கே திருக்கோயில்கொண்டுள்ள சிவக்கொழுந்தீசர் சுவாமிகள்மீது சூலக் குறியையும் இடபக் குறியையும் அவர் வேண்டுகோளின்படி பொறித்தருளினார். பின்னர், சிதம்பரம் முதலிய திருப்பதிகளுக்குச் சென்று திருப்பதிகங்கள் பாடினார்.

பின்னர்ச் சம்பந்தமூர்த்தி நாயனாரது மகிமையைக் கேள்வியுற்று அவரைக் காணவிரும்பிச் சீகாழிக்குப் போனார். சுவாமிகளது வருகையை அறிந்த பிள்ளையார் அவரை எதிர்கொண்டழைத்தார். நாவுக்கரசர் பிள்ளையாரைக் கீழே விழுந்து பணிய, அவர் சுவாமிகளைத் தூக்கிவிட்டு "அப்பரே" என்று முறை பாராட்டி வணங்கினர். அது முதல் இருவரும் பல சிவதலங்களுக்கு ஒன்றாகப் போய்ப் பதிகம்பாடி வருவாராயினர். திருச்சத்திமுற்றத்தை அடைந்தபோது நாவுக்கரசர் தம்மீது திருவடி சூட்டியருளும்படி சிவபிரானை வேண்ட, அவர் அவ்வாறே திருநல்லூரில் அருள்புரிந்தார்.

சிலநாட் கழிந்ததும், திங்களூரிலுள்ள அப்பூதியடிகள் பலதருமங்களைச் சுவாமிகள் பெயராற் செய்துவந்தமையைச் சுவாமிகள் கேள்வியுற்று அவரைக் காணச் சென்றார். அப்பூதியார் அப்பரைப் போசனத்திற்கு அழைத்துவிட்டு, தம் மூத்தமகனை வாழையிலை அரிந்துகொண்டு வரும் பொருட்டுத் தோட்டத்திற்கு அனுப்பினர். இலை யரியும் போது அம்மகன் பாம்பு கடிக்க இறந்தான். அவன் இறந்தமைக்குத் துக்கியாமல், அப்பருக்கு அமுது படைத்தலை பெருஞ் சிவபணியாகக் கொண்ட அடிகளும் அவர் மனைவியாரும் சுவாமிகளைத் திருவமுது செய்தருள அழைத்தனர். அங்கு நிகழ்ந்ததைத் திருவருளால் அறிந்த சுவாமிகள் ஒரு திருப்பாசுரம் பாடி இறந்த மகனை உடனே எழுப்பியருளினர். அப்பூதியாரின் திருத்தொண்டைச் சிறப்பித்துத் தமது திருப்பதிகத்திலும் பாடினார்.

சிலகாலத்திற்குப் பின் அப்பர் சம்பந்தருடன் வேதாரணியத்துக்குப் போனார். அங்குள்ள சிவாலயத்திற்குப்

போனபோது, வேதங்களால் அருச்சித்துத் திருக்காப்பிடப்பட்ட கதவு அந்நாள்வரையும் அடைக்கப்பட்டேயிருந்தமையைக் கண்டார்கள். அதைத் திறப்பிக்க எண்ணி, அப்பர் திருப்பதிகம் பாடினார். பிள்ளையார் மீட்டும் அடைக்கப் பாடினார். அதுமுதல் அக்கதவைத் திறத்தலும் மூடுதலும் இலகுவாயின.

பின்னர், பிள்ளையார் மதுரைக்குப் போகவும், அப்பர் திருவானைக்கா முதலிய தலங்களை வணங்கித் திருப்பைஞ்ஞீலியை நோக்கிச் சென்றார். வழியிலே அவருக்குப் பசியும் தாகமும் வந்தன. இவற்றை நீக்கத் திருவுளங்கொண்ட சிவபெருமான் வழியிலே ஒரு சோலையும் குளத்தையும் உண்டாக்கிப் பிராமண வேடம் பூண்டு வந்து இவருக்குச் சோறும் தண்ணீரும் கொடுத்துப் பசியைத் தீர்த்தருளினார். அதன்பிறகு, திருக்காளத்தி முதலிய தலங்களைத் தரிசித்தார். திருக்காளத்தியில் இருக்கும்போது உத்தரகைலாசத்தைத் தரிசிக்க விரும்பினார். திருக்காளத்தியிலிருந்து புறப்பட்டுக் காசி முதலிய வடநாட்டுத் திருப்பதிகளை வழிபட்டு இமயமலைச் சாரலிலுள்ள திருக்கைலாசகிரியை நோக்கி இடைவிடாது நடந்துசென்றார். பருக்கைக் கற்கள் நிறைந்த மலைச்சாரல் வழியாக நடந்து செல்லுவதால் தமது தேகத்துக்கு நேரிடும் துன்பங்களைப் பொருட்படுத்தாது கைலாசமலையை எப்படியேனும் தரிசித்துத் தீரவேண்டுமென்னும் உறுதியுடையவராயிருந்தார். மறுபடியும் சுவாமிகளைத் தமிழ்நாட்டிற் செலுத்தத் திருவுளங்கொண்ட சிவபெருமான் இவரைக் கூவியழைத்துத் தாம் உத்தரகைலாசத்தில் எழுந்தருளியிருக்கும் திருக்கோலத்தைத் திருவையாற்றிற் காட்டுவதாகவும், அருகிலுள்ள தடாகத்தில் முழுகித் திருவையாற்றை அடையும்

படியும் பணித்தருளினார். நாயனார் அங்ஙனமே அப்பொய்கையில் மூழ்கித் திருவையாற்றில் அடைந்து அங்கே திருக்கைலாசக் கோலத்தைக் கண்டு மகிழ்ந்தார்.

அப்பால், அவர் சம்பந்தரை மற்றுமோர்தரம் சந்தித்து அவருடன் சிலகாலம் அளவளாவி யிருந்தார். சம்பந்தர் தொண்டைநாட்டை நோக்கிச் செல்லவும், சுவாமிகள் பாண்டிநாட்டுக்குச் சென்றார்; பல சிவ தலங்களைத் தரிசித்துக்கொண்டு கடைசியாகத் திருப்புகலூரைச் சேர்ந்தார். அங்கே ஒவ்வொருநாளும் கைத்தொண்டு செய்துவருவாராயினர். அப்போது இவரது மனவுறுதியை யாவருக்கும் காட்டுதற்குத் திருவுளங்கொண்ட எம்பெருமான் இவருக்கு முன்னே பொன்னும் நவரத்தினங்களும் பிரகாசித்துக் கிடக்கும்படி அருள் செய்தார். நாயனார் அவைகளைச் சாமானிய பருக்கைக் கற்களாகவே மதித்தார்.

இவ்விதமாகச் சுவாமிகள் திருப்புகலூரில் தம் நிலையிற் சிறிதும் கலங்காது இருந்துவருங் காலத்தில் ஒருநாள் இறைவன் திருவடிநீழலைச் சேரவேண்டுமென்னுங் கருத்துத் தோன்ற ஓர் திருப்பதிகம் பாடியருளினர். அப்பர் எண்ணியவாறு பூம்புகலூர் மேவிய புண்ணியன் முத்திப் பேற்றை அருள்புரிந்தார் சித்திரைச் சதயமாகிய நன்னாளில். அப்போது சுவாமிகளுக்கு வயது 81.

அப்பர் சரியாபாதத்தை விளக்கவந்த குருமூர்த்தி. சிவாலயங்கள்தோறுஞ் சென்று அங்கே காணப்படும் புல் பூண்டு முதலியவற்றை நீக்கும் திருத்தொண்டை மேற்கொண்டவர். புல் பூண்டைச் செதுக்கி எடுப்பதற்குரிய ஆயுதமொன்றை எப்போதுங் கையில் வைத்திருப்பதால், இவருக்கு உழவாரப் படையாளி என்ற பெயர் வழங்கலாயிற்று. சரியை கிரியை யோகமாகிய மூன்றினுள்

ஏதுவும் ஞானிகள் செய்யத்தக்கதாதலால் அப்பர் சரியைச் சிவபுண்ணியத்துள் உழவாரத்தொண்டு செய்தருளினார்.

சுவாமிகளது திருப்பாடல்கள் தேவாரத்தைச் சேர்ந்தவை. இவரது பாடல்கள் நான்கு ஐந்து ஆறும் திருமுறைகளாக வகுக்கப்பட்டுள்ளன. இவருடைய திருப்பாடல்கள் இனிமைவாய்ந்தவை; ஓதுவோர்க்கும் கேட்போர்க்கும் அன்பை விளைத்துக் கருங்கல் மனமும் கரைந்துருகச்செய்யும் தன்மையுடையவை. இவர் அருளிச்செய்த திருப்பதிகத்தொகை 49000. அவற்றுள் இப்போதுள்ளவை 311. இவருடைய பாடல்பெற்ற தலங்கள் 125.

இவர் சைவசமயியாகப் பிறந்தும் ஊழின் வலியாற் புறச்சமயமாகிய சமணத்திற் புகுந்தார்; பிறகு தமக்கையாரின் குருபதேசத்தால் சைவசமயத்தின் உண்மையை உணர்ந்து அதன்வழி ஒழுகலானார். சுவாமிகள் மேலான நிலையில் நின்றமையால், இவருக்குச் சமணர்களால் செய்யப்பட்ட துன்பங்களெல்லாம் இன்பங்களாக மாறின. அத்துன்பங்களை இறைவனே ஏற்றுக்கொண்டான்.

சுவாமிகளுக்குச் சிவசின்னம் முதலிய சாதனங்களிலும் சிவாலய தொண்டிலும் பேரபிமானம் உண்டென்பதை இவருடைய பாடல்களால் அறியலாம். சிவபிரானுடைய நாமங்களை எப்போதும் உச்சரித்துக் கதற வேண்டுமென்று சுவாமிகள் நமக்கெல்லாம் போதிக்கின்றார். வெண்ணீறணியும்போது பஞ்சாக்கரத்தை உச்சரிக்கவேண்டுமென்று பல பாடல்களிற் கூறுகின்றார். தாம் ஊழின் வலியாற் சமண சமயத்திற் புகுந்துழன்றமைக்கு பெரிதும் வருந்திப் பாடுகின்றார். சிவனடியார் மலையேவந்து வீழினும் நிலைகலங்காரென்பதை ஓர் பாடலில் விளக்குகின்றார். பழமொழிகள் வாயிலாகப் பல உண்மைப் பொருட்களை நமக்குப் புகட்டுகின்றார். இவையெல்லாம் படித்து இன்புறத்தக்கன. நமது சுவாமிகளை ஆளுடைய அரசு, வாகீசர், தாண்டக வேந்தர் என்றும் அழைப்பர்.

## 3. சுந்தரர்

நேசநிறைந்த வுள்ளத்தால் நீலநிறைந்த மணிகண்டத்
தீசனடியார் பெருமையினை யெல்லாவுயிருந் தொழவெடுத்துத்
தேசமுய்யத் திருத்தொண்டத் தொகைமுன் பணித்த திருவாளன்
வாசமலர்மென் கழல்வணங்க வந்த பிறப்பை வணங்குவாம்.

திருமுனைப்பாடி நாட்டிலேயுள்ள திருநாவலூரிலே பல நூற்றாண்டுகளுக்கு முன்னர் சடையனாரென்னும் ஆதிசைவ ரொருவர் இருந்தார். அவருடைய மனைவியார் இசை ஞானியா ரென்பவர். இவர்களுக்கு ஓர் ஆண்மகவு பிறந்தது. அப்பிள்ளைக்கு நம்பியாரூரர் என்று பெயர் வைத்தனர். அந்நாட்டரசராகிய நரசிங்கமுனையரால் அப்பிள்ளை வளர்க்கப் பட்டது.

மணஞ் செய்யத்தக்க வயதை யடைந்தபோது புத்தூர்ச் சடங்கவி சிவாசாரியரது மகளை விவாகஞ்செய்ய நாள் குறிக்கப்பட்டது. திருமணச் சடங்குகள் ஆரம்பிப்பதற்கு முன்னர் சிவபெருமான் ஒருகிழப் பிராமணவேடத்தோடு வந்து, அக்கலியாண வீட்டிலுள்ளவர்களை யெல்லாம் கூவி யழைத்துத் தமக்கும் மணமகனாகிய நம்பியாரூரருக்கும் ஓர் வழக்குளதென்றும் அதை முடித்தபிறகே மணத்தைத் தொடங்கவேண்டு மென்றும் கூறினர். நம்பியாரூரர் அவர் கூற்றுக்குச் சம்மதித்தார். கிழவர் ஆரூரர் தமக்கு அடிமை யென்றும் அப்படி அடிமையென்று மெய்ப்படுத்த அவரது முன்னோர் தமக்கு எழுதிக்கொடுத்த அடிமைக் கைச்சாத் தோலை தம்மிட முளதென்றும் சொன்னார். பிராமணர்கள் அடிமையாதல் உலக வழக்கில் இல்லையென்று சொல்லி அங்குள்ளோர் வாதிக்கக் கிழவர் தம்மிடமிருந்த ஓலையை அவர்களுக்குக் காட்டித் தம்வழக்கை உண்மைப்படுத்தினார்.

## 3. சுந்தரர்

நேசநிறைந்த வுள்ளத்தால் நீலநிறைந்த மணிகண்டத்
தீசனடியார் பெருமையினை யெல்லாவுயிருந் தொழவெடுத்துத்
தேசமுய்யத் திருத்தொண்டத் தொகைமுன் பணித்த திருவாளன்
வாசமலர்மென் கழல்வணங்க வந்த பிறப்பை வணங்குவாம்.

திருமுனைப்பாடி நாட்டிலேயுள்ள திருநாவலூரிலே பல நூற்றாண்டுகளுக்கு முன்னர் சடையனாரென்னும் ஆதிசைவரொருவர் இருந்தார். அவருடைய மனைவியார் இசைஞானியா ரென்பவர். இவர்களுக்கு ஓர் ஆண்மகவு பிறந்தது. அப்பிள்ளைக்கு நம்பியாரூரர் என்று பெயர் வைத்தனர். அந்நாட்டரசராகிய நரசிங்கமுனையரால் அப்பிள்ளை வளர்க்கப் பட்டது.

மணஞ் செய்யத்தக்க வயதை யடைந்தபோது புத்தூர்ச் சடங்கவி சிவாசாரியரது மகளை விவாகஞ்செய்ய நாள் குறிக்கப்பட்டது. திருமணச் சடங்குகள் ஆரம்பிப்பதற்கு முன்னர் சிவபெருமான் ஒருகிழப் பிராமணவேடத்தோடு வந்து, அக்கலியாண வீட்டிலுள்ளவர்களை யெல்லாம் கூவி யழைத்துத் தமக்கும் மணமகனாகிய நம்பியாரூரருக்கும் ஓர் வழக்குளதென்றும் அதை முடித்தபிறகே மணத்தைத் தொடங்கவேண்டு மென்றும் கூறினார். நம்பியாரூரர் அவர் கூற்றுக்குச் சம்மதித்தார். கிழவர் ஆரூரர் தமக்கு அடிமை யென்றும் அப்படி அடிமையென்று மெய்ப்படுத்த அவரது முன்னோர் தமக்கு எழுதிக்கொடுத்த அடிமைக் கைச்சாத் தோலை தம்மிட முளதென்றும் சொன்னார். பிராமணர்கள் அடிமையாதல் உலக வழக்கில் இல்லையென்று சொல்லி அங்குள்ளோர் வாதிக்கக் கிழவர் தம்மிடமிருந்த ஓலையை அவர்களுக்குக் காட்டித் தம்வழக்கை உண்மைப்படுத்தினார்.

நம்பியாரூரர் கிழவருடைய ஏவல்வழி நிற்பாராகி அவர் பின்னை சென்றார். முன்சென்ற கிழவர் திருவெண்ணெய் நல்லூரிலுள்ள திருவருட்டுறை என்னுஞ் சிவாலயத்திற் புகுந்தவுடனே மறைந்தருளினர். உயிர்தோறும் கலந்து நிற்கும் கள்வராகிய கிழவரைத் தேடுவாராயினர் நம்பியாரூரர். அப்போது பரமசிவன் அவருக்குக் காட்சிகொடுத் தருளி அவரை இல்வாழ்க்கையிலிருந்து உய்விக்கும் பொருட்டுத் தாமே வலியவந்து தடுத்தாட்கொண்டதாக அறிவித்தருளினார். நம்பியாரூரர் கடவுளைப் புகழ்ந்துபாட விருப்பமுடையவராகி "பித்தா பிறைசூடீ" என்னுந் தொடக்கத்தையுடைய திருப்பதிகத்தைப் பாடியருளினார்.

திருமணத்தைத் தவிர்க்கக் கிழவராகச் சிவபெருமான் எழுந்தருளி நம்பியாரூரருடன் வல்வழக்கிட்டபோது, அவரை இன்னவரென்று அறியாது "பித்தன்" முதலிய பலவகைச் சொற்களை நாயனார் கூறினமையால் "வன்றொண் டன்" என்ற பெயர் அவருக்கு உண்டாயிற்று.

நாயனார் திருநாவலூர், திருத்துறையூர் முதலியகோயில் களைப் பாடியருளிச் சிதம்பரத்தைநோக்கிப் புறப்பட்டார். வழியிலே திருவதிகையில் தங்கினர். அங்குள்ள ஒரு மடத் திலே நித்திரைசெய்யும்போது பரமபதி நாயனாருக்குத் திருவடி தீட்சை செய்தருளினார். பின்னர்த் திருமாணிக் குழி, திருத்தினைநகர் முதலிய திருப்பதிகளை வணங்கிக் கொண்டு சிதம்பரத்தை அடைந்தார். அங்கே தங்கி யிருக்கும்போது சபாநாதர் திருவருளால் திருவாரூருக்குச் செல்லும்படி ஓர் கட்டளை பிறந்தது. அதன்படியே திருவா ரூருக்குப் புறப்பட்டார். வழியிலேயுள்ள சீகாழி, மாயூரம் அம்பர்மாகாளம், திருப்புகலூர் முதலிய தலங்களைத் தரிசித்

ஆத் திருவாரூரைச் சமீபித்தார். நாயனாரது வருகையை வன்மீகநாதராலறிந்த திருவாரூர் அடியவர் கூட்டத்தினர் அவரை எதிர்கொண்டு உபசரித்தனர். நாயனார் திருக் கோயிலினுள்ளே போய்த் திருமூலட்டானேசுரரை வழி பட்டுத் திருப்பதிகம் பாடியருளினார்.

திருவாரூரிலே யிருந்து தியாகராசப் பெருமானைத் தரிசித்து வருநாளிலே ஒருநாள் திருவருள்கூட்டப் பரவை யார் என்னும் சிவநேயம்வாய்ந்த பெண்மணியைக் கண்டார். கண்டதும், அவர் பக்குவமுள்ள ஆன்மாவென அறிந்து, சுவாமி சந்நிதானத்திற்குச் சென்று, அப்பெண்ணை ஆட் கொள்வதற்கு உத்தரவு தந்தருளும்படி இறைவனை வேண்டி னார். சுவாமிகளைக் கண்ட பரவையாரும் அவரே தம்மை ஈடேற்றத்தக்கவரென நினைத்தார். சிவபிரானது கட்ட ளைப்படி சுவாமிகள் அம்மையாரை ஆட்கொண்டருளினார்.

நாயனார் திருவாரூரிலே வசித்துவரும் காலத்திலே ஒருநாள் தேவாசிரய மண்டபத்திலுள்ள சிவனடியார்களைத் தொழுது அவர்கள் பெருமையைச் சிறப்பித்துத் திருத் தொண்டத்தொகை பாடியருளினார். அத்திருப்பதிகத் திற்கு வன்மீகநாதர் "தில்லைவாழந்தணர் தம் அடியார்க்கு மடியேன்" என்று அடியெடுத்துக் கொடுத்தருளினார்.

நாயனார் திருவாரூரிலே வசித்துவந்தபோது அவர் வீட்டிற்கு வேண்டிய நெல்லும் பருப்பும் குண்டையூர்க் கிழவர் என்னும் சிவனடியார் உதவினர். அப்படி அவர் கொடுத்துவரும்போது மழையின்மையால் வளம் சுருங் கிற்று. போதிய தானியங்கள் அனுப்ப முடியவில்லை. அப் பெரியவர் மனம் புழுங்கினார். சுவாமி திருவருளால் அக் குண்டையூர்முழுவதும் நெல்மலைபோற் குவிந்தது. சிலநாட்

சென்றபின், திருநாட்டியத்தான்குடிக்குச் சென்று அங்குள்ள கோட்புலிநாயனாரை ஒரு திருப்பதிகத்திலே சிறப்பித்துப்பாடி, வலிவலம் முதலிய தலங்களை வணங்கித் திருவாரூருக்குத் திரும்பிவந்தார். பங்குனி உத்திரத் திருநாள் நெருங்குதலும் திருவிழாவைக் காணவரும் சிவனடியார்களது மாகேசுரபூசைச் செலவிற்காகப் பொன்வேண்டித் திருப்புகலூரையடைந்து அங்கே இறைவன் திருவருளால் செங்கற்களைப் பொன்கற்களாக மாற்றித் திருவாரூருக்கு மீண்டார்.

பின் பல தலங்களுக்குச் சென்று திருமுதுகுன்றெனப்படும் பழமலைக்குப் போனார். அங்கே விருத்தகிரிநாதர் பன்னீராயிரம் பொன் கொடுத்தருளவும், அவற்றை மணிமுத்தாநதியிலே இட்டனர். பிறகு கடம்பூர், சிதம்பரம், மண்ணிப்படிக்கரை முதலிய தலங்களை வணங்கித் திருவாரூரைச் சேர்ந்தார். அங்கே அனைவரும் ஆச்சரியப்படும்படி தாம் ஆற்றிலிட்ட பொன்னையெல்லாம் திருவாரூர்க் கமலாலயத்திலே வரப்பெற்றார்.

சிலநாளாயபின், திருநள்ளாறு முதலிய தலங்களுக்குப் போய்த் திருக்குருகாவூரை அடைந்தார். அங்கே இவரது நண்பராகிய பரமபதி தண்ணீரும் பொதிசோறும் கொண்டு வந்து கொடுத்தார். மற்றும்பல கோயில்களுக்குச் சென்று கடைசியாகத் திருவொற்றியூரை அடைந்தார்.

திருவொற்றியூர் நாதரை ஒருநாள் தரிசித்துத் திரும்பும் போது, அத் திருக்கோயிலிலே திருத்தொண்டு புரிந்துவந்த சங்கிலியார் என்னும் தவப்பெருஞ் செல்வியைத் திருவருள் கூட்டக் கண்டார். அவரைத் தமக்கு அடியாராகக்கொண்டு வேண்டியகாலம் வரையும் அவரோடு நிற்பதாகச் சொல்லித்

தங்கினார். ஒருநாள் திருவாரூர்த் தியாகராசப் பெருமானுடைய ஞாபகம் வரவும், அவர்மீது திருவொற்றியூரிலிருந்தபடியே ஒரு திருப்பதிகம் பாடியருளினார். பின்னர் ஒருநாள் அவரைத் தரிசிக்கவேண்டுமென்னும் பேரவாவினால் உந்தப் பட்டவராய்த் திருவாரூரை நோக்கிப் புறப்பட்டார். திருவொற்றியூரின் எல்லையைக் கடந்ததும் இவருடைய இரண்டு கண்களும் மறைந்தன. காரணம் சங்கிலியாரோடு வேண்டிய காலம் நில்லாது போயதே. நாயனார் இறைவனைப் பலவிதமாகத் துதித்தார்; கண்ணொளி வரவில்லை.

எவ்விதமேனும் திருவாரூருக்குப் போய்த்தீரவேண்டும் என்னும் ஆசை மிகுதியால் வடதிருமுல்லைவாயில், திருவெண்பாக்கம், திருவாலங்காடு முதலிய தலங்களை வணங்கிக் காஞ்சீபுரத்தை அடைந்தார். ஏகாம்பரநாதரைத் தரிசிப்பதற்குக் கண்ணில்லாமையால் மிக வருந்திக் கடவுளைப் பலவாறு வேண்டினார். வேண்டுகோட்கிணங்கிய ஏகம்பவாணர் இடக்கண்ணை மாத்திரம் கொடுத்துத் தரிசிப்பித்தார்.

பிறகு திருவாமாத்தூர், திருவாத்துறை, திருவாவடுதுறை முதலிய தலங்களைப் பாடிச்சென்று திருவாரூரை யடைந்து அப்பெருமான்மீது "மீளா அடிமை" என்னும் திருப்பதிகம் பாடினார். வன்மீகநாதர் வலக்கண்ணையுங் கொடுத்தருளினார். நாயனார் சிலநாள் தேவாசிரய மண்டபத்திலும் பின்பு பரவையார் வீட்டிலும் கடவுளைத் தியானித்துக்கொண்டு வீற்றிருந்தருளினார்.

திருமங்கலம், திருப்புன்கூர் முதலிய கோயில்களுக்குப் போய், மீண்டும் திருவாரூருக்கு வந்திருந்தநாளிலே நாயனார் பெருமையைக் கேள்வியுற்ற சேரமன்னராகிய சேரமான்

பெருமாள்நாயனார் அவரைக்காணத் திருவாரூருக்கு எழுந் தருளினார். வந்ததும் நாயனாரை வணங்கி அவருடன் மிக நட்புடையவராயினார். இதனால் நாயனாருக்குச் "சேரமான் தோழர்" என்னும் பெயர் உண்டாயிற்று. பின்பு இருவரு மாகப் பாண்டிநாட்டிலுள்ள பல தலங்களுக்கு யாத்திரை யாகச் சென்று மீண்டும் திருவாரூரை அடைந்தனர். சேரர் பிரான் நாயனாரைத் தமது நாட்டிற்கு அழைத்தார். நாயனார் உடன்படவும் இருவருமாக மலைநாட்டுக்குப் பிரயாணமாயி னர். வழியிலேயுள்ள திருவையாற்றைத் தரிசிக்கச் சேர மான் விரும்பினார். அப்போது வழியிலேயுள்ள காவேரிநதி ஓடங்கள் செல்லமுடியாதபடி பெருக்கெடுத்துப் பாய்ந்தது. சுந்தரர் ஐயாற்றுப்பாணனை விளித்து ஒரு திருப்பதிகம் பாடினார். அவர் "ஓலம்" என்று அருள்சுரந்து காவேரி நதியை விலகி வழிவிடும்படி பணித்தனர். இருவரும் நதியைக் கடந்துசென்று செம்பொற் சோதியை வணங்கி மீண்டனர். மீண்டதும் முன்போலக் காவேரியாறு கரை புரண்டு ஓடிற்று. பிறகு இருவரும் கொடுங்கோளூரை அடைந்தார்கள். அங்குச் சிலநாள் தங்கினர்.

ஒருநாள் வன்மீகநாதரை நினைந்து திருவாரூருக்குச் செல்லப் புறப்பட்டார். சேரமான் அவரைப்பிரிய மனமில் லாதவராய்த் தடுப்பவும், நாயனார் தியாகேசரைத் தரிசிக்க வேண்டுமென்னும் ஆசைமிகுதியால் சேரர்தடைக்கு இணங் காது திருவாரூரை வந்தடைந்தார்.

சிலநாட்சென்றபின்னர் சேரமான் பெருமானை நினைந்து அவரிடஞ்செல்லத் திருவாரூரிலிருந்து புறப்பட்டார். வழி யிலேயுள்ள திருப்புக்கொளியூரைச் சேர்ந்தபோது அங்கே நிகழ்ந்த சப்தங்களால் ஒரு பிராமணச் சிறுவன் சில ஆண்டு

களுக்கு முன் முதலையால் விழுங்கப்பட்டானென்று கண்டார். கருணைமேலீட்டினால் அச்சிறுவனை எழுப்பத் திருவுளங்கொண்டு அவிநாசியை அடைந்து அக்கோயிலில் வீற்றிருக்கும் சிவபிரானார்மீது ஒருதிருப்பதிகம் பாடியருளினார். உடனே ஒரு முதலை அச்சிறுவனைக் கொண்டுவந்து குளக்கரையில் உமிழ்ந்தது. எல்லோரும் ஆச்சரியமடைந்தனர். பிறகு, அவ்விடத்தைவிட்டு மலைநாட்டுக்குச் சென்றார். இவர் வரவையறிந்த சேரமான் பல வரிசைகளுடன் இவரை ஏற்றருளினார்.

சேரமன்னரது இராசதானியாகிய மகோதை என்னும் நகரத்திலே நாயனார் எழுந்தருளியிருக்கும்போது ஒருநாள் திருவஞ்சைக் களத்துக்குச்சென்று சுவாமி தரிசனஞ்செய்து மெய்ம்மறந்து தம்மை இறைவனது திருவடியிற் சேர்த்தருளும்படி பன்முறை இறைஞ்சினார். இவர் விருப்பத்தை நிறைவேற்றச் சிவபிரான் ஓர் வெள்ளையானையை அனுப்பி அதன்மீது இவரை ஏற்றியழைத்து வரும்படி தமது பூத கணங்களுக்குக் கட்டளையிட்டார். அங்ஙனமே ஒரு வெள்ளை யானை திருவஞ்சைக் களத்திற்கு வரவும், நாயனார் அதன் மீது ஏறித் தமது தோழராகிய சேரமான்பெருமானை நினைத்தவண்ணம் கயிலையை நோக்கிச் சென்றார். அப்போது நீராடிக்கொண்டிருந்த சேரர்பெருமாள் தமது தோழருடைய கொள்கையை ஞானக்கண்ணாலறிந்து உடனே ஒரு குதிரையின்மேல் ஏறிக்கொண்டு திருவஞ்சைக்களத்திற்குப் போனார். அங்கு ஆகாயவழியாகச் செல்லும் சுந்தரைக் கண்டு தமது குதிரையின் செவியில் பஞ்சாட்சரத்தை ஓதியருளினார். அக்குதிரை உடனே ஆகாயத்திற் பாய்ந்து சுந்தரர் செல்லும் யானைக்குமுன் விரைந்து ஓடிற்று. இருவரும் திருக்கைலாசத்தை அடைந்து கைலாசபதி

யாகிய சிவபிரானை இறைஞ்சித் தங்கள் தங்கள் பழைய நிலைமைகளாகிய ஆலாலசுந்தர பதவியையும், கணநாதப் பதவியையும் முறையே அடைந்தார்கள். இருவரும் முத்தி யடைந்த தினம் ஆடிச்சுவாதியாகும். நாயனார் முத்தி யடைந்தபோது அவருக்கு வயது 18 என்ப. சுந்தரர் பாடிய திருப்பாடல்களும் தேவாரத்திற் சேர்ந்தவை. இவருடைய பாடல்கள் ஏழாவது திருமுறையாக வகுக்கப்பட்டுள்ளன. இவருடைய பாடல்கள் மதுரம் பொருந்தியவை. பல திருப்பாடல்களுள் திருக்குறட் கருத்தும் அடிகளும் எடுத் தாளப்பட்டுள்ளன. நிலையாமையைப் பற்றி இடித்துக் கூறுவனபல. இவர்பாடிய திருப்பதிகத்தொகை 38000. இப்போது வழங்குவன 100. நிந்தாஸ்துதிகளாகவும் சில பாடல்களைக் காணலாம்.

கைலாசத்தில் அணுக்கத் தொண்டராயுள்ள ஆலால சுந்தரரே அடியார் பெருமையை விளக்குவதற்குச் சுந்தரராக அவதரித்தாரென்ப. நாயனார் திருத்தொண்டத்தொகை பாடாமலிருந்தால் எமக்கு அடியார்கள் பெருமை தெரிந் திராது. அத் தொகையே பின்வந்த திருத்தொண்டர் திருவந்தாதி, பெரியபுராணம் முதலியவற்றிற்கு வழி காட்டியா யிருந்தது. திருத்தொண்டத் தொகையாளி என்னும் பெயரும் நாயனாருக்கு இதனாற் கிடைத்தது. இவர் ஞானத்தில் யோக மார்க்கத்தை விளக்கவந்தவர். மூலாதாரமாகிய திருவாரூருக்கு இறைவனால் அழைக்கப் பட்டு அங்கே பன்னெடுநாள் வசித்ததும் திருத்தொண்டத் தொகை முதலியன அங்கே இறைவனருளாற் பாடியதும் சிவபிரானோடு தோழமை பூண்டதும் கருதத்தக்கன. திருவாரூர்த் தியாகேசரிடம் இவருக்கு அன்பதிகமென்பது இவரது தேவாரப் பாக்களால் அறியலாம். திருவொற்றி

யூரிற் சில காலம் தங்கியபோதும் மலைநாட்டில் சேரமான் பெருமானோடு சிலநாள் நின்றபோதும் வன்மீகப் பெருமானை நினைந்துருகி உடனே திருவாரூருக்குப் புறப்பட்டது இவ் வன்மை வெளிப்படுத்தும்.

திருவாரூரில் இருந்தபோது பரவையாரென்னும் ஓர் பக்குவமடைந்த ஆன்மாவைத் திருவருட் சம்மதப்படி ஆட்கொண்டு தமக்கு அடியவராக்கி அவரோடு பல தொண்டு புரியலானார். இவ்வாறே சங்கிலியா ரென்னும் மற்றொரு பக்குவ ஆன்மாவையும் திருவொற்றியூரில் இறைவன் அனு மதியோடு ஆட்கொண்டு அருள்புரிந்ததுமாகும். இரு ஆன்மாக்களையும் யோகப் பயிற்சியிற் பழக்குவித்தா ரென்பது பெரிய புராணத்தில் நுணுகி அறியற்பாலது. "மற்றுப் பற்றெனக் கின்றிநின்திருப் பாதமே மனம் பாவித்தேன்" "வழுக்கிவீழினுந் திருப்பெய ரல்லாமல் மற்று நானறியேன்" "நற்றவா உனை நான்மறக்கினுஞ் சொல்லுநா நமச்சிவாயவே" முதலிய தேவார அடிகளால் நாயனாருடைய சிந்தனை எப்போதும் சிவபெருமா னிடத்திலேயே பதிந்துகிடந்ததென்பது பெறப்படும். இவர் பசுகரணமற்றுச் சிவகரணமுற்று விளங்கியவராகலின் தமக்கென ஒரு செயலுமில்லாதவர்; இவர் செய்த திருவிளை யாடல்களெல்லாம் இறைவனைச் சார்ந்தவையே. சிதம்பர சபாநாதரைத் தரிசித்தபோது இவரடைந்த நிலையைப் பெரியபுராணம் "ஐந்து பேரறிவும் கண்களே கொள்ள" "தெண்ணிலாமலர்ந்த வேணியாய்" என்னும் திருவருட் பாக்களால் நனி விளக்குகின்றது.

தமது ஆண்டவரும் தோழரும் யோகநாயகருமாகிய சிவபிரானைப்போல சுவாமிகளும் யோகியே. இதனாலன்றோ

பரமயோகியாகிய பெருமிழலைக் குறும்ப நாயனாரும் நமது சுவாமிகளைக் குருவாகக் கொண்டு வழிபட்டது எல்லாம வல்ல சித்தராகிய சிவபிரானே இவர்வழி நிற்பவராகலின், செங்கல்லைப் பொன்னாக ஆக்குவதும், முதலையுண்ட பாலனை அழைப்பதும், ஆற்றிலிட்டபொன்னைக் குளத்தில் எடுப்பதும், பெருக்கெடுத்தோடும் ஆற்றைவழிவிடச் செய்வதும் அதிசயமல்ல. "யான் செய்யுந் துரிசுகளுக்குடனாகி" என்னும் தேவாரத்தால் எம்பெருமான் இவரோடு எல்லாக் காரியத்திலும் தொடர்புடையா ரென்பது புலப்படும். இவர் திருவொற்றியூர் எல்லையை நீங்கியதுங் கண்ணிழந்தமையும் பிறகு கண் பெற்றமையும் திருவிளையாடலாகும். சிவ பெருமான் சம்பந்தரை மகன்மைகொண்டு பிள்ளைத் தன்மைக் குரிய முத்துப் பல்லக்கு, முத்துக்குடை, முத்துச் சின்னம், முத்துப் பந்தர் முதலியவற்றை அமைத்துக் கொடுத்து அவரை ஆடம்பரமாக விளங்கச் செய்தார். அஃதேபோல் சுந்தரரோடு தோழமை பூண்டு அத்தோழமைக்கு ஏற்ப பொன், பொருள், பட்டாடை, வாகனம் முதலிய பரிசுகளை வழங்கி எப்போதும் மணக்கோலத்தோடு உலாவும்படி பணித்தருளினர். ஈதெல்லாம் இறைவனுடைய அருட்டிற மெனச் சொல்லத் தக்கது.

காவலராகிய சேரமான் பெருமாள் நாவலராகிய சுந்தர மூர்த்திகளின் தோழமையை நாடினமையால் அவரும் யோகீந்திரராய் இருத்தல் வேண்டும். அவர் பூசைமுடிவில் நடராசப்பெருமானது காற்சிலம்பொலி கேட்பது இதனை மெய்ப்பிக்கும். சுந்தரர்கைலாசத்திற்கு யானைமீது ஏறிச் செல்வதை யறிந்த சேரர் தமது குதிரையின் காதில் பஞ்சாக்கரத்தை ஓதவும் அதுவிரைந்து யானைக்கு முன்னே

ஓடிற்றென்பது பௌராணிகம். ஆன்மாவாகிய அம்பைக் கடவுளாகிய இலக்குக்குச் செலுத்துவது பிரணவமாகிய வில் என்று முண்டகோபநிடதம் கூறுகின்றது. (II-ii-4) இங்கே குதிரையாக உருவகிக்கப்பட்டுள்ளது. சுந்தரர் ஏறிச்சென்ற வெள்ளையானை பிரணவமாம். ஈதெல்லாம் நுணுகி அறியத்தக்கன.

கோட்புலிநாயனார் தமது அரிய புதல்விகள் இருவரையும் சுவாமிகளிடத்தே விட்டு அவர்களை அடிமைகொள்ளும்படி வேண்டினார். அவர்கள் இளமையும் பக்குவமின்மையையும் கண்டநாயனார் அவர்களுக்குப் பரிசதீட்சை மட்டும் புரிந்தார். இதனால் இவ்விரு ஆன்மாக்களும் பரவை சங்கிலியாரைப்போல் பக்குவநிலையை அடையவில்லையென்பது பெறப்பட்டது.

நமது சுவாமிகளுக்கு வழங்கும் பெயராவன:—நம்பியாரூரர், திருநாவலூரர், ஆளுடைய நம்பி, வன்றொண்டர், தம்பிரான்தோழர், சேரமான்தோழர், திருமணக்கோலப் பெருமான், திருத்தொண்டத்தொகையாளி, சிங்கடியப்பன், வனப்பகையப்பன் முதலியன.

நாயனார் காலத்தில் இருந்த மெய்யடியவர்:—விறன்மிண்டர், பெருமிழலைக்குறும்பர், ஏயர்கோன்கலிக்காமர், சோமாசிமாறர், சேரமான்பெருமான், நரசிங்கமுனையரையர், கோட்புலியார், சடையனார், இசைஞானியார் முதலியோர்.

பெருமிழலைக்குறும்பநாயனார் நமது சுவாமிகளிடத்துப் பேரன்புடையவர். அவரை வழிபடுதல் ஒன்றினாலேயே முத்தியடைந்தாரென்றால் நாயனாரின் பெருமையை என்னென்று இயம்புவது.

நாயனர் சரித்திரத்தைக் கூறும் நூல்களாவன:—பெரிய புராணம், திருநாவலூர்ப் புராணம், திருவாரூர்ப் புராணம், பேரூர்ப்புராணம், திருத்துருத்திப் புராணம், அவிநாசிப் புராணம் முதலியன.

### துதி.

வறந்திடு பொய்கைமுன் னிரம்ப மற்றவன்
உறைந்திரு முதலைவந் துதிப்ப வன்னதால்
இறந்திடு மகன்வளர்ந் தெய்தப் பாடலோன்
நறைந்திடு சுந்தரன் அடிகள் போற்றுவாம்.

---

## 4. மாணிக்கவாசகர்

பேசுபுகழ்வாதவூர்ப்பிறந்துபெருந்துறைக்கடலுண்டு
ஆசிலெழிறடித்தயரவஞ்சேருத்தாலதிர்ந்தெழுந்து
தேசமலிதரப்பொதுவார்சிவபோகமிகவினைவான்
வாசகமாமாணிக்கமழைபொழிமாமுகில்போற்றி.

மாணிக்கவாசகர் பாண்டிநாட்டிலே வைகையாற்றங் கரையிலே மதுரைக்குச் சமீபத்திலுள்ள திருவாதவூர் என்னும் திருப்பதியிலே ஆமாத்தியப் பிராமண குலத்திலே பிறந்தவர். இவரது இயற்பெயர் திருவாதவூரர். தந்தையாரின் பெயர் சம்புபாதாசிரயர். தாயாரின்பெயர் சிவஞானவதி. இவர் பதினறு ஆண்டுகளுக்குள்ளாகவே வேதசிவாகமங்களையும் பல கலைகளையுங் கற்றுத் தெளிந்த அருட்புலமையினராய் விளங்கினர். அதனோடு சிறந்த ஒழுக்கமும் நிறைந்த சிவபத்தியும் உடையவராகக் காணப் பட்டார். இவரது குணாதிசயங்களைக் கேள்விப்பட்ட அரிமர்த்தனபாண்டியன் இவரைத் தனது முதல் மந்திரியாக ஆக்கிக்கொண்டான். தென்னவன் பிரமராயன் என்னும்

பட்டப்பெயரைச் சூட்டினான். இப்பெயருடன் மந்திரிப் பதவியை ஏற்றுக் குறைவற நடாத்தும்போது, இவருக்குச் சிவபத்தியும் உலகத்தின்மீது வெறுப்பும் மேலிட்டன. இச்சமயத்திற் பாண்டியன் இவரை அழைத்து கீழ்க்கடற் றுறைக்குச் சென்று நல்ல குதிரைகளை வாங்கிவரும்படி பெரும் பொருள் கொடுத்து அனுப்பினான். புறப்படுமுன் திருவாலவாயிலே எழுந்தருளியுள்ள சோமசுந்தரக்கடவுள் சந்நிதானத்தை அடைந்து, குதிரையின்பொருட்டு ஈனர்களாகிய மிலேச்சர்களுக்கு அரசனுடைய பொருள் செல்வதைப்பற்றித் துக்கத்துடன் விண்ணப்பித்தனர். கடவுளின் உத்தரவு பெற்றபின் மதுரையை விட்டுப் புறப்பட்டுச் சோழதேசத்தை நோக்கிச் சென்றார். சென்றவர் வழியிலேயுள்ள திருப்பெருந்துறை என்னுந் தலத்திலே தங்கினார். அங்கே ஒரு ஞானாசாரியர் குருந்தமரத்தின்கீழ்ப் பல மாணவர் சூழ வீற்றிருப்பதைக் கண்டார். கண்டவுடன் ஆனந்தபரவசமானார். பின்பு, தம்மை ஆட்கொண்டருளும்படி பரமாசாரியரை வேண்டினார். இவருடைய மேலான நிலையைக் கண்ட ஞானாசாரியராகிய கடவுளும் இவர் விரும்பியவாறே ஞானோபதேசத்துடன் திருவடிதீக்ஷையும் செய்தருளினார்.

ஞானோபதேசம் பெற்ற பின்பு, சிவானந்தமேலீட்டினாலே அதிமதுரமான பாடல்களைப் பாடுவாராயினர். அப்பாமாலை விலையுயர்ந்த மாணிக்கக் கற்களாற் கோக்கப்பட்ட சரமாலையைப்போல் இருந்தமையால் சிவபிரான் இவருக்கு **மாணிக்கவாசகர்** என்னுந் திருநாமத்தைக் கொடுத்தார். குதிரை வாங்குதற்காகக் கொண்டுவந்த பொருளை யெல்லாம் திருப்பெருந்துறையிலே சிவாலயத் திருப்பணியிலும் சிவனடியார் வழிபாட்டிலும் செலவழித்தார். தாம் வந்த

காரியத்தையும் மறந்து பித்தம்பிடித்தவர்போல் இருந்தார். தம்முடன் வந்த பரிவாரங்கள் என்ன சொல்லியும் இவர் கேட்டாரல்லர். இவர் இப்படி நடப்பதை அவர்கள் பாண்டியனிடம் போய் முறையிட்டார்கள். இவரது நிலைமையைக் கேள்வியுற்ற பாண்டியன் சுவாமிகளை உடனே மதுரைக்குத் திரும்பும்படி கடிந்தெழுதிய ஓலையொன்றை அனுப்பினான். அவ்வோலையைத் தமது ஆசாரியமூர்த்தியாக எழுந்தருளியிருந்த இறைவனுக்குக் காட்டினர். அவர் அடுத்த ஆவணி மூலத் திருநாளன்று குதிரைகளைத் தாமே மதுரைக்கு ஓட்டிக்கொண்டுவருவதாகவும், மாணிக்கவாசகர் மதுரைக்குச் சென்று அங்ஙனமே பாண்டியனுக்கு அறிவிக்கலாமென்றுங் கூறினர்.

சுவாமிகள் உடனே மதுரைக்கு மீண்டு, இறைவன் சொல்லியவாறு பாண்டியனுக்குத் தேறுதல் சொன்னார். அரசனும் ஆவணிமூலத்தை எதிர்பார்த்துக்கொண்டிருந்தான். அச்சமயத்தில் மந்திரிமார்களில் ஒருவன் அரசனிடஞ் சென்று முதன் மந்திரியார் குதிரை வாங்குதற்குக் கொண்டுபோன பொருளையெல்லாம் சிவனடியார்கள் பொருட்டுத் திருப்பெருந்துறையிற் செலவழித்துவிட்டனரென்றும், அதனால் அவர் குதிரை வாங்கவில்லையென்றும் சொன்னான். அவன் கூறியவாறே அவ்விடத்தில் குதிரைகள் இல்லாமையை அறிந்த அரசன் நாயனாரைச் சிறையிலிடுவித்து அவர் கொண்டுபோன பொருளையெல்லாம் வாங்கும்படி கட்டளையிட்டான். ஏவலாளர்கள் சுவாமியை வருத்தினார்கள். அவர் சிறிதும் மனங்கலங்காமல் சிவபிரானைத் தியானித்தவண்ணமாயிருந்தார். இதனால் அவருக்குச் செய்யப்பட்ட துன்பங்களொன்றும் அவரைச் சிறிதும் தாக்காதொழிந்தன.

இப்படி நடந்துவரும்போது ஆவணி மூலநாள் நெருங்கியது. பரமசிவன் குதிரைச் சேவகர் வேடம் பூண்டு குதிரைகளுடன் மதுரைக்கு எழுந்தருளினர். குதிரைப் பந்திகளின் வரவைக் கண்ட பாண்டியன் மகிழ்ச்சியடைந்து மாணிக்கவாசகரைச் சிறைச்சாலையிலிருந்து விடுவித்து அங்கு வந்த குதிரைகளைத் தானும் அவருமாகப் பரீக்ஷை செய்தனர். குதிரைகள் சிறிதும் இலக்கணப்பிழை யில்லா மையைக் கண்டு மகிழ்ந்தான் அரசன். பிறகு, குதிரை வீரராக எழுந்தருளிய சிவபிரானிடம் அவற்றைக் கயிறு மாற்றி வாங்கிக்கொண்டு அவருக்கு விடையளித்து அனுப்பி னன். ஆயினும் அன்றிரவே அக்குதிரைகளெல்லாம் நரிக ளாக மாறின. முன்னிருந்த குதிரைகளையும் இந்நரிகள் கடித்துக் கொன்றன. இதனை அறிந்த பாண்டியன் இது மாணிக்கவாசகர் செய்த சூழ்ச்சியென்று கருதி அவரை மறுபடியும் துன்பப்படுத்தவானுயினன். அவன் செய்த துன்பமொன்றும் அவரைத் தாக்கவில்லை.

அடியார்க்கு எளியவராகிய சிவபெருமான் நாயனருக் குச் செய்த அநீதியை ஒழிக்கவும், செம்மனச்செல்வி யென்னும் மூதாட்டியின் சிவபத்தியை உலகத்தாருக்குக் காட்டவுந் திருவுளங்கொண்டு வைகையாற்றை மதுரைமா நகரின்மீது பெருக விடுத்தார். அது மேலும் மேலும் நகரையே அழிப்பதுபோலப் பெருகி ஓடிற்று. இதை அறிந்த பாண்டியன் சொக்கலிங்க மூர்த்தினைப் பலவாறு போற்றினன். வெள்ளம் சிறிதுங் குறைபவில்லை. பெருக் கிற்குக் காரணம் தான் மாணிக்கவாசகருக்குத் துன்பஞ் செய்ததே என்று எண்ணி அவரைச் சிறைச்சாலையிலிருந்து விடுவித்துத் தான் செய்த குற்றத்தைப் பொறுத்தருளும் படி வேண்டினன். வைகைக் கரை அடைப்பித்தற்கும்

அவருடைய துணையை நாடினன். வேண்டுதல் வேண்டாமை யிலாத நாயனுர் சிவபிரானிடம் பதிந்த உள்ளத்தினராய் நகரிலுள்ளார் அனைவருக்கும் வைகைக் கரையை அடைக் கும் பொருட்டுப் பங்கிட்டுச் சிறிது சிறிது பாகமாக ஒவ்வொருவருக்கும் அளவிட்டார். அவர் ஏவியபடியே நகரத்தார் தத்தம் பாகக் கரையை அடைத்தனர்.

ஆயினும் சிவபத்தசிரோமணியாகிய செம்மனச்செல்வி யென்னும் பிட்டுவாணிச்சியின் பங்குமாத்திரம் அடைக்கப் படாமலிருந்தது. இதையறிந்த அரசனுடைய ஏவலாளர் கள் அம்மையாரை வற்புறுத்துவாராயினர். இதனுல் வருந்திய அம்மையார் சோமசுந்தரக்கடவுளின் திருக் கோயிலை யடைந்தார். தம்முடைய பிட்டைக் கூலியாக ஏற்றுத் தமது பங்கை அடைப்பார் இல்லாமையையும், தமக்குப் பந்து மித்திரர்களெவரும் இல்லாமையையுங் கூறி முறையிட்டார். சிவபிரான் அம்மையாரில் இரங்கித் தாமே கூலியாளாக எழுந்தருளிவந்து அவர் கொடுத்த பிட்டை வாங்கி யுண்டு வைகைக் கரையை அடைப்பவர் போல் நடித்தார். அம்மையாருடைய பங்கு அடைக்கப் பட்டதாயினும் மற்றவர்களுடைய அணையின் உயரத்தளவு வராமையைக் கண்ட அரசன் கூலியாளாக வந்த கடவுளைப் பிரம்பினுல் அடித்தான். அப்பிரம்படியானது பாண்டியன் மேலும் ஏனையோர்மேலும் பட்டது. இவையெல்லாம் தம்மடியவராகிய மாணிக்கவாசகர் பொருட்டுச் சிவபிரான் புரிந்த திருவிளையாடல்களென்று பாண்டியன் அறிந்தான். பின்பு, அவரிடம் சென்று தான் அறியாமை காரணமாகச் செய்த பிழைகளைப் பொறுத்துத் தன்னரசாட்சியை ஏற்றரு ளும்படி வேண்டினன். அவர் அவ்வேண்டுகோளை மறுத்துச் சிவவேடம் பூண்டவராய்த் திருப்பெருந்துறைக்கு எழுந்

தருளி அங்கே சிலகாலம் வசித்தார். பிறகு திருவுத்தர கோசமங்கை, திருவிடைமருதூர், திருவண்ணுமலை, திருக்கழுக்குன்றம் முதலிய தலங்களை வணங்கி, அவ்வவ்விடங்களில் திருவாசகப் பாக்களைப் பாடியருளினர்; கடைசியாகச் சிதம்பரத்தை அடைந்தார்.

சுவாமிகள் சிதம்பரத்தில் எழுந்தருளியிருந்த நாளிலே, சோழதேசத்துச் சிவபத்தர் ஒருவர் தலயாத்திரையாக இலங்கைக்குப் போனர். அவர் அடிக்கடி "பொன்னம்பலம் வாழ்க" என்று சொல்லுவது வழக்கமாயிருந்தது. அவர் அப்படிச் சொல்லுவதைக் கேள்வியுற்ற அந்நாட்டுப் புத்த அரசன் அவரை வரவழைத்தான். அவர்மூலமாகச் சிதம்பரத்தின் சிறப்பை அறிந்தான். சிதம்பரத்திலுள்ள சிவாலயத்தை இடித்தொழித்து அந்த இடத்தில் பௌத்தாலயம் ஒன்று கட்டவேண்டுமென்னும் எண்ணம் அவனுக்கு உண்டாயிற்று. ஆகவே அவன் பௌத்த குருவோடும் தன் ஊமை மகளோடும் சிதம்பரத்துக்குப் போனன். போனதும் தில்லைவாழ் அந்தணர்களை வாதத்திற்கு அழைத்தான். பௌத்த குருவோடு வாதஞ்செய்யத்தக்க ஆற்றலுள்ளவரைத் தில்லையிலுள்ளார் தேடுவாராயினர். அப்போது நடராஜப்பெருமான் அவர்களுக்கு மாணிக்கவாசகரைக் குறிப்பிட, உடனே அவரை வரவழைத்தனர். சுவாமிகள் புத்தனுடன் வாதஞ்செய்து அவனை வென்றதுமன்றி அவன் கேட்ட வினக்களுக்குப் பிறவிதொட்டு ஊமையாயிருந்த பௌத்த அரசனது மகளைக்கொண்டு விடை சொல்லுவித்தார். வினவும் விடையும் சுவாமிகள் பாடியருளிய திருச்சாழலிற் காணலாம். பௌத்தரெல்லாம் தமது சமயத்தின் புன்மையைக் கண்டு சைவராயினர்.

சுவாமிகள் சிதம்பரத்தில் வசித்துவரும் நாளிலே அவருடைய திருவாசகத்தைப் பரவச்செய்யவேண்டு மென்னும் பெருங் கருணையினாலே சிவபிரான் பிராமண வேடத்தோடு அவரிடம் எழுந்தருளினர். அவர் சொற்படி திருவாசகம் முழுவதையும் எழுதிக்கொண்டு திருச்சிற்றம்பல முடையார்மீது ஒரு திருக்கோவைப் பிரபந்தமும் பாடுவித்தார். அக்கோவையையும் எழுதித் தமது திருக் கைச்சாத்திட்டருளிச் சிதம்பர சிற்சபை வாயிலிலுள்ள பஞ்சாக்கரப் படியிலே சுவடிகளை வைத்தருளினர்.

அவ்விரு நூல்களையும் அருச்சகர் கண்டு பேராச்சரிய முற்று அடிகளெல்லாருக்குஞ் சொல்ல, அவர்கள் அந்நூல் களின் பொருளை அறிய விரும்பியவர்களாய் மாணிக்க வாசகப்பெருமானிடஞ் சென்றார்கள். அவர் எல்லோரை யும் பொன்னம்பலத்திற்கு அழைத்து வந்து தம் நூல் களுக்குப் பொருள் இவரே என்று சபாநாதமூர்த்தியைச் சுட்டிக் காட்டி எல்லாருங் காணக் கனகசபையுட்புகுந்து அப்பெருமானோடு இரண்டறக் கலந்தார். அவர் இவ்வாறு முத்தியடைந்த தினம் ஆனி மகம். சுவாமிகள் முத்தி யடைந்தபோது வயது 32. நமது சுவாமிகளைத் திருவாத வூரடிகள், மணிவாசகர், கோவை வேந்தர், ஆளுடைய அடிகள் என்று அழைப்பது உண்டு. சுவாமிகளை நந்தியந் தேவர் அவதாரமென்போர் "குடமுழநந்தீசனை வாசகனுக் கொண்டார்" என்னும் அப்பர் தேவார அடியைக் காட்டுவர்.

நாயனர் அறுபான் மும்மை நாயன்மார்களிற் சேராத தனியடிவர். இவர் சிவகரணமுற்று அறிவாற் சிவனேயாய் விளங்கியவர். இவர் உபதேசம் பெற்ற திருப்பெருந்துறை யில் இவருக்கே எல்லா உற்சவாதிகளும் இப்போதுதானும்

நடத்தப்படுகின்றன. மார்கழித் திருவாதிரைக்கு முன்னே எல்லாச் சைவாலயங்களிலும் திருவெம்பாவைப்பூசை நடத்தப்படுவதும் சுவாமிகளின் தனிச்சிறப்பைக் காட்டும்.

தமிழ்வேதமாகிய திருவாசகமும் திருக்கோவையாரும் பன்னிரு திருமுறையில் எட்டாவது திருமுறையாக வகுக்கப்பட்டுள்ளன. இத்திருப்பாடல்களின் மொத்த எண் 1056. திருவாசகம் கல்நெஞ்சையும் இளகச்செய்யக் கூடியது. மனதை உருகச் செய்வதில் இதற்கு ஈடான நூல் இவ்வுலகில் வேறில்லையென்று திட்டமாய்க் கூறலாம். திருக்கோவையாரோ பேரின்பமாகிய ஞானத்தைப் புகட்டுவது.

சுவாமிகளால் தமது திருப்பாடல்களில் பாராட்டப்பட்ட அடியவராவார்:—சண்டேசுரர், கண்ணப்பர், வண்டோதரி முதலியோர். பல மொழிகள் திருவாசகத்தில் எடுத்தாளப் பட்டுள்ளன. அமைந்து, பப்பு முதலிய திசைச்சொற்களும் வந்துள்ளன.

சுவாமிகள் சரித்திரத்தைக் கூறும் நூல்களாவன:—திருவிளையாடற்புராணம், திருவாதவூரடிகள் புராணம், திருப்பெருந்துறைப் புராணம், திருவுத்தரகோசமங்கைப் புராணம் முதலியன. இவருடைய திருக்கோவையாருக்குப் பேராசிரியர்எழுதிய உரையேசிறந்தது. திருக்கோவையாருண்மை என்னும் நூல் கோவையாரின் பெருமையைக் கூறும்.

துதி.

கந்தமோ டுயிர்படுங் கணபங் கம்மெனச்
சிந்தைகொள் சாக்கியர் தியங்க மூகரராய்
முந்தொரு மூகையை மொழிவித் தெந்தைபால்
வந்திடு மடிகளை வணக்கஞ் செய்குவாம்.

## சந்தானசாரியர்

முத்தாந்த வித்தே முளைக்குநில மாயெழுந்த
சித்தாந்த மார்க்கச் சிறப்பே பராபரமே.

மெய்கண்டதேவர், அருணந்திதேவர், மறைஞான சம்பந்த தேவர், உமாபதிதேவர் ஆகிய நால்வரும் சந்தான சாரியர் எனப்படுவர். இவர்களுள், மெய்கண்டார் அருணந்தி யாருக்கும், அருணந்தியார் மறைஞானசம்பந்தருக்கும், மறைஞானசம்பந்தர் உமாபதியாருக்கும் குருவாயுள்ளவர் கள். இவர்கள் இப்படித் தொடர்ச்சியாய்க் குரு சிஷ்யராய் வந்தமையினாலேதான், இவர்களுக்குச் சந்தானசாரியர்கள் என்ற பெயர் ஆயது. சந்தானம் என்பதன் பொருள் தொடர்ச்சி. இந்நால்வரும் இவ்வுலகத்திலே சந்தானசாரிய ராயிருந்ததுபோல திருக்கைலாசத்திலும் நால்வர் சந்தான சாரியராயுள்ளவர். அவர்கள் திருநந்திதேவர், சனற்குமாரர் முனிவர், சத்தியஞானதரிசிமுனிவர், பரஞ்சோதிமுனிவர் என்பவர்களாம். இவர்களுள், பரஞ்சோதிமுனிவர் மெய் கண்டாருக்குக் குருவாயுள்ளவர். ஆகவே சந்தானசாரியர் கள் திருநந்திதேவர் முதல் உமாபதிதேவரீறாக எண்மர் உள்ளவர். திருநந்திதேவர் திருக்கைலாசத்திலுள்ளவராத லால், இந்தச் சந்தானத்துக்குத் திருக்கைலாசபரம்பரை யென்று பெயர். சந்தானம் என்பதும் பரம்பரையென்பதும் ஒரேபொருளுடையவை.

சிவபிரானால் அருளப்பட்ட வேதம் சிவாகமம் ஆகிய இருவகை நூல்களிலுமுள்ளவைகளை மெய்கண்டார் முதலிய நால்வரும் தமிழிலே உபதேசித்தனர்; மறைஞானசம்பந்தர் ஒழிந்த மூவரும் அவைகளை உபதேசித்ததோடு நில்லாது, அவைகளை நூல்களாகவும் செய்தருளினர். இவர்கள்

இத்தமிழ்நூல்களைச் செய்திராவிட்டால், எமது சமயத்தை அறிய விரும்புவோர் சமஸ்கிருதத்தை அகலமாயும் ஆழமாயும் கற்று அதன்மேல் வேதசிவாகமங்களைக் கற்கவேண்டியவராவர். இவர்கள் இத்தமிழ்நூல்களைச் செய்தருளியது எமது பாக்கியமேயாம். இனி இவர்கள் சரித்திரத்தைச் சுருக்கமாகக் கூறுவாம்.

---

## மெய்கண்டதேவர்

பொய்கண்டார் காணுப் புனிதமெனு மத்துவித
மெய்கண்ட நாதன்ருள் மேவுநா ளெந்நாளோ.

தென்னாட்டிலே, திருமுதுகுன்றம் என்னும் விருத்தாசலத்துக்கு அருகாமையிலுள்ளது கடந்தைநகர் என வழங்கப்படும் திருப்பெண்ணாகடம் என்னும் தேவாரம்பெற்ற தலம். அத்தலத்தே அச்சுதகளப்பாளர் எனப் பெயரிய சைவ வேளாளர் ஒருவர் எழுநூறு ஆண்டுகளுக்கு முன்னர் இருந்தார். அவருக்குக் குலகுருவாயிருந்தவர் சகலாகம பண்டிதராகிய அருணந்திசிவாசாரியர். அச்சுதருக்குப் பிள்ளையில்லாமையால், அதைப்பற்றித் தமது குருசுவாமிகளிடம் முறையிட்டு வருந்தினர். குருநாதர் தேவாரத்திருமுறையிற் கயிறு சாத்தினர்.

பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினே டுள்ளநினை
வாயினவே வரம்பெறுவ ரையுறவேண் டாவொன்றும்
வேயனதோ ளுமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையா ரவர்தம்மைத் தோயாவாந் தீவினையே.

என்னுந் திருப்பாசுரம் உதயமாயிற்று. அப்பாடலிற் குறிப்பித்தபடி அச்சுதரும் அவர்மனைவியாரும் திருவெண்காட்டிற்குச் சென்று முக்குளநீரில் மூழ்கிச் சிலநாட்கள் வெண்காட்டு நாதரையும் பிரமவித்தியாநாயகியையும் வழி

பட்டு வந்தனர். அவ்வழிபாட்டின் பலனாக திருஞான சம்பந்தரைப்போன்ற ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அக் குழந்தை சுவேதவனப் பெருமானின் திருவருளாற் பிறந்த மையால், அப்பெயரையே அதற்கு இட்டார்கள். திரு வெண்ணெய்நல்லூர்ச் சடையப்பவள்ளல் என்பவர் இக்குழந் தைக்குத் தாய்மாமனார். அவர் இக்குழந்தையைத் தாய் தந்தையரோடு தமது வீட்டிற்கு அழைத்துச்சென்று அங்கேயே வளர்த்துவந்தார். அங்கே அப்படி வளர்ந்து வரும்போது, ஒருநாள் ஆகாயமார்க்கமாகத் திருக்கைலா சத்திலிருந்து பொதியமலைக்குச் சென்ற பரஞ்சோதிமா முனிவர், இரண்டுவருடக் குழந்தையாக வீதியில் விளையா டிக்கொண்டிருந்த இச்சிறு குழந்தையின் அதிதீவிர பக்கு வத்தைக் கண்டு, அவரை அணுகி சிவதீக்ஷைசெய்து மெய் கண்டதேவரென்னுந் திருநாமத்தைச் சூட்டி சிவஞான போதத்தை உபதேசித்தருளினர். (இச்சிவஞானபோதமே மாணிக்கவாசகருக்குச் சிவபெருமானால் திருப்பெருந்துறை யிற் குருந்தமரத்தடியில் உபதேசிக்கப்பட்டதாம். மெய் கண்டார் என்பதன் பொருள் உண்மையை அறிந்தவர் என்பது.)

திருஞானசம்பந்தரைப்போல மெய்கண்டாரும் சாமு சித்தரேயாவர். சாமுசித்தராவார் முற்பிறப்பிலே செய்த புண்ணியமேலீட்டினாலே ஞானவுணர்ச்சியுடன் பிறந்து சிவோபாசனைபண்ணுவோர். சமயாசாரியராகிய சம்பந்த ருக்கும் சந்தானசாரியராகிய மெய்கண்டாருக்கும் இளமைப் பிராயத்திலேயே ஞானோதயம் உண்டானது நோக்கத் தக்கது.

பரஞ்சோதிமகாமுனிவர் தமக்கு உபதேசித்த சிவ ஞானபோதத்தை மெய்கண்டார் தமிழிலே பன்னிரண்டு

சூத்திரமாக வகுத்து வார்த்திகம் என்னும் பொழிப்புரை, உதாரணச் செய்யுள்கள், சூர்ணிக்கொத்து என்னும் அட்டவணை ஆகிய இவற்றோடு திருவெண்ணெய் நல்லூர் அருட்டுறையிற் கோயில்கொண்டுள்ள பொல்லாப்பிள்ளையாரது திருவருளே துணையாகக்கொண்டு இயற்றியருளினர்.

தமது குடும்ப குருவாகிய அருணந்திசிவாசாரிய ரென்னும் வேதியரை வேளாளராகிய மெய்கண்டார் எப்படிச் சீடராகக் கொண்டார் என்பதை அறிவது அவசியம். மெய்கண்டார் தினந்தோறும் தமது வீட்டில் ஞான நூல்களைப் பிறருக்குப் போதித்துவந்தனர். அதனை அறிந்த அருணந்தி சிவாசாரியர், மெய்கண்டாரது பக்குவநிலையை உணராது, பிரசங்க சபைக்குச்சென்று, அலட்சியமாக "ஆணவமலத்தின் சொரூபம் யாது" என்று பிரசங்கியாராகிய மெய்கண்டாரை வினவினர். அவர் "தாங்கள் நிற்கும் நிலையே ஆணவசொரூபம்" என்று கூறித் தமது பார்வையினாலே அவருக்குச் சிவதீக்ஷை செய்தார். உடனே அருணந்தியார் மெய்கண்டாரது திருவடிகளில் வீழ்ந்து வணங்கி, அவரை ஞானகுருவாகக் கொண்டார்; சிவஞானபோதத்தை அவரால் உபதேசிக்கப்பெற்றார்; மெய்கண்டாருடைய நாற்பத்தொன்பது மாணவர்களுள் தலைசிறந்து விளங்கினர்.

மெய்கண்டாரின் மற்றைய மாணவர்களுட் சிறந்தவர் உண்மைவிளக்கஞ்செய்த மனவாசகம் கடந்தாரும், துகளறு போதம் முதலிய சாத்திர நூல்களியற்றிய சீகாழிச் சிற்றம்பலநாடிகள் முதலியோருமாவர்.

சிவஞானபோதத்திற்குப் பல உரைகள் உண்டு ஆனல் அதிகமாக வழங்கப்படுவன சிவஞானசுவாமிகள் எழுதியசிற்றுரையும் மாபாடியமும் பாண்டிப்பெருமாள்பிள்ளை இயற்றிய

விருத்தியுரையுமாம். மெய்கண்டார் சிவபதமடைந்த இடம் திருவெண்ணெய்நல்லூர். குருபூசைத்தினம் ஐப்பசிச் சுவாதி.

"சிந்திப்பாம் வெண்ணெய்நல்லூர் மெய்கண்ட தேவனடி
வந்திப்பாம் வாழ்த்தி மகிழ்வாம்."

---

## அருணந்தி சிவாசாரியர்

"பாதிவிருத் தத்தாலிப் பார்விருத்த மாகவுண்மை
சாதித்தார் பொன்னடியைத் தான்பணிவ தெந்நாளோ"

மெய்கண்டாருடைய முதல் மாணவராகிய ஆசாரிய சுவாமிகள் திருவதிகைக்குச் சமீபத்திலுள்ள திருத்துறையூரிலே ஆதி சைவகுலத்திலே பிறந்தவர். வேதசிவாகமங்களை ஐயந்திரிபறக்கற்று விளங்கியவர். இத்தகைய கல்விச் சிறப்பினாலேயே இவருக்குச் சகலாகம பண்டிதர் என்னுங் காரணப்பெயர் வழங்குவதாயிற்று. இவர் தமது ஆசிரியர் செய்தருளிய சிவஞானபோதத்தின் வழிநூலாக, 629 பாடல்களையுடைய சிவஞான சித்தியாரையும் இருபா இருபஃது என்னுஞ் சிறு நூலையும் இயற்றியவர். சிவஞான சித்தியார் பரபக்கம் சுபக்கம் என்னும் இரண்டு பாகங்களைக் கொண்டது. பரபக்கம் மற்றைய சமயங்களின் கொள்கைகளைக்கூறி அவற்றிலுள்ள பிழைகளைச் கூறுவது. சுபக்கம் சைவக்கொள்கைகளைக் கூறுவது. இச் சிவஞானசித்தியாருக்குச் சமானமான வேறுநூல் இல்லையென்று கூறுப. "சிவத்திற்குமேற் றெய்வமில்லை, சிவஞானசித்திக்குமேற் சாத்திரமில்லை" என்னும் பழமொழியை நோக்குக. தாயுமான சுவாமிகளுக்குத் தமது மௌனகுரு தேசிகரால் உபதேசிக்கப்பட்டது சிவஞானசித்தியா ரென்ப. சிவஞான

சித்தியாருக்கு ஓர் அகலவுரை வெள்ளியம்பலவாணத் தம்பிரான் சுவாமிகளால் இயற்றப்பட் டிருப்பதாகவும் அதற்கு ஞானபரண விருத்தியுரை எனப் பெயரென்றுங் கூறுப. அவ்விருத்தியுரை சிவஞான சுவாமிகள் இயற்றிய சிவஞானமா பாடியத்தை ஒத்ததென்றுங் கூறுப. இவ்வரிய உரைப்பிரதி தருமபுர ஆதீனத்திலிருப்பதாகவும் அவ்வாதீனத்தார் அச்சிட்டு வெளியிட முயற்சிசெய்து வருவதாகவும் தெரிகின்றன. முன்னரே இந் நூலுக்கு ஆறு பெரியோர்களால் இயற்றப்பட்ட உரைகள் உண்டு. இத்தனை உரைகள் இந்நூலுக்கிருப்பது இதன் சிறப்பைக் காட்டுகின்றது.

சிவாசாரியர் திருத்துறை யூரிலேயே சிவபதமடைந்தனரெனக்கூறுவர். இவர் குருபூசைத்தினம் புரட்டாசிப் பூரம்.

---

## மறைஞான சம்பந்தர்

"சிற்றம்பலமன்னுஞ் சின்மயராந் தில்லைநகர்க்
கொற்றங்குடி முதலைக்கூறுநா ளெந்நாளோ."

அருணந்தி சிவாசாரியாரின் மாணவராகிய இச்சம்பந்தர் திருப்பெண்ணாகடத்திலே வேதியர் குலத்திலே பிறந்தவர். வேதசிவாகமங்களை நன்றாய்க் கற்றுத் தெளிவுபெற்றவர். இதனால் இவருக்குமறைஞான சம்பந்தர் என்னும் பெயர் வழங்குவதாயிற்று. தமது குருநாதராகிய அருணந்தியாரிடம் பெற்ற உபதேசங்களைத் தமது மாணவருட் சிறந்த உமாபதி சிவாசாரியருக்கு உபதேசித்தருளிச் சிதம்பரத்தைச் சார்ந்து திருக்களாஞ்சேரியிலே சில ஆண்டுகள் மௌனவிரதம் பூண்டிருந்து பிறகு சிவசாயுச்சியம்

அடைந்தவர். இவர் மௌனநிலையிலேயே நின்றமையால் யாதொரு நூலுஞ்செய்ததாகத் தெரியவில்லை. இவருடைய சமாதி திருக்களாஞ் சேரியிலுள்ளது. இவரது குருபூசைத் தினம் ஆவணி உத்தரம்.

---

## உமாபதி சிவாசாரியர்

"குறைவிலருள் ஞானமுதல் கொற்றங் குடியார்தம்
நறைமலர்த்தாட் கன்புபெற்று நாமிருப்ப தெந்நாளோ"

மறைஞான சம்பந்தருடைய மாணவராகிய உமாபதி சிவம் தில்லைவாழந்தணர் மூவாயிரவரில் ஒருவர். சந்தான குரவர் நால்வருள் கடையவர். இவர் சிதம்பரத்தைச் சார்ந்த கொற்றவன்குடி என்னுங்கிராமத்தில் வசித்து வந்தமையால் கொற்றங்குடி முதலியாரென்று அழைக்கப் பட்டார். இப்பெரியார் வேதசிவாகமங்களைக் கசடறக்கற்று அவற்றின்படி நின்றவர். வடமொழியிலும் தமிழிலும் பெரும்புலமை யுடையவர். சிவ பத்தியிலும் அடியார் பத்தியிலும் சிறந்தவர்.

ஒருநாள் இச்சிவனார் நடராசப் பெருமானைப் பூசித்துத் திரும்பும்போது அக்காலத்தில் இவருக்கு ஏற்பட்டிருந்த சிவிகை, தீவர்த்தி, கொடி, பரிவாரம் முதலிய விருதுகளோடு வீதிவழியே சென்றார். இவரது ஆடம்பரத்தைக்கண்ட மறைஞான சம்பந்தர் "பட்ட கட்டையிற் பகற்குருடன் போகின்றான் பாருங்கள்" என்று குறிப்பாகக் கூறினார். இதனைக்கேட்ட நாயனார் சிவிகையினின்றும் உடனே இறங்கி மறைஞான சம்பந்தரை வணங்கி, அவர்வழியே நடப்பாராயினர். சம்பந்தர் சிவனாரது மேலான நிலையை உலகினருக்கு அறிவிக்கும் பொருட்டுத் தாம் புடைவை

நெய்பவர் வீதிக்கு ஒருநாட்சென்று அங்குள்ளவரிடம் நெசவுக்கு வைத்திருக்கும் கூழை வாங்கிப் பருகினார். அப்படிப் பருகுங்கால் அவரது முழங்கை வழியாக ஒழுகிய சேடத்தை அருகேயிருந்த உமாபதியார் ஏற்றுப்பேரானந்தத்துடன் மாந்தினார். இச் செயற்கருஞ் செய்கையை அறிந்த மற்றைய தில்லைவாழந்தணர்கள் சிவாசாரியரது உந்நதநிலையை அறியாது அவரைப் பழித்தன ரென்றும், நடேசப்பெருமானைப் பூசிக்க ஒட்டாதபடி அவரைத் தடுத்தன ரென்றும் கூறுப.

சிவாசாரிய சுவாமிகளிடம் திருவருட் சிறப்புற்று விளங்கியதென்பதற்கு பின்வரும் மகிமைகள் சான்று கூறும்:—

1. பெற்றான் சாம்பான் என்னும் பஞ்சமகுல சிவ பக்தனுக்குச் சபாநாயகரது,

"அடியார்க் கெளியன் சிற்றம்பலவன் கொற்றங்
குடியார்க்கெழுதிய கைச்சீட்டுப்—படியின்மிசைப்
பெற்றான் சாம்பானுக்குப் பேதமறத் தீக்கைசெய்து
முத்தி கொடுக்கமுறை.

என்னுந் திருமுகப் பாசுரத்தின்படி முத்திகொடுத் தருளின மையும் பின்பு அச் சாம்பானுடைய மனைவியும் அரசன் முதலியவர்களும் காணப் பரிபக்குவ மடைந்திருந்த முள்ளிச்செடி ஒன்றினுக்கு முத்தி கொடுத்தருளியது.

2. சிதம்பரத்தில் நிகழும் மார்கழித் திருவாதிரைத் திருவிழா ஒன்றிலே கொடியேறாது தடைபட்டு நின்ற போது "கொடிக்கவி" என்னும் சிறுநூலைப் பாடி ஏறச் செய்தருளியது.

3. சிதம்பர மான்மியங்கள் பல. அவற்றுள் கோயிற் புராணம் ஒன்று. இது சிவனார் பாடியது. இப்புராணம் அரங்கேற்றப்படாமல் பேடகத்துள் வைக்கப்பட்டிருந்த பொழுது, தாம் உமாபதி சிவத்தின் பேடகத்துள் மறைந்து இருப்பதாகச் சபாநாயகர் தில்லைவாழந்தணர்களுக்கு அறிவித்தமையும் அவர்கள் ஆசாரிய சுவாமிகளைத் தேடி வந்து கோயிற் புராணத்தை அரங்கேற்றச் செய்தமையுமாம்.

சிவனார் இயற்றிய நூல்களாவன:—

சித்தாந்த அட்டகம் (சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினாவெண்பா, போற்றிப் பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சு விடுதூது, உண்மைநெறி விளக்கம், சங்கற்ப நிராகரணம்) கோயிற்புராணம், திருத்தொண்டர் புராணசாரம், சேக்கிழார் புராணம், திருமுறைகண்ட புராணம், திருப்பதிக்கோவை, சிவநாமக்கலி வெண்பா, பௌட்கராகம வடமொழி வியாக்கியானம் முதலியன. இவற்றுள் சிவப்பிரகாசமாவது, எளிய செய்யுள் நடையில் முதல் நூலாகிய சிவஞானபோதம் அதன் வழி நூலாகிய சிவஞான சித்தியார் ஆகிய இவ்விரு நூல்களுட் கூறப்பட்ட விஷயங்களைச் சுருங்கச் சொல்லி விளங்கவைப்பது. பாசப்பற்று நீங்க ஞானம்பெற்றுத் திருவடியை அடையும் முறையைத் தெளிவாய்க் காட்டுவது. இவ்வரிய சார்பு நூலுக்குத் திருவிளங்கத் தேசிகர் எழுதிய புத்துரையே இக்காலத்திற்கு ஏற்றது.

திருவருட்பயன் நூறு திருக்குறட் பாக்களால் சித்தாந்தக் கருத்துகளைச் சுருங்கக் கூறுவது. இதற்குப் பல பழைய உரைகளிருப்பினும் புலோலி ஸ்ரீமத். சு. சிவபாத சுந்தரம்பிள்ளையவர்கள் எழுதிய விளக்கவுரையே தற்கால உலக நிலைமைக்கு இயைந்ததென்று கூறலாம். ஏனைய சிறு

நூல்களும் சித்தாந்த சாத்திரக் கருத்துக்களை விளக்கு வனவாம்.

சுவாமிகள் அடியார் பக்தியிற் சிறந்தவரென்பது அவர்கள் பாடிய திருத்தொண்டர் புராணசாரம், சேக்கிழார் புராணம் முதலியவற்றால் அறியலாம். சேக்கிழாரிடத்துப் பேரன்புடையவ ரென்பது பின்வரும் திருவிருத்தத்தாற் புலப்படுகின்றது.

மதுரவிராமாயண கதையுரைசெய்த வான்மிகபகவனு மொப்பல்ல
விதிவழி பாரதமுரைசெய்து கரைசெய்த வேதவியாதனு மொப்பல்ல
சீதைவறவாயிர நாவுடனறிவுள சேடவிசேடனு மொப்பல்ல [பார்.
பொதியமலைக்குறு முனிவனு மொப்பல புகழ்புனைகுன்றை முனிக்கென்

—சேக்கிழார் புராணம்.

கோயிற்புராணம் சிதம்பரத்தின் பெருமையைக் கூறுவது. இதன்கண் சைவசித்தாந்த நுண் பொருள்கள் ஆங்காங்கு கூறப்பட்டுள்ளன. ஏனைய நூல்களும் இத்தன்மையனவே.

சுவாமிகள் விளங்கியகாலம் இப்போதைக்கு 650 ஆண்டுகளுக்கு முன்னரென்பது அவர்கள் இயற்றிய சங்கற்ப நிராகரணத்தால் தெரிகின்றது.

சுவாமிகளின் பரம்பரையில் வந்தமாணவரே திருவாவடுதுறை ஆதீனத் தாபகராகிய நமச்சிவாய தேசிகரும் தருமபுர ஆதீனத் தாபகராகிய ஞானசம்பந்த தேசிகருமாம். சுவாமிகளின் திருக்கோயில் கொற்றவன் குடியில் அமைக்கப்பட்டுள்ளது. இவர் சிவபதமடைந்த தினம் சித்திரை அத்தமாகும்.

மெய்கண்ட சாத்திரமெனப்படும் சித்தாந்த சைவஞான சாத்திரங்கள் திருவுந்தி முதற் சங்கற்ப நிராகரணம் இறுதியாக வரும் பதினன்குமாம். அவற்றின் பெயரும் முறையும் பின்வரும் வெண்பாவால் அறியலாம்.

உந்திகளிறு வுயர்போதஞ் சித்தியார்
பிந்திருபா வுண்மைப் பிரகாசம்—வந்தவருட்
பண்புவினு போற்றி கொடிபாசமிலா நெஞ்சுவிடு
உண்மைநெறி சங்கற்ப முற்று.

| நூல் | ஆசிரியர் |
|---|---|
| 1. திருவுந்தியார் | திருவியலூர் உய்யவந்ததேவநாயனர். |
| 2. திருக்களிற்றுப்படியார் | திருக்கடவூர் உய்யவந்ததேவநாயனர். |
| 3. சிவஞானபோதம் | மெய்கண்டதேவநாயனர். |
| 4. சிவஞானசித்தியார் | அருணந்தி சிவாசாரியர். |
| 5. இருபா இருபஃது | அருணந்தி சிவாசாரியர். |
| 6. உண்மை விளக்கம் | மனவாசகங் கடந்தார். |
| 7. சிவப்பிரகாசம் | உமாபதி சிவம். |
| 8. திருவருட்பயன் | உமாபதி சிவம். |
| 9. வினுவெண்பா | உமாபதி சிவம். |
| 10. போற்றிப் பஃறொடை | உமாபதி சிவம். |
| 11. கொடிக் கவி | உமாபதி சிவம். |
| 12. நெஞ்சுவிடுதூது | உமாபதி சிவம். |
| 13. உண்மைநெறிவிளக்கம் | உமாபதி சிவம். |
| 14. சங்கற்ப நிராகரணம் | உமாபதி சிவம். |

மேற்கூறிய தமிழ்ச்சித்தாந்த சாத்திர நூல்களுக்குச் சார்பாகப் பின்வந்தவர்களால் பல நூல்கள் ஆக்கப்பட்டன. அவை தருமபுரம் திருவாவடுதுறை ஆதீனங்களிலிருந்த சிவானுபவச் செல்வர்களால் அவ்வப்போது இயற்றப்பட்டவை. அவை பண்டார சாத்திரமென வழங்கப்படும். சிற்றம்பல நாடிகள் சாத்திரக்கொத்து,

முத்திநிச்சயம், சிவநெறிப் பிரகாசம், தத்துவப் பிரகாசம், சிவபோக சாரம் முதலியன இவ்வரிசையிற் சேர்ந்தனவாம்.

திருவுந்தியார், சிவஞானபோதம், சிவஞானசித்தியார், இருபாஇருபஃது, சிவப்பிரகாசம், திருவருட்பயன், உண்மை விளக்கம், உண்மைநெறி விளக்கம், கொடிக்கவி, வினாவெண்பா முதலிய நூல்கள் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன. இம்மொழிபெயர்ப்பின் மூலமாகவே ஏனையோருக்குச் சைவசித்தாந்தக் கொள்கை இன்னதென்று தெரியலாயிற்று. இவ்வாறு ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துப் பெரும்புகழ் படைத்தவர் எனது நண்பரும் பேரறிஞருமாகிய நல்லசாமிப் பிள்ளையவர்களாம். அவர்கள் சைவ சமயத்திற்காகப் புரிந்ததொண்டு மிகவும் போற்றத் தக்கதாம். இச்சைவப்பெரியார் 1920-ல் மதுரையில் சிவபதமடைந்தனர்.

சித்தந் தெளிந்து சிவமானோ ரெல்லார்க்கும்<br>
கொத்தடிமை யான குடிநான் பராபரமே.

திருச்சிற்றம்பலம்.

உ

கணபதி துணை.

# நால்வர் நான்மணிமாலை

## மூலமும் உரையும்.

யாழ்ப்பாணத்து நல்லூர்

**ஆறுமுகநாவலரவர்கள்**

சிதம்பர சைவப்பிரகாச வித்தியாசாலைத்

தருமபரிபாலகர்

**க. பொன்னுஸ்வாமி அவர்களால்**

சென்னபட்டணம்

**வித்தியாநுபாலனயந்திரசாலையில்**

அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

1955.

# நால்வர் நான்மணிமாலை

[ உரையுடன் ]

## காப்பு

குறள் வெண்பா

எப்போ தகத்து நினைவார்க் கிடரில்லை
கைப்போ தகத்தின் கழல்.

இதன் பொருள். *எப்போதும்-எக்காலத்தும், அகத்து - மனத்தின்கண், கைப் போதகத்தின் - துதிக்கையையுடைய யானைமுகத்தையுடைய விநாயகப்பெருமானது, கழல் - திருவடிகளை, நினைவார்க்கு - நினைப்பவர்க்கு, இடர் இல்லை - யாதொரு துன்பமும் இல்லை, என்றவாறு.*

## நூல்

நேரிசை வெண்பா

பூவான் மலிமணிநீர்ப் பொய்கைக் கரையினியற்
பாவான் மொழிஞானப் பாலுண்டு—நாவான்
மறித்தெஞ் செவியமுதால் வார்த்தபிரான் றன்னடை
வெறித்தண் கமலமே வீடு.

இ - ள். *பூவால் - தாமரைப் பூக்களால், மலி - நிறைந்த, மணி நீர் பொய்கை கரையின் - பரிசுத்தமான நீரையுடைய தடாகக்கரையில், மொழி ஞானப்பால் உண்டு - (அம்மையாரால் கொடுக்கப்பட்ட) புகழ்கின்ற ஞானப்பாலை*

உண்டு, மறித்து - மத்தித்து, அமுதாய் - அமுதாக, இயற் பாவால் - தேவாரப்பாக்களால், எம் செவி - எமது காது களுக்கு, வார்த்த பிரான் - வார்த்தபிரானாகிய திருஞான சம்பந்தனது, தண்டை - தண்டையணிந்த, வெறி தண் கமலமே - வாசனை பொருந்திய குளிர்ந்த தாமரைபோன்ற திருவடியே, வீடு - அடியேனுக்கு வீட்டைத் தருவதாகும். எ - று.

உமாதேவியாரால் கொடுக்கப்பட்ட ஞானப்பாலை உண்ட திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரின் திருவடிகளே அடியேன் வீடுபெறுவதற்கு ஏதுவாகும் என்பது கருத்து.

பிள்ளையார், சிவன் சத்தி இருவராலும் ஆளப்பட்டமையி னாலே **ஆளுடையபிள்ளையார்** என்னுந் திருப்பெயரும், சிவஞானத் தோடு சம்பந்தஞ் செய்தலினாலே **திருஞானசம்பந்தமூர்த்தி** என்னுந் திருப்பெயரும் உடையராயினார். (1)

கட்டளைக்கலித்துறை

வீட்டிற்கு வாயி லெனுந்தொடை சாத்துசொல்
வேந்தபொது
வாட்டிற்கு வல்ல னொருவற்கு ஞான
வமுதுதவி
நாட்டிற் கிலாத குடர்நோய் நினக்குமுன்
னல்கினுமென்
பாட்டிற்கு நீயு மவனுமொப் பீரெப்
படியினுமே.

இ - ள். வீட்டிற்கு - முத்திபடைதற்கு, வாயில் எனும் - (யாவரானும்) ஏதுஎன்று சிறப்பித்துச் சொல்லப் படுகின்ற, தொடைசாத்து - தேவாரப்பாக்களை (சிவ பெருமானுக்கு) அணிந்த, சொல் வேந்த - திருநாவுக்கரசே!,

பொது ஆட்டிற்கு வல்லன் - கனகசபையில் நடனஞ் செய்தற்கு வல்லனாகிய சிவபெருமான், ஒருவற்கு - ஆளுடைய பிள்ளையார்க்கு, (நாட்டிற்கு இலாத-உலகத்திற்கு இல்லாத,) ஞான அமுது உதவி - ஞானப்பாலைக் கொடுத்து, நாட்டிற்கு இலாத - உலகத்திற்கு இல்லாத, குடர் நோய் - சூலைநோயை, நினக்கு - உனக்கு, முன் நல்கினும் - முற்காலத்துக் கொடுத்தபோதிலும், பாட்டிற்கு - (அச்சிவபெருமானை மீது பாடும்) பாட்டிற்கு, அவனும் நீயும் - அவ்வாளுடைய பிள்ளையாரும் நீயும், எப்படியினும்-எவ்வகையினும், ஒப்பீர்-ஒத்திருக்கின்றீர், என் - (அங்ஙனம் கொடுத்த அச்சிவ பெருமானுக்கு) யாது பயன்? எ - று. (2)

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

படியிலா நின்பாட்டி லாரூர நனிவிருப்பன்
பரம னென்ப
தடியனே னறிந்தனன்வான் றொழுமீச னினைத்தடுத்தாட்
கொண்டு மன்றித்
தொடியுலா மென்கைமட மாதர்பா னினக்காகத்
தூது சென்று
மிடியிலா மனைகடொறு மிரந்திட்டு முழன்றமையால்
விளங்கு மாறே.

இ - ள். ஆரூர - நம்பியாரூரனே!, வான் தொழும் ஈசன் - தேவர்கள் தொழுகின்ற சிவபெருமான், நினை - நின்னை, தடுத்து ஆட்கொண்டும் - திருமணஞ் செய்யா வண்ணம் தடுத்து அடிமை கொண்டும், அன்றி - அஃதல்லாமல், தொடி உலாம் - வளைகள் பொருந்தியுள்ள, மென் கை மடமாதர்பால் - மெல்லிய கைகளையும் மடமையையுமுடைய பெண்களிடத்து, நினக்காக - நின்பொருட்டு, தூது

சென்றும் - அதுபோகியும், மிடி இலா - வறுமையில்லாத, மனைகள்தொறும் - வீடுகள்தோறும், இரந்து இட்டும் - அன்னம் ஏற்றுக்கொடுத்தும், உழன்றமையால் - நின்பின் திரிந்தமையாலும், நின் படி இலா பாட்டில் - நினது ஒப்பில்லாத பாட்டில், பரமன் நனி விருப்பன் என்பது - அப்பெருமான் மிக விருப்பமுடையன் என்பதை, அடியேன் - அடியேன், விளங்குமாறு - விளங்கும்படி, அறிந்தனன் - யான் ஆராய்ந்து அறிந்தேன். எ - று. (3)

நேரிசையாசிரியப்பா

**விளங்கிழை பகிர்ந்த மெய்யுடை முக்கட்**
**காரண னுரையெனு மாரண மொழியோ**
**வாதிசீர் பரவும் வாதவூ ரண்ணன்**
**மலர்வாய்ப் பிறந்த வாசகத் தேனோ**
**யாதோ சிறந்த தென்குவீ ராயின்**
**வேத மோதின் விழிநீர் பெருக்கி**
**நெஞ்சநெக் குருகி நிற்பவர்க் காண்கிலேந்**
**திருவா சகமிங் கொருகா லோதிற்**
**கருங்கன் மனமுங் கரைந்துகக் கண்க**
**டொடுமணற் கேணியிற் சுரந்துநீர் பாய**
**மெய்ம்மயிர் பொடிப்ப விதிர்விதிர்ப் பெய்தி**
**யன்ப ராகுந ரன்றி**
**மன்பதை யுலகின் மற்றைய ரிலரே.**

இ - ள். விளங்கு இழை - விளங்குகின்ற ஆபரணத்தையுடைய உமாதேவியார், பகிர்ந்த - பங்கிட்டுக்கொண்ட, மெய் உடை - திருமேனியையுடைய, முக்கண் காரணன் - மூன்று கண்களையுடைய உலககாரணனாகிய சிவபெருமானது, உரை எனும் - திருவாக்கு என்று சிறப்பித்துச் சொல்லும்,

ஆரணமொழியோ - வேத வாக்கோ, ஆதி சீர் பரவும் - அச் சிவபெருமானது சிறப்பைத் துதிக்கின்ற, வாதவூர் அண்ணல் - திருவாதவூர்த் தலைவராகிய மாணிக்கவாசகரது, மலர் வாய் பிறந்த - செங்குமுதம்போன்ற வாயினின்றும் உண்டான, வாசகத்தேனோ- திருவாசகமாகிய தேன்தானோ, சிறந்தது - மேன்மையுடையது, யாதோ என்குவீராயின் - யாதோ என்று வினவுவீரேல், மன்பதை உலகில் - மக்கட் பரப்பையுடைய இவ்வுலகத்தில், வேதம் (பலகால்) ஓதின் - வேதத்தைப் பலமுறை யோதினும், (அது கேட்டு), விழிநீர் பெருக்கி - கண்களினின்றும் நீரைப் பெருகச் செய்து, நெஞ்சம் நெக்குருகி - மனம் குழைந்துருகி, நிற்பவர் காண்கிலேம் - நிற்கின்றவர்களை (யாம்) கண்டிலம்; திருவாசகம் - திருவாசகத்தை, ஒருகால் ஓதின் - ஒருமுறை யோதினும், கருங்கல் மனமும் - கருங்கல்லைப்போன்ற மனமும், கரைந்து உக - உருகிக் கசிய, தொடு மணல் கேணியில் - தோண்டுகின்ற மணற்கேணி சுரக்குமாறுபோல, கண்கள் நீர் சுரந்து - கண்கள் நீர் பெருகி, பாய - (சுற்றும்) பாய, மெய் மயிர் - உடலிலுள்ள மயிர்கள், பொடிப்ப - சிலிர்க்க, விதிர்விதிர்ப்பு எய்தி - நடுநடுக்க மடைந்து, அன்பர் ஆகுநர் அன்றி - அன்பவர் ஆகுபவரல்லது, மற்றையர் இலர் - அன்பர் ஆகாரிலர். எ - று. (4)

நேரிசை வெண்பா

இலைபடர்ந்த பொய்கை யிடத்தழுதல் கண்டு<br>
முலைசுரந்த வன்னையோ! முன்னின்—னிலைவிளம்பக்<br>
கொங்கை சுரந்தவருட் கோமகளோ சம்பந்தா<br>
இங்குயர்ந்தா ளார்சொல் லெனக்கு.

இ - ள். சம்பந்தா - திருஞானசம்பந்த மூர்த்தியே! இலை படர்ந்த - தாமரையிலைகள் பரவிய, பொய்கையிடத்து - தடாகக் கரையில் (பிரமதீர்த்தக் கரையில்), அழுதல் கண்டு - (நீ) அழுதலைப் பார்த்து, முலை சுரந்த - திருமுலைப்பால் சுரந்த, அன்னையோ - அன்னையாகிய அம்பிகையோ?, முன் - முன்னே, நின் நிலை விளம்ப - நினது நிலைமையைச் (சோணாட்டந்தணன் ஒருவன்) சொல்லும்போதே, கொங்கை சுரந்த - திருமுலைப்பால் சுரந்த, அருள் கோ மகளோ - அருட்பெருக்கையுடைய மங்கையர்க்கரசியோ?, இங்கு - இவ்வுலகத்தில், உயர்ந்தாள் - இவ்விருவருள் உயர்ந்தவர், ஆர் - யாவர்? என்க்கு சொல் - எனக்குச் சொல்லுவாய். எ - று. (5)

கலித்துறை

எனக்கன்பு நின்பொருட் டெய்தாத தென்கொல்வெள்
ளேறுடையான்
தனக்கன்பு செய்திருத் தாண்டக வேந்தவித்
தாரணியி
னினக்கன்பு செய்கின்ற வப்பூதி யைச்சிவ
நேசமுறு
மினர்க்கன்பு செய்நம்பி யாரூர னேத்து
மியல்பறிந்தே.

இ - ள். வெள் ஏறு உடையான் தனக்கு - வெள்ளிய இடப வாகனத்தையுடைய சிவபெருமானை, அன்பு செய் - அன்பு செய்விக்கின்ற, திருத்தாண்டக வேந்த - திருத்தாண்டகமென்னும் தேவாரப் பாக்களைப் பாடியருளிய திருநாவுக்கரசே!, இத்தாரணியில் - இவ்வுலகத்தில், நினக்கு - நின்னிடத்து, அன்பு செய்கின்ற—, அப்பூதியை - அப்பூதி நாயனாரை, சிவநேசம் உறும் - சிவபெருமானிடத்து அன்

புற்ற, இனர்க்கு - அடியவரிடத்து, அன்பு செய் - அன்பு செய்கின்ற, நம்பி ஆரூரன் - சுந்தரமூர்த்திநாயனுர், எத்தும் இயல்பு அறிந்தும் - துதிக்கின்ற இயல்பை அறிந்திருந்தும், எனக்கு—, அன்பு - அன்பானது, நின்பொருட்டு - நின்னிமித்தம், எய்தாதது - அடையாதது, என் - யாது காரணம். எ - று.

கொல் - அசை. (6)

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

அறிந்து செல்வ முடையானு
மளகைப் பதியாற் ருேழமைகொண்
டுறழ்ந்த கல்வி யுடையானு
மொருவன் வேண்டு மெனவிருந்து
துறந்த முனிவர் தொழும்பரவை
துணேவா! நினைத்தோ ழமைகொண்டான்
சிறந்த வறிவு வடிவமாய்த்
திகழு நுதற்கட் பெருமானே.

இ - ள். துறந்த முனிவர் - முற்றத்துறந்த முனிவர்கள், தொழும் - தொழுகின்ற, பரவை துணைவா - பரவை கேள்வனே!, சிறந்த அறிவு வடிவமாய் - இயற்கையறிவு சொரூபமாய், திகழும் - விளங்குகின்ற, நுதல் கண் பெருமானே - நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான்றனே, அறிந்து - தெரிந்து, செல்வம் உடையான் - பொருட் செல்வத்தை யுடையவனும், அளகைப்பதியான் ஆம் - அளகாபுரிக்குத் தலைவனுமாகிய குபேரனை, தோழமை கொண்டு - சிநேகங்கொண்டு, உறழ்ந்த - தம்மை ஒத்த, கல்வி உடையானும் - கல்விச்செல்வ முடையவனும், ஒருவன் வேண்டுமென - ஒருவன் வேண்டுமென்று, இருந்து - தேடியிருந்து,

நின் - நின்னை, தோழமை கொண்டான் - சிநேகமாகக் கொண்டான். எ - று. (7)

நேரிசையாசிரியப்பா

பெருந்துறை புகுந்து பேரின்ப வெள்ள
மூழ்கிய புனிதன் மொழிந்தவா சகமே
வாசக மதற்கு வாச்சியந்
தூசக லல்குல்வேய்த் தோளிடத் தவனே.

இ - ள். பெருந்துறை புகுந்து - திருப்பெருந்துறை யென்னும் திருப்பதியையடைந்து, பேரின்பவெள்ளம் மூழ்கிய-பேரின்பமாகிய வெள்ளத்தில் அமிழ்ந்த, புனிதன்-பரிசுத்தனாகிய மணிவாசகப்பெருமான், மொழிந்த வாசகமே - சொல்லிய திருவாசகமே, வாசகம் - வாசகமாகும்; அதற்கு - அத் திருவாசகத்திற்கு, வாச்சியம்-வாசகத்தால் உணர்த்தப்படும் பொருள், தூசு அகல் அல்குல் - ஆடையணிந்த அகன்ற அல்குலையும், வேய் தோள் - மூங்கிலையொத்த தோளையுமுடைய உமாதேவியை, இடத்தவனே - இடப் பாகத்திற்கொண்ட சிவபெருமானே ஆவன். எ - று. (8)

நேரிசை வெண்பா

இடுகாட்டுண் மாத ரெலும்பிற் புரண்மால்
சுடுகாட்டு ளாடுவாற் சுட்டி—னெடுகாட்டுஞ்
சம்பந்தா! என்புநின் பாற் றந்தாகிக் கொண்டிலனென்
கும்பந்தா மென்னுமுலைக் கொம்பு.

இ - ள். சுடுகாட்டுள் - சுடுகாட்டிலே, ஆடுவான் - நடிப்பவனாகிய சிவபெருமானை, சுட்டினெடு காட்டும் - சுட்டுதலோடு காட்டிய, சம்பந்தா - திருஞானசம்பந்த

மூர்த்தியே!, இடுகாட்டுள் - சுடுகாட்டுள், மாதர் - பிருந்தை யினது, எலும்பில் - எலும்பிலே, புரள் மால் - புரண்ட திருமால், என்பு நின்பால் தந்து - அவ்வெலும்பை நின்னிடத்துக் கொடுத்து, கும்பம் தாம் என்னும் - அமுத கலசமென்று சொல்லும்படியான, முலைக்கொம்பு-தனங்களையுடைய பூங்கொம்புபோலும் ஓர் அரிய பெண்ணாக, ஆக்கிக் கொண்டிலன் என் - அங்ஙனம் செய்துகொள்ளாமைக்குக் காரணம் யாது? எ - று. (9)

கட்டளைக்கலித்துறை

**கொள்ளைக் கதிர்முத்தின் பந்தருஞ் சின்னமுங்**
**கொள்ளுமொரு**
**பிள்ளைக் கதுதகு நாவர சாய**
**பெருந்தகையோய்!**
**கள்ளைக் குவளை யுமிழ்வீ ழியிற்படிக்**
**காசொன்றுநீ**
**வள்ளைக் குழையுமை பங்காளர் கையிலென்**
**வாங்கினையே.**

இ - ள். நாவரசு ஆய பெருந்தகையோய் - வாகீசரெனும் திருநாமம் பொருந்திய பெருந்தகைமை வாய்ந்தவரே!, வள்ளை குழை உமை பங்காளர் கையில் - வள்ளையிலை போலும் காதுகளையுடைய அம்பிகைபாகராகிய சிவபெருமானது கையில், கொள்ளைக்கதிர் முத்தின் பந்தரும் - (திருப்பட்டீச்சுரத்திலே) கிரணங்களை வீசும் முத்துப்பந்தரும், சின்னமும் - (திருவரத்துறையிலே) முத்துச் சின்னமும், கொள்ளும் ஒரு பிள்ளைக்கு - வாங்கிக்கொண்ட ஆளுடைய பிள்ளையாருக்கு, குவளை கள்ளை உமிழ் வீழியில் - குவளைமலர் தேனைச் சொரிகின்ற திருவீழிமிழலையிலே,

படிக்காசு ஒன்று அது தரும் - படிக்காசு ஒன்றை வாங்குதனும் தரும், நீ என் வாங்கினை - நீர் (அப் பிள்ளைபோல அப் படிக்காசு ஒன்றை) யாதுக்குப்பெற்றீர்? (சிவபெருமானது கட்டளையை மறுத்தற்கு அஞ்சியோ?) எ - று. ()

எண்சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

வாங்குசிலை புரையுமுட லெனுங்குளத்தின் மூல
மலமெனுமோர் வெங்கரவின் பகுவாயி னின்றும்
தீங்கிலுயி ரெனும்பனவக் குலமகனை யாதி
திரோதாயி யென்னுமொரு வெந்திறற் கூற்றுவனுல்
ஓங்குறுநா தாந்தமெனப் பெயரியவக் கரையின் [டாய்
உமிழ்வித்துச் சிவமெனுமோர் தந்தையொடுங் கூட்
கோங்கமுகை கவற்றுமிள முலைப்பரவை மகிழக்
குண்டையூர் நென்மலைமுற் கொண்டவருட் கடலே.

இ - ள். கோங்கம் முகை-கோங்கரும்பை, கவற்றும்- (தாம் அழகால்) வருத்தும், இளமுலை - இளமைவாய்ந்த தனங்களையுடைய, பரவை மகிழ - பரவைநாச்சியார் மகிழ்ச்சியடையும்படி, முன் - முன்பு, குண்டையூர் - குண்டையூரிலுள்ள, நெல் மலை - நென்மலையை, கொண்ட - (திருவாரூரில் பூதங்களாற் கொணர்ந்து) குவிக்கப்பெற்ற, அருட்கடலே - கருணைக்கடலாகிய நம்பியாரூரரே!, வாங்கு சிலை புரையும் - வளையும் வில்லை யொத்திருக்கின்ற, உடல் எனும் குளத்தில் - தேகம் எனப்படும் மடுவிலே, மூலமலம் எனும் - ஆணவமலம் எனப்படும், ஓர் வெம் கரவின் - ஒரு வெவ்விய முதலையினது, பகுவாயின் நின்றும் - பிளவுபட்ட வாயிலிருந்தும், தீங்கு இல் - அழிவில்லாத, உயிர் எனும் - உயிர் எனப்படும், பனவக்குலமகனை - அந்தணகுலப் புதல்வனை, ஆதி திரோதாயி எனும் - தொடக்கத்தே

திரோதானசத்தி யெனப்படும், ஒரு வெம்திறல் கூற்றுவ ஞல் - ஒரு வெவ்விய வலிய இயமனுல், ஓங்குறும் - உயர்ந்த, நாதாந்தம் என பெயரிய - நாதாந்தமெனப் பெயர்பெற்ற, அ கரையின் - அக்கரையிலே, உமிழ்வித்து - கக்குவித்து, சிவம் எனும் - சிவமெனப்படும், ஓர் தந்தையொடும் - ஒப்பற்ற பிதாவோடும், கூட்டாய் - சேர்ப்பீராக. எ - று.

*சிவபிரானது ஐந்து அருட்டொழிலைக் கூறுவதாம்.* (11)

நேரிசையாசிரியப்பா

**கடனிற வண்ணன் கண்ணென் றிடந்து**
**மறைச்சிலம் பரற்று மலரடிக் கணியப்**
**பரிதி கொடுத்த சுருதிநா யகற்கு**
**முடிவிளக் கெரித்துங் கடிமலர்க் கோதைச்**
**சுரிகுழற் கருங்கட் டுணைவியை யளித்து**
**மருமக ணறும்பூங் கருமயி ருதவியு**
**நென்முளை வாரி யின்னமு தருத்தியுங்**
**கோவண நேர்தனை நிறுத்துக் கொடுத்து**
**மகப்படு மணிமீ னரற்கென விடுத்தும்**
**பூட்டி யரிவா ளூட்டி யரிந்துந்**
**தலையுடை யொலிக்குஞ் சிலையிடை மோதியு**
**மொய்ம்மலர்க் கோதை கைம்மலர் துணித்துந்**
**தந்தையைத் தடிந்து மைந்தனைக் கொன்றுங்**
**குற்றஞ் செய்த சுற்றங் களைந்தும்**
**பூக்கொளு மாதின் மூக்கினை யரிந்து**
**மிளமுலை மாதர் வளமை துறந்தும்**
**பண்டைநா ளொருசிலர் தொண்ட ராயினர்**
**செங்கண்மா றடக்கையிற் சங்க நாண**
**முட்டாட் டாமரை முறுக்கவிழ் மலர்மேல்**
**வலம்புரி கிடக்கும் வாதவூ ரன்ப**

பாடும் பணிநீ கூடும் பொருட்டு
மதுரைமா நகரிற் குதிரை மாறியும்
விண்புகழ் முடிமிசை மண்பொறை சுமந்து
நீற்றெழின் மேனியின் மாற்றடி பட்டு
நின்னைத் தொண்ட னென்னக் கொண்டன
னிருக்கு மடுக்க லரக்க னெடுப்ப
முலைபொர வரைபொரு மொய்ம்பின்
மலைமக டழுவ மனமகிழ் வோனே.

இ - ள். செம் கண் மால் - செந்தாமரை மலர்போலும் சிவந்த கண்களையுடைய திருமாலினது, தட கையில் சங்கம் நாண - பெரிய கையிலேந்திய பாஞ்சசன்னியமென்னும் சங்கு நாணும்படி, முள் தாள் தாமரை - முள்ளரைகளையுடைய நாளத்தையுடைய தாமரையினது, முறுக்கு அவிழ் மலர்மேல் - கட்டவிழ்ந்த மலரின்மீது, வலம்புரி கிடக்கும் வாதவூர் அன்ப - வலம்புரிச்சங்கு தங்கும் திருவாதவூரில் அவதரித்த அன்பரே!, கடல் நிறம் வண்ணன் - கடல் போலும் கரியநிறத்தையுடைய திருமால், கண் ஒன்று இடந்து - (திருவீழிமிழலையில்) தன் கண்களிலொன்றைப் பெயர்த்து, மறைச் சிலம்பு அரற்றும் - வேதமாகிய சிலம்பு ஒலிக்கின்ற, மலர் அடிக்கு அணிய - மலர்ந்த திருவடிக்குச் சாத்த, பரிதி கொடுத்த - (அத்திருமாலுக்குச்) சக்கரப் படையைக் கொடுத்த, சுருதி நாயகற்கு - வேதமுதற் பொருளாகிய சிவபெருமானுக்கு, முடி விளக்கு எரித்தும் - (கணம்புல்லநாயனார்) தம்முடியை விளக்காக எரியச் செய்தும், கடி மலர் கோதை - வாசனை பொருந்திய மலர் மாலை யணிந்த, சுரி குழல் - சுருண்ட கூந்தலையும், கரும் கண் - கரிய கண்களையுமுடைய, தலைவியை - (இல்வாழ்க்

னைத்) துணையாகுந் தம்மனைவியை, அளித்தும் - (இயற்பகை நாயனார்) கொடுத்தும், அருமகள் - (மானக்கஞ்சாறநாயனார்) தம் அரிய புதல்வியின், நறும் பூ கரு மயிர் - வாசனை மிக்க அழகிய கரிய கூந்தலை, உதவியும் - கொடுத்தும், நெல் மூளை வாரி - (இளையான்குடிமாற நாயனார்) வயலில் நீரில் மிதந்த நெற்களின் மூளையை வாரிக் கொடுவந்து, இன் அமுது அருத்தியும் - இனிய அமுதாகச் சமைத்து அதனை உண்பித்தும், கோவணம் நேர் - கோவணத்திற்கு நேராக, தனை நிறுத்து கொடுத்தும் - (அமர்நீதி நாயனார்) தன்னையும் நிறுத்துக் கொடுத்தும், அகப்படும் மணிமீன் - (அதிபத்தநாயனார் தம் வலையில் முன்) அகப்படுகின்ற இரத்தினகசிதமாகிய உறுப்புக்களமைந்த பொன்மீனை, அரற்கு என விடுத்தும் - சிவபெருமானுக்கு உரித்தெனக் கடலில் விடுத்தும், அரிவாள் பூட்டி - (அரிவாட்டாயநாயனார்) அரிவாளைப் பூட்டி, ஊட்டி அறிந்தும் - தம் கழுத்தை யறுத்தும், உடை ஒலிக்கும் - ஆடையைத் துவைக்கின்ற, சிலையிடை - கற்பாறையினில், தலை மோதியும் - (திருக்குறிப்புத்தொண்டநாயனார்) தம் தலையைத் தாக்கியும், மொய் மலர் கோதை - (கழற்சிங்க நாயனார் தமது) வண்டுகள் மொய்கின்ற மலர்களையணிந்த கூந்தலையுடைய மனைவியின், மலர் கை துணித்தும் - செந்தாமரை மலர்போன்ற கையைச் சேதித்தும், தந்தையை தடிந்தும் - (சண்டேசுரநாயனார்) தம் பிதாவின் தாளைத் துணித்தும், மைந்தனை கொன்றும் - (சிறுத்தொண்ட நாயனார்) தம் புதல்வனைச் சமைத்தற்குக் கொன்றரிந்தும், குற்றம் செய்த - சிவாபராதம் செய்த, சுற்றம் களைந்தும் - உறவினருள் ஓர் சிறுவனும் எஞ்சாவகை (கோட்புலிநாயனார்) சிதைத்தும், பூ கொளும் - (சிவபிரான் திருமுற்றத்துச் சிந்திய) மலரை யெடுத்த, மாதின் மூக்கினை - நங்கையின் நாசியை, கொய்தும் -

(செருத்துணைநாயனார்) அரிந்தும், இளமுலை மாதர் வளமை - இளங்கொங்கைகளையுடைய மகளிர்பால் நுகரும் இன்பத்தை, துறந்தும் - (திருநீலகண்ட நாயனார்) ஒழித்தும், பண்டைநாளில் - முற்காலத்தில், ஒரு சிலர் அடியர் ஆயினர் - ஒப்பற்ற சிலர் அடியராயினார்; (அவர் அங்ஙனமாக) இருக்கும் அடுக்கல் - தான் இருக்கின்ற கைலையை, அரக்கன் எடுப்ப - இராவணன் தூக்கலும், (அதுகண்டஞ்சி) வரை பொரும் - மலையையொத்த, மொய்ம்பில் - தோள்களில், முலை பொர - முலைகள் தாக்கும்படி, மலை மகள் தழுவ - மலையரையன் மகளாகிய உமாதேவியார் அணைக்க, மனம் மகிழ்வோனே - மனம் மகிழ்வோராகிய சிவபெருமானே!, பாடும் பணி - பாடுகின்ற திருத்தொண்டை, நீ கூடும் பொருட்டு - நீ அடையும் நிமித்தம், மதுரைமாநகரில் - மதுரைமாநகரத்தில், குதிரை மாறியும் - (நரியைப் பரியாக்கிப் பாண்டியனுக்கு) அதனை விற்றும், விண் புகழ் - தேவரும் துதிக்கின்ற, முடிமிசை - திருமுடிமீது, மண் பொறை சுமந்தும் - மண்செறிந்த கூடையை வலிந்தெடுத்தும், நீறு எழில் மேனியில் - திருநீற்றின் எழில் படைத்த திருமேனியில், மாறு அடிபட்டும் - அப்பாண்டியனால் பிரம்படியேற்றும், நின்னை தொண்டன் என்ன - நின்னைத் திருத்தொண்டன் என்று சொல்லும்படி, கொண்டனன் - கொண்டருளினார். எ - று.

உலகத்தில் சிவனடியார் மிகச் சிலரே என்பதாம். (12)

நேரிசை வெண்பா

மகிழ்ச்சி மிகவுண்டு போலு மெதிர்வந்து
புகழ்ச்சியொடு நீபாடும் போது—நெகிழ்ச்சிமலர்ச்
சந்தையினும் வண்டிரையுந் தண்புகலிச் சம்பந்தா!
தந்தையினும் பால்கொடுத்த தாய்க்கு.

இ - ள். நெகிழ்ச்சி மலர் - விரிதலையுடைய மலர்களில், சந்தையினும் வண்டு இரையும் - சந்தையொலியினும் வண்டுகள் மிக வொலிக்கும் (சோலை சூழ்ந்த), தண் புகலி சம்பந்தா - குளிர்ச்சி வாய்ந்த சீர்காழியில் அவதரித்த ஞானசம்பந்த மூர்த்தியே! எதிர் வந்து - சன்னிதி முன்னர் அடைந்து, புகழ்ச்சியொடு - சிறப்பியொடு, நீ பாடும்போது - நீ (வேதசிவாகம நெறிகளைப்) பாடுங்கால், தந்தையினும் பால்கொடுத்த தாய்க்கு - தந்தையாகிய சிவபெருமானினும் ஞானப்பாலைக் கொடுத்த அன்னையாகிய உமாதேவியாருக்கு, மிக மகிழ்ச்சி உண்டுபோலும் - மிக உவகையுண்டுபோலும். எ - று. (13)

கட்டளைக் கலித்துறை

தாயிலி யாகுஞ் சிவபெரு மான்றனைத் தானெனுமோர்
கோயிலி னாரறி வாகிய நாமமுன் கொண்டிருந்த
வாயிலி னாணவ மாகுங் கபாடமு மன்றிறந்து
நோயிலி யாகிய சொல்லிறை காட்டுவ னோக்குதற்கே.

இ - ள். நோயிலியாகிய - பிறவி நோயில்லாதவராகிய, சொல் இறை - வாகீசமூர்த்தி, தான் எனும் - ஆன்மா எனப்படுகின்ற, ஓர் கோயிலின் - ஒப்பற்ற கோயிலின்கண், ஆர் - பொருந்திய, அறிவு ஆகிய நாமம் - அறிவு என்னும் பெயரை, முன் கொண்டிருந்த - அநாதியே கொண்டுள்ள, வாயிலின் - வாயிலில் பந்தித்து நிற்கும், ஆணவம் ஆகும் - ஆணவமலமென்கின்ற, கபாடமும் மன் திறந்து - கதவையும் மிகத் திறந்து, தாய் இலி ஆகும் - தனக்கொரு தாயுமில்லாதவராகிய, சிவபெருமான்தனை - சிவபெருமானை, நோக்குதற்கு காட்டுவன் - காணக்காட்டுவர். எ - று.

தாயிலி - ஆதியந்தமில்லாதவர். (14)

எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

நோக்குறு நுதலோ னின்னிடை விருப்பால்
நூற்பக வன்னநுண் மருங்குல்
வார்க்குவி முலைமென் மகளிர்தம் புலவி
மாற்றுவான் சென்றன னென்றால்
கோக்கலிக் காமன் வயிற்றிடைக் குத்திக்
கொண்டதே துக்குநீ புகலாய்
காக்கரு மதலை விழுங்கிய முதலை
கான்றிடத் தோன்றுநா வலனே.

இ - ள். விழுங்கிய முதலை - விழுங்கிய முதலையே, கான்றிட - கரையிற் கக்கும்படி, காக்கரும் - (ஒருவராலும்) உதிப்பித்தற்கரிய, மதலை-புதல்வன், தோன்றும் - தோன்றுதற்கேதுவாகிய, நாவலனே - வாக்கின் வன்மையையுடைய புலவரே! நோக்குறும் நுதலோன் - நெற்றிக் கண்ணராகிய சிவபெருமான், நின்னிடை விருப்பால் - நின்னிடைவைத்த அன்பால், நூல் பகவு அன்ன - நூலின் நேர்பாதியை ஒத்த, நுண் மருங்குல் - நுண்ணிய இடையையும், வார் குவி முலை- கச்சணிந்த குவிந்த தனங்களையு முடைய, மெல் மகளிர்தம்- மெல்லிய பரவைநாச்சியாரது, புலவி மாற்றுவான் - ஊடலைத் தணிக்க, சென்றனன் என்றால் - (மகிழ்ந்து) சென்றனனென்று பெரியோர் சொல்லுவாராயின், கோ கலிக்காமன்- உயர்குடித் தலைவராகிய கலிக்காமநாயனாரொருவரும், (அது காரணமாக) வயிற்றிடை - தம் வயிற்றிலே, குத்திக்கொண்டது எதுக்கு - குத்திக்கொண்டது யாதுக்கு? நீ புகலாய் - நீ சொல்லுவாய். எ - று.

(15)

நேரிசை யாசிரியப்பா

வலமழு வுயரிய நலமலி கங்கை
நதிதலை சேர்ந்த நற்கரு ணைக்கடன்
முகந்துல குவப்ப வுகந்தமா ணிக்க

வாசக னெனுமொரு மாமழை பொழிந்த
திருவா சகமெனும் பெருநீ ரொழுகி
யோதுவார் மனமெனு மொண்குளம் புகுந்து
நாவெனு மதகி னடந்து கேட்போர்
செவியெனு மடையிற் செவ்விதிற் செல்லா
வுளமெனு நிலம்புக வூன்றிய வன்பாம்
வித்திற் சிவமெனு மென்முளை தோன்றி
வளர்ந்து கருணை மலர்ந்து
விளங்குறு முத்தி மெய்ப்பயன் றருமே.

இ - ள். வலம் மழு உயரிய - வலப்பக்கத்திலே மழுப்படையை உயர்த்திய, நலம் மலி-புனித நிரம்பிய, கங்கைநதி தலை சேர்ந்த - கங்காநதி தலைக்கூடப் பொலிந்த, நல் கருணைக்கடல் நல்ல சிவம் என்கிற கிருபைக்கடலை, முகந்து-(பெருந்துறை புகுந்து) கொண்டு, உகந்த-உயர்ந்த, மாணிக்க வாசகனெனும் - மாணிக்கவாசகன் எனப்படுகின்ற, ஒரு மா மழை - ஒப்பற்ற சிறந்த மேகமானது, உலகு உவப்ப - மக்களுயிர்கள்மகிழ, பொழிந்த-சொரிந்த, திருவாசகம் எனும் திருவாசகம்என்கின்ற, பெருநீர் ஒழுகி-பெருவெள்ளஞ் சென்று, ஓதுவார்-ஓதுவார்களுடைய, மனம்எனும்-உள்ளமென்கின்ற, ஒள் குளம் புகுந்து - ஒள்ளிய வாவியினுள்ளே புகுந்து நிரம்பி, நா எனும் - வாய் என்கின்ற, மதகில் நடந்து - மதகின்வழி வெளிப்பட்டு, கேட்போர் - சிரவணம் செய்பவர்களுடைய, செவி எனும் - செவிகள் என்கின்ற, மடையில் - மடைகளில், செவ்விதின் செல்லா - வழுவுதல் இல்லாமற் சென்று, உளம் எனும் - அவர்களுடைய மனம் என்கின்ற, நிலம் புக - நிலத்திற் பாய, ஊன்றிய அன்பு ஆம் வித்தல் - அங்கே பதிக்கப்பட்டுள்ள அன்பென்னும் வித்திலே, சிவம் எனும் -

சிவமென்கின்ற, மெல் முளை - இளமுளை, தோன்றி - முளைத்து, வளர்ந்து - வளர்ச்சியுற்று, கருணை மலர்ந்து - கிருபைவிரிந்து, விளைகுறும் - ஒளிர்கின்ற, முத்தி மெய் பயன் - முத்தியென்கின்ற உண்மைப் பயனை, தரும் - உதவாநிற்கும். எ-று.

திருவாசகம் முத்தியைத் தரும் என்பது கருத்து. (16)

நேரிசை வெண்பா

பயனாகு நல்லாண் பனைக்குவிடத் திற்கு
மயிலாகு நோய்க்கு மருந்தா—முயிராகுஞ்
சிந்து மெலும்பிற்குச் சிரபுரத்து நாவலன்சம்
பந்த னியம்பு திருப் பாட்டு.

இ - ள். சிரபுரத்து நாவலன் சம்பந்தன் - சீர்காழியில் அவதரித்த முத்தமிழ் விரகராகிய திருஞானசம்பந்தர், இயம்பு திருப்பாட்டு - திருவாய்மலர்ந்தருளிய திருப்பாடல்களின் விளைவு, நல் ஆண்பனைக்கு-மண்புமிக்க ஆண்பனைக்கு, பயன் ஆகும் - பயனாகும்; விடத்திற்கு மயில் ஆகும் - விஷத்திற்கு மயிலாகும்; நோய்க்கு மருந்து ஆம் - பிணிக்கு மருந்தாகும்; சிந்தும் எலும்பிற்கு உயிர் ஆகும் - உருச்சிதைந்தழிந்த என்பிற்கு உயிராகும். எ - று. (17)

கட்டளைக் கலித்துறை

பாட்டான் மறைபுக ழும்பிறை சூடியைப் பாடிமகி
ழூட்டா மகிழ்சொல் லிறைவனைப் பாடி யுவப்புறுக்க
வேட்டான்மலிபெருங் கல்லவன்போலமிதப்பனெனப்
பூட்டா மறிதிரை வார்கடற் கேவிழப் போதுவனே.

இ - ள். மறை புகழும் - வேதங்கள் புகழ்கின்ற, பிறை சூடியை - பிறைதரித்த சிவபெருமானை, பாட்டால் - தமிழ்ப்பாக்களாகிய தேவாரங்களால், பாடி - துதித்து, மகிழ்வூட்டா - திருவுளம் மகிழ்வித்து, மகிழ் - தாமும் மகிழ்ந்த,

சொல் இறைவனை - வாகீசவள்ளலை, பாடி - புகழ்ந்து பாடி, உவப்பு உறுக்க - அவருக்கு மகிழ்ச்சியை உறுவிக்க வேண்டு மென, வேட்டான் - அன்புமிக்க ஒருவன், அவன் போல - அவ்வாகீச வள்ளலைப்போல, மிதப்பன் என - (யானும்) மிதப்பேனென்று, மலி பெருங்கல் - மிகப் பருத்தவொரு கல்லை, பூட்டாவிழ - தனது உடலிற் பிணித்துக்கொண்டு வீழ்தற்கு, மறிதிரை - மடங்குகின்ற அலைகளையுடைய, வார்கடற்கே - நெடிய கடலுக்கே, போதுவன் - துணிந்து செல்வன். எ - று. (18)

எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

போத முண்ட பிள்ளை யென்பு
பொருகண் மாது செய்ததோ
காதல் கொண்டு சொல்லின் மன்னர்
கன்மி தப்ப வுய்த்ததோ
வாய்தி றந்து முதலை கக்க
மகனை நீய ழைத்ததோ
யாது நம்பி யரிது நன்றெ
னக்கி யம்ப வேண்டுமே.

இ - ள். நம்பி - நம்பியாரூரவள்ளலே! போதம் உண்ட பிள்ளை - ஞானப்பாலையுண்ட ஞானசம்பந்த வள்ளல், என்பு - எலும்பை, பொருகண் மாது செய்ததோ - காதொடு மோதுகின்ற கண்களையுடைய பெண்ணாகச் செய்ததோ? சொல்லின் மன்னர் - திருநாவுக்கரசுவள்ளல், கல் மிதப்ப - கல் (தெப்பமாக) மிதப்ப, காதல்கொண்டு உய்த்ததோ - (அதை) விருப்பத்தோடு செலுத்தியதோ? முதலை - முதலையானது, வாய் திறந்து - தன் வாயைத்திறந்து, கக்க - உமிழ, மகனை நீ அழைத்ததோ - புதல்வனை நீ அழைத்ததோ? யாது

அரிது - (இம்முத்தொழில்களுள்) எத்தொழில் அரிதாகும்? நன்று எனக்கு இயம்பவேண்டும் - தெளிய எனக்குத் தெரிவிக்க வேண்டும். எ - று.

*ஆதாரம் எதுவுமின்றி ஆரூரர் இறந்த பிள்ளையை அழைப்பித்ததே மேலானது.* (19)

நேரிசை யாசிரியப்பா

வேண்டுநின் னடியார் மெய்யன் பெனக்கு
மருள்செய்! "சிவனே யலந்தே னந்தோ
முறையோ! முறையோ! விறையோ னே!"வென்
றழுது செம்போ னம்பலக் கூத்த
னருளாற் பெற்ற வன்பினி லொருசிறி
தடிய னேற்கு மருளல் வேண்டும்
நீயே கோட னின்னருட் பெருக்கிற்
கேற்ற தன்றிள வேறுகந் தேறியைப்
பரிமா மிசைவரப் பண்ணிய வித்தக!
திருந்திய வேத சிரப்பொருண் முழுதும்
பெருந்துறை யிடத்துப் பெருஞ்சீர்க்
குருந்துறு நீழலிற் கொள்ளைகொள் வோயே.

இ - ள். இள ஏறு - இளமைபொருந்திய இடபத்தை, உகந்து ஏறியை - விரும்பிச் செலுத்திய சிவபெருமானை, பரிமா மிசை - குதிரைமீது, வர பண்ணிய வித்தக - வரச் செய்த வித்தகரே! பெருந்துறையிடத்து - திருப்பெருந் துறை யென்னுந் தலத்திலே, பெரும் சீர்-மிக்கமேன்மையை யுடைய, குருந்து உறு நீழலில் - குருந்தமரத்தின் விரிந்த நிழலில், திருந்திய - திருத்தமடைந்த, வேதசிரம் - வேத முடிவிற் செறிந்த, பொருள் முழுதும் - சைவசித்தாந்தப் பொருள் முழுதும், கொள்ளை கொள்வோய் - (சிவபெருமானிடத்துக்) கொள்ளைகொண்ட திருவாதவூரண்ணலே! சிவனே - சிவனே! நின் அடியார் மெய் அன்பு - நினது

அடியார்களது உண்மையன்பு, எனக்கும் வேண்டும் - எனக்கும் உரித்தாகவேண்டும், அருள்செய் - அருள்செய்வாய்! அலந்தேன் - (அதனைப் பெறாமையாலே) துயருற்றேன், அந்தோ - ஐயோ! முறையோ முறையோ - (அருள் பாலியாமை) முறையோ! முறையோ!, இறைவனே' என்று அழுது - முதல்வனே என்று அழுது, செம்பொன் அம்பலம் - செவ்விய கனகசபையில், கூத்தன் அருளால் - நடித்தருளும் சிவபெருமானது அருளால், பெற்ற அன்பினில் - அடைந்த அன்பிலே, அடியனேற்கும் - அடியேனுக்கும், ஒரு சிறிது - மிகச்சிறிது, அளித்தல் வேண்டும் - தந்தருளல் வேண்டும்; நீயே கோடல் - முற்றும் நீரே கொள்ளுதல், நின் அருள் பெருக்கிற்கு - நுமது கிருபை மிகுதிக்கு, ஏற்றது அன்று - முறையையன்று. எ - று. (20)

நேரிசை வெண்பா

**கொள்ளைகொள்ள வீடுதவிக் கூற்றைப் பிடர்பிடித்துத்**
**தள்ளுந் திருஞான சம்பந்தா!—வெள்ளமிடு**
**மேடேறப் பால்குறைந்த தென்றழுவ ரேகழுவின்**
**காடேறப் புக்க வருகர்.**

இ - ள். கொள்ளை கொள்ள - (யாவரும்) கொள்ளை கொள்ளும்படி, வீடு உதவி - முத்தியுலகத்தை யுதவி, கூற்றை - இயமனை, பிடர் பிடித்து தள்ளும் - அணுகாதகற்றிய, திருஞான சம்பந்தா - திருஞான சம்பந்த வள்ளலே!, கழுவின் காடு - கழுக்கூட்டத்தில், ஏறப் புக்க - ஏறும்படி துணிந்த, அருகர் - அமணர்கள், வெள்ளம் இடும் - வைகைநதிப பெருக்கிலிட்ட, ஏடு ஏற - ("வாழ்கவந்தணர்" என்னுந் திருப்பாசுரப்பதிகம் வரைந்த) ஏடு எதிரேறிச் செல்லப் பார்த்து, பால் குறைந்தது என்று - தம் பக்கம் குறைந்தது என்று, அழுவரே - அழத்தக்கவரே. எ - று. (21)

கட்டளைக் கலித்துறை

**அருகக் கடல்கடந் தேறிய தோசிலை யம்பியென**
**பெருகக் கடல்கடந் தேறிய தோசொல் பெருமிடறு**
**கருகக் கடல்விட முண்டோ னடியிற் கசிந்துமனம்**
**உருகக் கடலன்பு பெற்றசொல் வேந்த வுனக்கரிதே.**

இ - ள். கடல் விடம் - பாற்கடலிற் றோன்றிய விஷத்தை, பெருமிடறு கருக - பருத்த கண்டம் கறுக்க, உண்டோன் அடியில்-உண்ட சிவபெருமானது திருவடியில், மனம் கசிந்து உருக - மனம் உருகிக்கசிய, கடல் அன்பு - கடல்போலும் அன்பை, பெற்ற - அடைந்த, சொல்வேந்த - வாகீசமூர்த்தியே!, அருகக்கடல் - சமணக்கடலை, கடந்து ஏறியதோ - நீந்திச் சைவமென்னுங் கரையில் ஏறியதோ?, பெருகு அக்கடல் - பெருகிய அக்கடலை, சிலை அம்பி என - கல் தெப்பமாகமிதப்பக்கொண்டு, கடந்து ஏறியதோ - நீந்திக் கரையேறியதோ!, உனக்கு அரிது சொல் - (இவற்றுள் யாது) நமக்கு அரியது சொல்வீராக! எ - று.

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

**உனற்க ரும்புகழ் மேவிய சுந்தர னும்பன்மீ திவரா**
**நினைப்ப ருங்கயி லாயம டைந்தமை நின்றுகாண் குறவே**
**எனக்கு வந்துறு மோமக வென்றழு கின்றநா ளலைபா**
**றனித்த ருந்துபு மாலை யுமிழ்ந்திடு தம்பிரா னலனே.**

இ - ள். உனற்கு அரும் - சிந்தித்தற்கரிய, புகழ் மேவிய - புகழ் படைத்த, சுந்தரன் - சுந்தரமூர்த்தி நாயனார், உம்பல்மீது இவரா - வெள்ளையானைமேல் எழுந்தருளி, நினைப்பு அரும் - நினைத்தற்கரிய, கயிலாயம் அடைந்தமை - திருக்கயிலாயத்தை அடைந்தமையை, நின்று காண்குற -

எதிர் நின்று தரிசித்தற்கு, மகவு என்று அழுகின்ற நாள் ஏ - குழந்தையெனக் கூறுமாறு விளங்கி அழுத அப்பருவத்தி லேயே, பால் அலை - பாற்கடலை, தனித்து அருந்தாபு - தனித்துப் பருகி, மாலை உமிழ்ந்திடு - அதில் மிதந்தனுகிய திருமாலை (ஆங்கு) உமிழ்ந்த, தம்பிரான் நலன் - உபமன்னியரிடத்துண்டான உயர்ந்த சிவானுக்கிரகம், எனக்கு வந்து உறுமோ - அடியேனுக்கு வந்தடையுமோ. எ - று (23)

## நேரிசை யாசிரியப்பா

கலமலி வாதவூர் நல்லிசைப் புலவ!
மனநின் றுருக்கு மதுர வாசக!
கலங்குறு புலனெறி விளங்குறு வீர!
திங்கள் வார்சடைத் தெய்வ நாயக
னொருகலை யேனு முணரா னஃதான்று
கைகளோ முறிபடுங் கைகள் காணிற்
கண்களோ வொன்று காலையிற் காணு
மாலையி லொன்று வயங்கித் தோன்றும்
பழிப்பி னென்று விழிப்பி னெரியு
மாயினுந் தன்னை நீபுகழ்ந் துரைத்த
பழுதில் செய்யு ளெழுதின னதனுற்
புகழ்ச்சி விருப்பன் போலு
மிகழ்ச்சி யறியா வென்பணி வானே.

இ - ள். நலம் மலி - வளம் நிரம்பிய, வாதவூர் நல் இசைபுலவ - வாதவூரில் அவதரித்த நல்ல கீர்த்தியை யுடையவரே!, மனம் நின்று - (நினைக்குந்தோறும்) உள்ளத்தில் நின்று, உருக்கும் - (அதை) உருக்குகின்ற, மதுர வாசக - இனிய திருவாசகத்தை இசைத்தருளியவரே,!

கலங்குறு - நிலைதவறுதற்குக் காரணமாகின்ற, புலன்நெறி - ஐம்புல நெறிகளினின்றும், விலங்குறு வீர - நீங்கிய ஆண்மையை யுடையவரே!, திங்கள் வார் சடை - ஒற்றைக் கலையாகிய பிறைமதி மிலைந்த நெடுஞ்சடையையுடைய, தெய்வ நாயகன் - தேவாதிபர், ஒரு கலையேனும் - வேத முதலிய கலைகளுள் ஒன்றாயினும், உணரான் - உணரார், (துணியப் படாதவர்); அஃதான்று - அதுவன்றி, கைகளோ - அவர் திருக்கைகளோ (எனில்), முறிபடும் கைகள் - முறிபடும் கைகளாம்; கண்களோ - திருக்கண்களோ (எனில்), காணின் - தேர்ந்து உணரின், ஒன்று - ஒரு கண், காலையில் காணும் - காலையிற் றோன்றும்; ஒன்று - மற்றொருகண், மாலையில் வயங்கி தோன்றும் - மாலையில் விளங்கித் தோன்றும்; பழிப்பின் ஒன்று - பழிப்பினையுடைய பிறிதொருகண் (நெற்றிக் கண்), விழிப்பின் - விழித்தவழி, எரியும் - (அப்பார்வையிற் பட்டவை) நீறாகும்; ஆயினும் - இங்ஙனம் இருப்பினும், தன்னை நீ புகழ்ந்து உரைத்த - தம்மை நீர் புகழ்ந்து சொல்லிய, பழுது இல் - குற்றமில்லாத, செய்யுள் - திருப்பாடல்களை, இகழ்ச்சி அறியா - இகழ்வு சிறிதும் பெறாத, என்பு அணிவானை - என்பை (ஆபரணமாக) அணிபவராகிய அவ்விறைவரே, எழுதினன் - எழுதினர்; அதனால் - அங்ஙனம் எழுதினமையாலே, புகழ்ச்சி விருப்பன் போலும் - (அவர்) புகழ்ச்சியில் அதிவிருப்பர் போல்வர். எ - று. (24)

நேரிசை வெண்பா

வானும் புகழ்புகலி மன்னன் றொடர்பொன்று
தேனுந் திதழியோன் சீரேடு—தானுங்
கரியாய் மொழியுங் கரியாய் விடாம
லெரியா ரழல்வீழ்ந் தெழுந்து.

இ - ள். வானும் புகழ் - தேவரும் துதிக்கின்ற, புகலி மன்னன் - சீர்காழியில் அவதரித்த திருஞானசம்பந்த சுவாமிகள் அருளிய, தொடர்பு - திருப்பதிகம், ஒன்று ஏடு தானும் - எழுதிய திருவேடுதானும், எரி ஆர் - எரிதல் வாய்ந்த, அழல் வீழ்ந்து - தீயில் விழுந்து, கரி ஆய்விடாமல் - கரியாகி நீறுபடாமல், எழுந்து - முன்னையினும் விளக்கமடைந்தெழுந்து, தேன் உந்து இதழியோன் சீர் - தேனைச் சொரியும் கொன்றைமாலை யணிந்த பரமருடைய பாத்துவ நிலையை, கரி ஆய் மொழியும் - தானே சான்றாக நின்று சாற்றும். எ - று.

தீயிலிட்ட திருப்பதிக ஏடு எரிந்துபோகாமல் நின்றது. (25)

கட்டளைக் கலித்துறை

**துடைவாழை மேன்மட வாரல்குற் பாம்புதொடமயங்கி**
**நடைவாய் பிணமெனப் பட்டார் பெறுகிலர் நச்சுகுலே**
**யுடைவாழை மேலுர கந்தீண்ட மாய்ந்த வொருவனுயி**
**ரடைவா னருள்புரி யுந்திரு நாவுக் கரசினையே.**

இ - ள். மடவார் - பெண்களது, துடைவாழைமேல் - தொடையாகிய வாழைமீதுள்ள, அல்குல் பாம்பு - அல்குலாகிய பாம்பு, தொட - தீண்ட, மயங்கி - நிறையழிந்து, நடைவாய் - நடை வாய்ந்த, பிணம் எனப்பட்டார் - பிணமென்று சொல்லப்பட்டவரெல்லாம், குலை உடை - குலையையுடைய, வாழைமேல் - வாழையிற் றங்கிய, நச்சு உரகம் - விடம் பொருந்திய பாம்பு, தீண்ட மாய்ந்த - தீண்ட இறந்த, ஒருவன் - மூத்ததிருநாவுக்கரசு, உயிர் அடைவான் - முன்போலுயிர் அடையும்படி, அருள்புரியும் - திருவருள் பாலித்த, திருநாவுக்கரசினை - திருநாவுக்கரசு நாயனாரை, பெறுகிலர் - (முன் வழிபடுதல்) பெறுதாரே. எ - று. (26)

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

அரசன் பரிமேல் வரநெடுநல் யானை
யெருத்தத் தமர்ந்துபோய்
வரதன் கைலை மலையடைந்த மணியே!
மணிநீ ரிடுபசும்பொன்
றிரைசங் கெறியுங் குளத்துவரச் செங்கற்
செம்பொ னாப்பாடும்
பரிசின் றெனக்குன் செம்பவளத் திருவாய்
மலர்ந்து பகர்வாயே.

இ - ள். அரசன் - (உயிர்த்துணைவராகிய) சேரமான் பெருமாளுநாயனார், பரிமேல் வர - குதிரை மேலேறி உடன்வர, நெடுநல்யானை எருத்தத்து - நெடிய நல்ல வெள்ளையானையின் பிடரியில், அமர்ந்து போய் - தங்கிச் சென்று, வரதன் - சிவபிரானது, கைலைமலை அடைந்த - திருக்கைலை மலையை யடைந்த, மணியே - மாணிக்கம் போல்பவரே!, மணிநீர் - (முதுகுன்றத்திலே) மணிமுத்தாநதியில், இடு பசும்பொன் - இடப்பட்ட பன்னீராயிரம் பசும் பொன்னும், திரை - அலைகள், சங்கு எறியும் - சங்குகளை மோதுகின்ற, குளத்து வர - திருவாரூர்க் குளத்தில் அணுகவும், செங்கல் - (திருப்புகலூரிலே திருமுடி வைத்துத் துயிலப் பெற்ற) செங்கற்கள் பலவும், செம்பொன் ஆ - செம்பொன் ஆகவும், பாடும் பரிசு - பாடுந்திறத்தை, உன் செம்பவளம் திருவாய் மலர்ந்து - உமது செவ்விய பவளம் போலும் திருவாயைத் திறந்து, இன்று எனக்கு பகர்வாய் - இன்று சிறியேனுக்குச் செப்புவீராக; எ - று. (27)

நேரிசையாசிரியப்பா

பகிர்மதி தவழும் பவளவார் சடையோன்
பேரருள் பெற்றும் பெறாரி னழுங்கி
நெஞ்சநெக் குருகி நிற்பை நீயே
பேயேன் பெறாது பெற்றார் போலக்
களிகூர்ந் துள்ளக் கவலைதீர்ந் தேனே
அன்ன மாடு மகன்றுறைப் பொய்கை
வாதவூ ரன்ப வாத லாலே
தெய்வப் புலமைத் திருவள் ளுவனார்,
"நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவல மில"ரெனும்
செஞ்சொற் பொருளின் றேற்றறிந் தேனே.

இ - ள். அன்னம் ஆடும் - அன்னங்கள் விளையாடுகின்ற, அகல் துறை பொய்கை - அகன்ற துறைகள் வாய்ந்த திருக்குளங்கள் செறிந்த, வாதவூர் அன்ப - திருவாதவூரில் அவதரித்த அன்பரே!, பகிர்மதி - இளம்பிறை, தவழும் - ஊருகின்ற, பவளம் வார் சடையோன் - பவளம் நிகர்த்த நெடுஞ் சடைகளையுடைய இறைவரது, பேர் அருள் - தெய்வத் திருவருளை, பெற்றும் - பெற்றிருந்தும், பெறாரின் அதனைப் பெறாதார் போன்று, அழுங்கி - வருந்தி, நெஞ்சம் நெக்கு உருகி - மனநெகிழ்ச்சியுற்றுருகி, நீயே - நீரே, நிற்பை - வாடிநிற்கின்றீர்; பேயேன் - பேய்த்தன்மையுடையயானே, பெறாது - அவ்வருளைப் பெறாதிருந்தும், பெற்றார் போல - பெற்றவர்போன்று, களிகூர்ந்து - பெரிதும் மகிழ்ச்சியிற்றிளைத்து, உள்ளம் - உள்ளத்தில், கவலை தீர்ந்தேன் - துயரொழிந்தேன்; ஆதலால் - ஆகையால், தெய்வப்புலமை - தெய்வப்புலமையையுடைய, திருவள்ளுவ நாயனார் —;

"நன்று - தமக்கு உறுதியாயினவைகளை, அறிவாரின் - அறிபவர்களினும், கபவர் - (அவையறியாத) கீழ்மக்கள், திருவுடையர் - நன்மையுடையராவர்; (அவர்போல) நெஞ்சத்து - தமது நெஞ்சினிடத்து, அவலம் இலர் - (அவை காரணமாக) கவலையிலர்;" எனும் - என்றருளிய, செஞ்சொல் - திருக்குறளின், பொருளின் தேற்று - பொருட்டெளிவை, அறிந்தேன் - தேர்ந்துணர்ந்தேன். எ - று. (28)

நேரிசை வெண்பா

தேனே றலர்சூடிச் சில்பலிக்கென் றூர்திரியு
மானேறி யாண்டுப்பெற் ருன்கொனீ—தானேறும்
வெள்ளைமணி யென்று வினவுவோம் வாங்கியவப்
பிள்ளையையாங் காணப் பெறின்.

இ - ள். தேன் ஏறு - வண்டுகள் தங்கிய, அலர் சூடி - மலர்களை யணிந்து, சில் பலிக்கு என்று - சிறுபலியின் பொருட்டென, ஊர் திரியும் - (முனிவர் பத்தினிகளின்) இருக்கைகடோறும் திரிந்த, ஆன் ஏறி - இடபத்திவர்ந்த பெருமான், நீ ஏறும் - நீர் ஊருகின்ற, வெள்ளை மணி - வெண்முத்துச் சிவிகையை, யாண்டு பெற்றான் என்று - யாங்குப் பெற்று உமக்கு ஈந்தாரென்று, வினவுவோம் - கேட்போம்; வாங்கிய - (அச்சிவிகையைப்) பெற்ற, அப் பிள்ளையை - அத் திருஞானசம்பந்தப் பிள்ளையாரை, யாம் காணப்பெறின் - யாம் தரிசிக்கப் பெறுவோமாயின். எ - று.

கட்டளைக் கலித்துறை

பெற்றா னினைப்பெற்றவர்போற் பெறலும் பிறப்பதுண்டே
னற்றா ரணியினினைப்போற் பிறப்பது நல்லகண்டாய்
செற்றார் புரமெரி செய்தவில் வீரன் றிருப்பெயரே
பற்றா மறிவெண் டிரைக்கட னீந்திய பாலகனே!

இ - ள். செற்றார் புரம் - பகைவரது திரிபுரங்களை, எரி செய்த - நீறாக்கிய, வில் வீரன் - மேருமலையாகிய வில்லை யுடைய சிவபெருமானது, திருப்பெயரே - திருநாமமாகிய பஞ்சாக்கரமே, பற்று - செவ்விய துணையாகக் கொண்டு, மறி வெள் திரைகடல் - மடங்கி வீசும் வெள்ளிய அலைகள் வாய்ந்த கடலை, நீந்திய பாவலனே - கடந்த வாகீச மூர்த்தியே!, நல் தாரணியில் - உயர்ந்த இந்நிலவுலகத்திலே, பெற்றால் - (ஒரு புதல்வனைப்) பெற்றால், நினை பெற்றவர் போல் - உம்மைப் பெற்ற தாய்தந்தைகளைப்போல, பெற லும் - (உம்மையொத்த ஓர் புதல்வனைப்) பெறுதலும், பிறப்பது உண்டேல் - பிறத்தல் உளதாயின், நினைப்போல் - உம்மைப்போல, பிறப்பதும் நல்ல - (ஒரு புதல்வனுகிப்) பிறத்தலுமே சிறந்தன. எ - று.

"நற்றுணையாவது நமச்சிவாயவே" என்னுந் தேவாரம் இங்கே சிந்திக்கத்தக்கது. (30)

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

பாவாய்ப் பொழிந்த வானமுதப்
பவளத் திருவாய் நம்பிநீ
சேவாய்ப் பொருதுந் தருமமுடைத்
தேவன் மலைக்குப் போம்பொழுது
காவாய்ப் பயந்த தடக்கைமலர்க்
கழறிற் றறிவார் கடாவிவரு
மாவாய்ப் பிறக்கக் கிடையாதே
மாவாய்ப் பிறக்குந் திருமாற்கே.

இ - ள். வான் அமுதம் - சிறந்த முத்தி சாதனங்களை, பா ஆய் - திருப்பாடல்களாக, பொழிந்த - சொரிந்த

பவளம் திருவாய் நம்பி - செம்பவளம்போலும் திருவாயை யுடைய நம்பியாரூரவள்ளலே!, தருமம் - தருமதேவதையைப், பொருதும் - சண்டையிடுகின்ற, சே ஆய் - இடபமாக, உடை - உடைய தேவன், மலைக்கு - சிவபிரானமரும் திருக்கைலைமலைக்கு, நீ போம்பொழுது - நீர் எழுந்தருளுங் கால், கா ஆய் - கற்பகத்தருவை நிகர்த்து, பயந்த - (கருதுவார் கருதுவன வெறுப்ப) நல்கிய, மலர் தட கை - செந்தாமரை மலர் போலும் பெருமைவாய்ந்த திருக்கரங்களையுடைய, கழறிற்றறிவார் - சேரமான் பெருமாளுயனார், கடாவி வரும் - செலுத்திவரும், மா ஆய் பிறக்கும் - இனி உகமுடிவிற் குதிரையா யுதிக்கும், திருமாற்கு கிடையாது - திருமாலுக்குக் கிட்டாது. எ - று.

*திருமாலின் கல்கி அவதாரத்தைக் குறிப்பித்தது.* (31).

நேரிசையாசிரியப்பா

**திருவார் பெருந்துறைச் செழுமலர்க் குருந்தி**
**னீழல்வா யுண்ட நிகரிலா னந்தத்**
**தேன்றேக் கெறியுஞ் செய்யமா ணிக்க**
**வாசகன் புகன்ற மதுர வாசகம்**
**யாவரு மோது மியற்கைத் தாதலிற்**
**பொற்கல நிகர்க்கும் பூசுரர் நான்மறை**
**மட்கல நிகர்க்கு மதுர வாசக**
**மோதின் முத்தி யுறுபயன்**
**வேத மோதின் மெய்ப்பய னறமே.**

இ - ள். திரு ஆர் பெருந்துறை - திருப்பெருந்துறையிலே, செழு மலர் குருந்தின் நீழல்வாய் - செழித்த மலர்கள் செறிந்த குருந்த மரநிழலில், உண்ட - பருகிய, நிகர் இல்

ஆனந்தம் தேன் - ஒப்பிகந்த சிவானந்தத்தேன், தேக்கு ஏறியும் - உவட்டெடுக்கும், செய்ய மாணிக்கவாசகன் - ஞான வொழுக்கச் சிறப்பையுடைய மாணிக்கவாசகவள்ளலார், புகன்ற - அருளிச்செய்த, மதுரம் வாசகம் - இனிய திரு வாசகம், யாவரும் - எவரும், ஓதும் - ஓதுகின்ற, இயற் கைத்து - இயல்புடையது; ஆதலின் - ஆகலான், பொன் கலம் நிகர்க்கும் - (அது) பொற்பாத்திரத்தை யொக்கும்; பூசுரர் (ஓதும்) நான் மறை - பூ தேவராகிய அந்தணர் ஓது கின்ற நான்கு வேதங்களும், மண்கலம் நிகர்க்கும் - மட் பாத்திரங்களை யொக்கும்; (அஃதன்றி) மதுரம் வாசகம் ஓதின் - இனிய திருவாசகத்தை யோதினால், உறு பயன் முத்தியே - (அதனால்) அடையும் பயன் முத்தியே; வேதம் ஓதின் - அவ்வேதங்களை யோதினால், மெய்ப்பயன் அறமே - (அவற்றாலடையும்) உண்மைப் பயன் விண்ணுலகாதி பதங்களே. எ - று.

*திருவாசகத்தின் மேன்மையைக் கூறியது.* (32)

நேரிசை வெண்பா

"அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தாரே டூர்ந்தா னிடை"யை—மறுத்தார்சம்
பந்தன் சிவிகை பரித்தார் திரிகுவர்மற்
றுந்துஞ் சிவிகையினை யூர்ந்து.

இ - ள். சம்பந்தன் சிவிகை - திருஞானசம்பந்தப் பெருமானது முத்துச் சிவிகையை, பரித்தார் - தாங்கப் பெற்றவர், உந்தும் சிவிகையினை - செலுத்தும் வேறு சிவி கையை, ஊர்ந்து - நடாத்தி, திரிகுவர் - (இது பொழுதும் சிறந்த தேவராய்த்) திரிகின்றாராகலான், அறத்து ஆறு -

தருமத்தின் பயன், இது என - இதுவென்று (யாம் ஆகம அளவையால் அறிவிக்க) வேண்டா - வேண்டியதில்லை; சிவிகை - தண்டிகையை, பொறுத்தானோடு - சுமப்பவனோடு, ஊர்ந்தானிடையை - செலுத்துவோனிடத்துக் (காட்சி யளவையினாலேயே அறியப்படும்) என்னும் பொருளமைந்த திருக்குறளை, மறந்தார் - மறந்தவராயினர். எ - று. (33)

கட்டளைக் கலித்துறை

ஊர்ந்து வருமிள வேறுடை யான்ற னுளத்தருளாற்
சார்ந்து சமண்விட் டுறுமுனக் கேவருஞ் சைவநலங்
கூர்ந்து மிளிர்தரு நாவர சே!நல் குரவுமுனஞ்
சேர்ந்து மருவினர்க் கேசிறந் தோங்குறுஞ் செல்வமுமே.

இ - ள். நாவரசே - வாகீசப் பெருந்தகையே!, நல்குரவு - தரித்திரத்தை, முனம் சேர்ந்து - முன்னர்ச் சார்ந்து, மருவினர்க்கே-(பின்னர்ச் செல்வம்) எய்தப் பெற்றவர்க்கே, செல்வமும் - அச்செல்வமும், சிறந்து ஓங்குறும் - அருமையுடைத்தாய் விளங்கும்; (அதுபோல) இள ஏறு - இளமை வாய்ந்த இடபவாகனத்தை, ஊர்ந்து வரும் - செலுத்தி வரும், உடையான்தன் - இறைவருடைய, உளத்து அருளால் - திருவுளக் குறிப்போடுகூடிய திருவருளாலே, சமண்சார்ந்து - சமண் சமயத்தை யடைந்து, (அருளால்) விட்டு - அத்திருவருளாலே (அதனை) நீங்கி, உறும் உனக்கே - சைவசமயத்தைச் சார்ந்த நுமக்கே, வரும் சைவ நலம் - (சின்னாள் நீங்கிப் பின்னர்ச்) சேர்ந்த அச்சைவத்தின் சிறப்பு, கூர்ந்து மிளிர்தரும் - சிறந்து விளங்கும். எ - று.

"நன்னெறியாவது நமச்சிவாயவே" என்பதை விளக்குவது.

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

**செல்வநல் லொற்றி யூரன் செய்யசங் கிலியா லார்த்து**
**மல்லலம் பரவை தன்கண் மாழ்குற வமிழ்த்து மேனு**
**மல்லுநன் பகலு நீங்கா தவன்மகி ழடியி லெய்தி**
**நல்லவின் படைந்தி ருப்ப னம்பியா ரூரன் றனே.**

இ - ள். *செல்வம் நல் ஒற்றியூரன்* - கல்விச் செல்வமும் பொருட் செல்வமுமுடைய சிறந்த திருவொற்றியூரில் எழுந்தருளியசிவபெருமான், *செய்ய சங்கிலியால் ஆர்த்து* - பெருமையுற்ற சங்கிலி நாச்சியாராற் பிணிப்புடையராக்கி, மல்லல் - பண்புமிக்க, அம் பரவை தன் கண் - அழகையுடைய பரவை நாச்சியாரிடத்தே, மாழ்கு உற - ஆர்வ மீதூரக்கண்டு, அமிழ்த்திமேனும் - அவர்பால் பொருத்துவித்தாராயினும், நம்பியாரூரன் - சுந்தரமூர்த்தி சுவாமிகள், மகிழ் அவன் அடியில் - மகிழ்ச்சியைப் பயக்கும் அக்கடவுளின் உபய திருவடிகளில், அல்லும் நன் பகலும் - இரவும் பகலும், நீங்காது எய்தி - இடைவிடாது ஒடுக்கி, நல்ல இன்பு - சிறந்த இன்பத்தை, அடைந்திருப்பன் - நுகர்ந்து திகழ்வார். எ-று.

பரவையாரும் சங்கிலியாரும் சுந்தரருக்கு ஞானசக்தி கிரியா சக்தியாராக விளங்கினர் என்பது. (35)

நேரிசை யாசிரியப்பா

**தானே முத்தி தருகுவன் சிவனவ**
**னடியன் வாத வூரனைக்**
**கடிவின் மனத்தாற் கட்டவல் லார்க்கே.**

இ - ள். சிவன் - சிவபெருமான், அவன் அடியன் வாதவூரனை - தனது அடியவராகிய திருவாதவூரடிகளை, கடிவு இல் - நீக்க மில்லாத, மனத்தால் - உள்ளத்தால்,

கட்ட வல்லார்க்கு - (நேசித்துப்) பிணிக்க வல்லவர்க்கு, **தானே** - தாமே (முற்பட்டு), **முத்தி தருகுவன்** - பரமுத்தியைத் தந்தருளுவார். எ - று.

*மாணிக்கவாசகர் அறிவாற் சிவனே என்பதாம்.* (36)

நேரிசை வெண்பா

**வல்லார் பிறப்பறுப்பர் வண்மை நலங்கல்வி**
**நல்லா தரவின்ப ஞானங்க—ளெல்லாந்**
**திருஞான சம்பந்தன் சேவடியே யென்னு**
**மொருஞான சம்பந்த முற்று.**

இ - ள். **வண்மை** - பொருளும், **நலம்** - (அப்பொருளான் எய்தும்) புண்ணியமும், **இன்பம்** - (அப்புண்ணியப் பயனாகிய இம்மை மறுமை) இன்பங்களும், **கல்வி** - கல்வியும், **நல் ஆதரவு**- (அக்கல்வியா னெய்தும்) நல்லன்பும், **ஞானங்கள் எல்லாம்**-(அவ்வன்பின் பயனாகிய) ஞானமும் ஆகிய யாவும், **திருஞானசம்பந்தன்** - திருஞானசம்பந்தப் பெருமானது, **சேவடியே என்னும்** - சிவந்த திருவடிகளே எனக் கருதும், **ஒரு ஞானசம்பந்தன்** - ஒரு ஞானசம்பந்தத்தை, **உற்று** - அடைந்து, **வல்லார்** - வல்லுநரல்லாரும், **பிறப்பு அறுப்பர்** - பிறப்பை யொழிப்பார். எ - று.

*சம்பந்தர் திருமணத்திற்கு வந்தவரெல்லாம் சிவப்பேறு அடைந்தது நோக்கற்பாலது.* (37)

கட்டளைக் கலித்துறை

**உற்று னலன்றவந் தீயினின் றனல ஹுண்புனலா**
**வற்று னலனுகர் வுந்திரு நாவுக் கரசெனுமோர்**
**சொற்று னெழுதியுங் கூறியு மேயென்றுந் துன்பில்பதம்**
**பெற்று னொருநம்பி யப்பூதி யென்னும் பெருந்தகையே.**

இ-ள். ஒரு நம்பி அப்பூதி என்னும் பெருந்தகை - ஒரு நம்பியப்பூதியென நம்பியாரூரரால் உயர்த்தித் துதிக்கப் பட்ட மிக்கமேன்மையுடையவர், தவம் உற்றான் அலன் - சரியை கிரியை யோகங்களாகிய தவத்தை அநுட்டித்தவரு மல்லர்; தீயில் நின்றான் அலன் - பஞ்சாக்கினி நடுவினின்று கடுந்தவம் புரிந்தவருமல்லர்; புனல் ஊண் ஆ - நீரை உணவாகக் கொண்டு, நுகர்வு அற்றானும் அலன் - மற்றை யுணவுகளை நீக்கினவருமல்லர்; திருநாவுக்கரசு எனும் ஓர் சொல்தான் - திருநாவுக்கரசு என்னும் ஒரு சொல்லையே, எழுதியும் - (யாண்டும்) தீட்டியும், கூறியுமே - (அதனை உயிர்க்குறுதிபயக்கும் மந்திரமாக) உச்சரித்துமே, என்றும் - எக்காலத்தினும், துன்பு இல் பதம் - துன்பமென்பது எட்டுணையும் எய்துதலில்லாத முத்தியை, பெற்றான் - எய்தினார். எ - று.

*அப்பூதியடிகள் "திருநாவுக்கரசு" என்னும் மந்திரத்தையே ஓதி முத்தியடைந்தனர்.* (38)

எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

பெருமிழலைக் குறும்பரெனும் பரம யோகி
பெரிதுவந்துன் திருவடித்தா மரையைப் போற்றி
விரைமலர்தூய் வந்தனைசெய் கின்ற னென்றால்
விளங்கிழையா ரிருவரொடு முயங்க லாமோ
வுரைமதிநின் றனைவெறுப்ப தென்கொ லின்னை
யுடையானுக் கடுத்தசெய லுனக்கு மாயிற்
சுரர்முனிவர் பரவலுறும் பெருஞ்சீர்த் தொண்டத்
தொகைசெய்தோ யறமுதனல் வகைசெய்தோயே.

இ - ள். சுரர் முனிவர் - தேவர்களும் முனிவர்களும், பரவுறும் - துதிக்கின்ற, பெரு சீர் தொண்டத்தொகை - மிக்க சீர்த்திபடைத்த திருத்தொண்டத் தொகையை, செய்தோய் - அருளிச்செய்தவரே!, அறம் முதல் நால்வகை - அறம் பொருள் இன்பம் வீடென்னும் உறுதிப் பொருள்கள் நான்கையும், செய்தோய்-வகுத்தருளியவரே!, பெருமிழலைக் குறும்பர் எனும் பரமயோகி - பெருமிழலைப் பதியிலிருந்த குறும்பநாயனாரென்னும் பரமயோகியானவர், பெரிது உவந்து - களிப்பெருவகையுற்று, உன் திருவடித்தாமரையை போற்றி - தேவரீருடைய திருவடிக் கமலங்களைத் துதித்து, விரை மலர் தூய் - பணமிக்க மலர்களால் அருச்சித்து, வந்தனை செய்கின்றான் என்றால் - வழிபடுகின்றாரென அறிஞர் விதப்பாராயின், விளங்கு இழையார் இருவரொடு - திகழும் ஆணிகளைப்பூணந்த தேவிமார் இருவரோடு, முயங்கல் ஆமோ - சேர்ந்து வாழ்வது தகுதியோ? (தகுதியன்றாயினும்), நின்னை உடையானுக்கு - உம்மை அடிமையாகவுடைய உமாபதிக்கு (சிவபெருமானுக்கு), அடுத்தசெயல் - உரிய செய்கை, உனக்கும் ஆயின் - உமக்கும் பொருந்துமானால், (அஃதுணர்ந்து வழிபடாது) நின்றனை - உம்மை, வெறுப்பது என் உரைமதி - வெறுப்பது என்னை? உரைப்பீராக! எ - று.

மதி - முன்னிலையசை.

பெருமிழலைக்குறும்பர் சுந்தரரை வழிபட்டே முத்தி எய்தினர். சுந்தரர் யோகியேயன்றிப் போகியன்று என்பதாம்.

"மலைமகளை யொருபாகம்" என்னும் திருவாசகமும் "மங்கையோடிருந்தே யோகுசெய்வானை" என்னும் திருவிசைப்பாவும் சிந்திக்கற்பாலன. (39)

நேரிசை யாசிரியப்பா

**செய்ய வார்சடைத் தெய்வ சிகாமணி**
**பாதம் போற்றும் வாதவூ ரன்ப**
**பாவெனப் படுவதுன் பாட்டுப்**
**"பூவெனப் படுவது பொறிவாழ் பூவே."**

இ - ள். செய்ய - சிவந்த, வார் சடை - நீண்ட சடைமுடியையுடைய, தெய்வசிகாமணி - தேவாதிபரது (சிவபெருமானது), பாதம் - திருவடிகளை, போற்றும் - வழிபடுகின்ற, வாதவூர் அன்ப - திருவாதவூரில் அவதரித்த அன்பரே!, பூ எனப்படுவது - பூவென்றுயாவரானும் உயர்த்திச் சொல்லப்படுவது, பொறி - திருமகள், வாழ் - வாழ்கின்ற (தங்கிய), பூவை - செந்தாமரை மலரேயாம்; (அதுபோல) பா எனப்படுவது - பாவென்று யாவரானும் பகரப்படுவது, உன்பாட்டு - நுமது திருப்பாடல்களேயாம். எ - று.

திருவாசகத்திற்கு நிகரானபாடல் வேறு இல்லையென்பதாம்.

**நால்வர் நான்மணிமாலை மூலமும் உரையும்.**

முற்றுப்பெற்றன.

# சந்தானகுரவர்மாலை

## 1. மெய்கண்டமாலை

பூவேபொற்பூவின்மணமேமணப்புதுப்பூங்கற்பகக்
காவேயெனதிருகண்ணேயென்கண்ணுட்கருமணியே
கோவேகுணக்குன்றமேயெனையாண்டசுகோதயமே
தேவேதிருவெண்ணெய்மெய்கண்டநாதமெய்த்தேசிகனே. (1)

மெய்வாய்கண்மூக்குச்செவிவழியேசெல்விடயமைந்தின்
ஐவாயகப்படுமீபோன்மடங்குமருவினையேற்கு
உய்வாய்மைகாட்டிவினைவீட்டியின்பமுறக்கருணை
செய்வாய்திருவெண்ணெய்மெய்கண்டநாதமெய்த்தேசிகனே. (2)

ஊனேயவ்வூனினுயிரேயுயிர்க்குயிரேயுணர்வே
வானேமறைப்பொருளேயருளேவடிவாகியவெங்
கோனேயெனதற்றியீா னினதாகவுங்கூட்டுவையோ
தேனேதிருவெண்ணெய்மெய்கண்டநாதமெய்த்தேசிகனே. (3)

பார்த்தவிடமெங்குநாயேற்குவேற்றுமுகப்படுமற்
றூர்த்தவறிவினர்நேபழும்வேம்பெனக்காமருளிற்
கூர்த்தமெய்வேடமுமப்படியேயென்கொடுமையிதைத்
தீர்த்தென்னையாண்டருள்மெய்கண்டநாதமெய்த்தேசிகனே. (4)

முற்பவம்வந்தவரலாறுமுற்றுமுடிந்ததற்பின்
உற்பவம்வந்தவரலாறுமோர்கிலனுண்மையென்னே
அற்புதவிக்ரகவானந்தரூபவருட்செல்வமே
சிற்பரசின்மயமெய்கண்டநாதமெய்த்தேசிகனே. (5)

உன்மத்தமாயைக்குமுன்னாகன்மமெனவுரைப்பார் -
சன்மத்தின்முன்னதுமாயையென்பார்கலங்காதருள்வாய்
தன்மத்தைமுன்னிட்டமூன்றுமுணருந்தபோதனர்க்குச்
சின்முத்திரையருண்மெய்கண்டநாதமெய்த்தேசிகனே. (6)

சுந்தரமானமுகத்தாமரையுஞ்சுரந்தவருள்
உந்தியபார்வையுஞ்சின்முத்திரைக்கையுமோங்குமின்பம்
தந்தருள்மேனியும்பாதாரவிந்தமுமாய்த்தமியேன்
சிந்தைகுடிகொண்டமெய்கண்டநாதமெய்த்தேசிகனே. (7)

ஆறுகிலேனென்கவலையெலாநினதஞ்செழுத்தைக்
கூறுகிலேனின்னருட்பெருக்கத்தைக்குறித்துணர்ந்துள்
ஊறுகிலேனின்னருளெனைக்காக்குமென்றுண்மையதாத்
தேறுகிலேன்வெண்ணெய்மெய்கண்டநாதமெய்த்தேசிகனே. (8)

அறிவாலறிதற்கடங்காதபேரொளியாகியெங்கும்
நிறைவாய்ப்பரமசுகமாகிநேயமிலாருளத்திற்
பிறிவாயடியருளத்தமுதாய்ப்பெரிதாகுமின்பச்
செறிவாந்திருவெண்ணெய்மெய்கண்டநாதமெய்த்தேசிகனே. (9)

கருவினையெய்தச்செயுமாணவத்துக்குங்காரணமாம்
இருவினைநின்றநிலைமைமற்றுண்மையெல்லாமொருசொற்
பொருளினதாகவமைத்தருண்ஞானப்பொருட்சுவையாய்த்
திருவெண்ணெய்மேவியமெய்கண்டநாதமெய்த்தேசிகனே. (10)

மெய்கண்டதேவர் திருவடி வாழ்க.

## 2. அருள்நந்திமாலை

திருவேயருட்கடலேசிவஞானச்செழுந்தருவே
மருவேமணமலரேநினையெய்துமெய்ம்மாண்பினர்தம்
பரிசேபெருஞ்செல்வமென்னத்துணிந்துபரவிநின்றே
தெரிவாலடைவதென்றோவருணந்திமெய்த்தேசிகனே. (1)

நீற்றைப்புனைபுமெய்யன்பாளர்நேயமிலவவன்று
கூற்றைக்குமைத்ததிருவடிக்கேயன்புகூடமெய்ம்மை
ஆற்றிற்புகவுரைக்குஞ்சித்திமார்க்கமணைபவெனைத்
தேற்றிக்கருணைசெய்வாயருணந்திமெய்த்தேசிகனே. (2)

கிரவியவெம்பாஞ்சராத்திரமாதியவிட்டுநின்று
கருதுசுபக்கநெறியேவிழைந்துகலந்தவன்பு
மருவியிறைவனடிக்கீழடங்கமரபுளிநின்
தெரிசனங்கிட்டுவதென்றோவருணந்தித்தேசிகனே. (3)

சசிசேகரனடிக்கன்புசெய்வாரைச்சரண்புகுந்து
கசியாமனங்கசிந்தேநின்றுருகிக்கயல்விழியார்
நசையேயொருவிநின்றண்மலர்ப்பாதநயப்பதென்றோ
திசையேத்துஞ்சீர்த்தியருணந்திஞானமெய்த்தேசிகனே. (4)

கருவிற்பிறந்துநின்றெய்த்தேனினதுகழன்மலரைப்
பரிவிற்கருதாதொழிந்தேன்மடவார்பயோதரமே
மருவிக்கழிந்தேனினைமேவவெண்ணிமதித்தறியேன்
திருவருணல்குவதென்றோவருணந்தித்தேசிகனே. (5)

பொய்கண்டகன்றபுனிதனெம்மானெம்பொருவருஞ்சீர்
மெய்கண்டதேவன்மலரடிக்காளெனமேவிநின்று
மைகண்டவாணனற்றொழுஞ்செல்வம்வழங்குநண்டாய்
செய்கண்டதென்துறையூரருணந்திமெய்த்தேசிகனே (6)

காண்டகுமாமணியைத்தொழிலாற்றக்கனகமன்றில்
தாண்டவஞ்செய்புநற்றெய்வசிகாமணிதண்ணருளே
பூண்டமெய்கண்டபிரானுனையாளற்புதமுணர்ந்தே
ஈதண்டிவந்தெய்தினனுலருணந்திமெய்த்தேசிகனே. (7)

சிவந்தனைமானுமொருதேவுஞ்சித்தியிற்செந்நெறிக்கே
அவந்தனைநீக்கியருள்செய்தநூலுமடைவினின்றென்று
உவந்தனைபோலுமுதவினையாவின்றொருமையினிற்
சிவந்தபங்கேருகத்தாளாயருணந்தித்தேசிகனே. (8)

திருவஞ்செழுத்தினின்முப்பொருளுண்மைதெரித்தனையான்
பொருவஞ்சனவிழியார்மயலெய்தியபுலனொழிந்தேன்
தருவன்சனனமெனினின்னடியவர்சார்பெனுமத்
திருவந்தனையருளாயருணந்திமெய்த்தேசிகனே. (9)

வாடுஞ்சிறுமருங்குற்பரவைக்கண்மடந்தையர்பால்
நீடுங்கலதியையுள்ளத்தடைத்துநின்னேயமொன்றி
ஓடென்றிருநிதியுள்ளுமெய்த்தொண்டரையுன்னியுன்னித்
தேடும்பரிசுதவாயருணந்திமெய்த்தேசிகனே. (10)

அருணந்திசிவம் திருவடி வாழ்க.

# 3. மறைஞானசம்பந்தமாலை

பதியேயருட்கற்பகமேமெய்ஞ்ஞானப்பரமசுகோ
ததியேயென்னுருயிர்க்கோருயிரேசெந்தமிழ்க்கொருநன்
நிதியேயென்றுன்னையடைவதல்லாலிந்தநீணிலத்தின்
மதியேன்பிறரை மறைஞானசம்பந்தமாமணியே. (1)

தாழ்த்துகிலார்முடிதாழ்நரகெய்துவர்தாபதராச்
சூழ்த்துகிலார்மலர்னுவடிவெய்திலர்தொல்புவியிற்
பாழ்த்தமனத்தேனினதடியாரைப்பரிந்தடைந்து
வாழ்த்துகிலேனெம்மறைஞானசம்பந்தமாமணியே. (2)

பரவேனெனினும்பணியேனெனினும்வெஞ்சமயில்
ஒருவேனெனினுநின்னன்பர்தங்கூட்டமுவந்தடைந்து
கருதேனெனினுமவர்நாமமேனுங்கருதிநிற்க
வரமேயருளுமறைஞானசம்பந்தமாமணியே. (3)

பழங்கணடைந்துபரதவித்தேங்குமென்பாவிநெஞ்சம்
அழுங்குந்துயரத்தழுந்தனன்றேநின்னடிபரசும்
பழங்குடியாரைப்பாவிநின்றேத்தும்பரிசதனை
வழங்குகண்டாயெம்மறைஞானசம்பந்தமாமணியே. (4)

அஞ்செழுத்துண்மையறிவித்தரனடிக்கன்பினரை
நெஞ்சிடத்துன்னநினைவளித்தாய்க்கிந்நிலவுலகிற்
பஞ்சுபடாப்பெரும்பாடெய்துவேனின்றுபாடறியேன்
வஞ்சர்தவிர்ந்துமறைஞானசம்பந்தமாமணியே. (5)

சிந்தையிலென்றன்சிரத்தினிலென்றென்றுஞ்சேரும்வகை
வந்தவளித்தமியேனைவராமன்மகிழ்ந்துதனைத்
தந்தவனீயென்றுணர்ந்திவண்பாடித்தருக்கிநிற்கு
மைந்தனையாளெம்மறைஞானசம்பந்தமாமணியே. (6)

அறவாணனேபொருளென்றாகமமறையாய்ந்துரைக்க
மறவேல்விழிமடவார்மயலாழ்ந்துமயங்குகின்றேன்
நறைமேனின்பொன்னடியென்முடிசூட்டியதன்மையென்று
மறவேனினியெம்மறைஞானசம்பந்தமாமணியே. (7)

மாவொன்றுகண்ணியர்மையலிற்சிக்கிமதிமயங்கிப்
பூவொன்றவரடிக்காட்படுவேனைப்புரிந்துமவர்க்
காவொன்றுகையமைத்தஞ்சேலென்றன்புகனிந்தடநீ
வாவென்றுரையெம்மறைஞானசம்மந்தமாமணியே. (8)

தெள்ளுணர்வோர்தொழுமெம்மோயெம்போல்வந்துசேவடியெ
உள்ளத்துஞ்சென்னியின்மேலுமிருத்தியுலப்பிலருள் [ன்
வெள்ளத்தழுத்தியென்னாவியொடாக்கைவெறுக்கைகொண்டால்
வள்ளலுநீகொண்மறைஞானசம்பந்தமாமணியே. (9)

போதவனுதியர்கேடரிதாயபுராணசுக
போதமளிப்பவென்போலுருக்கொண்டுபுரைதவிர்த்திட்
டோதருமின்னடிசூட்டியின்றாண்டனையொண்மலய
மாதவனேருமறைஞானசம்பந்தமாமணியே. (10)

## மறைஞானசம்பந்தர் திருவடி வாழ்க.

## 4. உமாபதிசிவமாலை

பார்சான்றவேதப்பனுவல்சொற்றான்பத்திரம்விடுப்பப்
பேர்சான்றபெற்றான்றனக்கின்பவீடுபெறப்புரிந்த
ஏர்சான்றநின்னருணீர்மையுணர்ந்துனையெய்தினனால்
சீர்சான்றகொற்றங்குடிவாழுமாபதித்தேசிகனே. (1)

பண்ணீர்மைத்தீஞ்சொல்செறிதூதுநெஞ்சைப்பிரிவின்விடுத்
தெண்ணீர்மைகுன்றாதெமையாண்டுகொண்டவியல்பதென்னே
உண்ணீர்மைமாறாப்பெரியாருரைக்குமுறைப்பயனே
தெண்ணீர்முடியானருளெய்துமாபதித்தேசிகனே. (2)

பல்சான்றவரும்பழிச்சுறுங்கோயிற்பரந்தபுகழ்
தொல்சார்பினோதித்துயரறுத்தாண்டசுகோதயமே
கல்சான்றநெஞ்சங்கரையேன்றனக்குன்கழற்புணையே
செல்சாரரனருளெய்துமுமாபதித்தேசிகனே. (3)

படிக்கணெல்லாப்பிறப்பும்பிறந்தெய்த்தலைன்பான்மொழிப்பைந்
தொடிக்கைநல்லார்தமயற்கடலாழ்ந்துதுயருறுகின்றேன்
கொடிக்கவிபாடியநின்குறிப்பொன்றுங்குறித்தறியேன்
செடிக்குடிலத்தேற்கருளாயுமாபதித்தேசிகனே. (4)

மறியார்கரத்தெம்பிரானருளான்மாநிலமுணரக்
குறியாவொருமுட்செடிக்குயர்வீடுகொடுத்தனைநின்
வெறியார்கழன்மலர்க்கன்பாளர்தம்மைவிரைந்தனையச்
சிறியன்றனக்கருள்வாயோவுமாபதித்தேசிகனே. (5)

முப்பொருளென்றுமனாதியென்றோதுமுறைமைதனைக்
கைப்பொருள்போலவிளக்கினைசார்பெனக்கட்டுரைக்கும்
மெய்ப்பொருணாவிலுனதருட்சீரைவிழைந்துநின்று
செப்புவதெப்படிகண்டாயுமாபதித்தேசிகனே. (6)

ஒருகுறளீரடியாலுறகன்றளந்தோங்கியதொத்து
ஒருகுறளாமவ்வருட்பயனேதியுலகளந்த
பெருகருணாடிமரபுளியெய்தினன்பிஞ்ஞகனார்
திருவருணடியதேவேயுமாபதித்தேசிகனே. (7)

பத்திக்கடற்பரப்பாந்தொண்டர்சீரைப்பரவுகிற்பார்
முத்திச்சரிதந்தனைவாய்மலர்ந்தருண்முன்னவவென்
சித்தத்துயரந்தனைப்போக்கியாள்செம்மறைப்பயனே
தித்திக்குஞ்செங்கரும்பேயெம்முமாபதித்தேசிகனே. (8)

எத்தேவருந்தொழுதேத்துநின்சந்நிதியெய்திமலப்
பித்தேயொழிந்துன்றிருநாமமந்திரம்பேசுவனே
சத்தேசிவாகமத்துச்சியிலேனுங்குந்தனியின்பமே
சித்தேகொற்றங்குடிவாழுமுமாபதித்தேசிகனே. (9)

கன்னலினின்சுவைபாணியினுப்பெனக்கட்டுரைக்கு
நன்னயமுத்திநலந்தனையான்பெறநல்குகண்டாய்
பொன்னிநன்னாடுசெய்பாக்கியமேயெம்புரைதவிர்க்குஞ்
செந்நெறியோர்தொழுதேத்துமுமாபதித்தேசிகனே. (10)

**உமாபதிசிவம் திருவடி வாழ்க.**

திருச்சிற்றம்பலம்.

